بسم الله الرحمن الرحيم

# اَلْفِقْهُ الْمُيَسَّرُ

فِي ضَوءِ الْكِتَابِ وَالسُّنَّةِ

تَأْلِيْفُ نُبْذَةٍ مِنَ الْعُلَمَاءِ حَفِظَهُمُ اللهُ

1ம் பாகம்

குர்ஆன், சுன்னா ஒளியில்

# இலகுவான மார்க்க சட்டம்

## كِتَابُ الطَّهَارَةِ

## தஹாரா - தூய்மை

அரபியில்:
அறிஞர்களின் குழு

தமிழில்:
குர்ஆன், சுன்னா பணியாளர்
உமர் ஷரீஃப் இப்னு அப்துஸ் ஸலாம்

DARUL HUDA

# உள்ளே...

# பதிப்புரை

பேரருளாளன் பேரன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...

அல்லாஹ்விற்கே எல்லாப் புகழும். அல்லாஹ்வின் தூதர் மீதும் அவர்களுடைய குடும்பத்தார் மற்றும் தோழர்கள் மீதும் ஸலவாத்தும் ஸலாமும் நிலவட்டும்.

அல்லாஹ்வின் அருளால் நீண்ட காலமாக இருந்த ஒரு விருப்பம் இப்போது நிறைவேறியது.

தாருல்ஹுதாவை பத்தொன்பது ஆண்டுகளுக்கு முன்பாக ஆரம்பிக்கும்போது இஸ்லாமிய ஃபிக்ஹ் சட்டங்கள் குறித்து ஆதாரப்பூர்வமான ஒரு நூலை எழுத வேண்டும் என்ற விருப்பம் எங்களுக்கு இருந்தது. அல்லாஹ் அந்த விருப்பத்தை இப்போது நிறைவேற்றி இந்நூல் வெளிவர உதவினான். அல்ஹம்து லில்லாஹ்!

இது, ஃபிக்ஹ் சட்ட நூலின் முதல் அத்தியாயமாகும். இது தூய்மை சம்பந்தமான சட்டங்களை உள்ளடக்கியதாகும். இன் ஷா அல்லாஹ் இதைத் தொடர்ந்து தொழுகை, ஸகாத், ஹஜ் இன்னும் மற்ற சட்டங்கள் தொடர்பான அத்தியாயங்கள் விரைவில் வெளிவர அல்லாஹ் உதவுவானாக!

இந்நூலில் ஏதேனும் குறைகள், பிழைகள் இருந்தால் எங்களுக்கு சுட்டிக் காட்டுங்கள்! அல்லாஹ் உங்களுக்கு நற்கூலி வழங்குவானாக!

இந்நூலை சரிபார்ப்பதிலும் வடிவமைப்பதிலும் உதவிய எங்கள் பணியாளர்கள், சகோதரர்கள் மற்றும் சகோதரிகள் அனைவருக்கும் அல்லாஹ் நற்கூலி வழங்குவானாக!

தாருல் ஹுதாவிற்கு உதவுகின்ற எல்லா சகோதர சகோதரிகளுக்கும் அல்லாஹ் தனது அருளையும் அன்பையும் அபிவிருத்தியையும் இம்மை மறுமை வெற்றியையும் வழங்குவானாக! ஆமீன்! ஆமீன்!

அல்லாஹ்வே! எங்களிடமிருந்து ஏற்றுக் கொள்வாயாக! எங்களை மன்னிப்பாயாக! நீதான் மகா கருணையாளன்! மகா மன்னிப்பாளன்!

குர்ஆன், ஹதீஸ் பணியாளன்
**உமர் ஷரீஃப் இப்னு அப்துல் ஸலாம்**

DARUL HUDA , CHENNAI - 1 | muftiomar@gmail.com | 044 25247866

# தாருல் ஹுதா - அறிமுகம்

எல்லாப் புகழும் அகிலங்களின் இறைவன் அல்லாஹ் ஒருவனுக்கே! இறையருளும் ஈடேற்றமும் நபி முஹம்மது ﷺ அவர்களுக்கும், அவர்களது குடும்பத்தார், தோழர்கள், அவர்களைப் பின்பற்றும் அனைவருக்கும் உண்டாகட்டும்.

இஸ்லாமியச் சகோதர சகோதரிகளே!

அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மதுல்லாஹி வபரகாதுஹு

தாருல் ஹுதா அறிமுகத்தின் வாயிலாக உங்களைச் சந்திப்பதில் பெரிதும் மகிழ்ச்சி அடைகிறோம். இதில் தாருல் ஹுதாவின் நோக்கத்தையும் அதன் பணிகளையும் விவரிப்பதுடன் அதன் இன்றைய தேவையையும் தங்கள் முன் சமர்ப்பிக்கிறோம்.

***அல்லாஹுதஆலா கூறுகிறான்: "இறை நம்பிக்கையுடைய ஆண்களும், இறை நம்பிக்கையுடைய பெண்களும் (தங்களுக்குள்) ஒருவருக்கொருவர் உறுதுணையாக இருக்கின்றனர். அவர்கள், (ஒருவர் மற்றவரை) நன்மை செய்யும்படித் தூண்டியும், பாவம் செய்யாது தடுத்தும், தொழுகையைக் கடைப்பிடித்து, (மார்க்க வரி) ஜகாத்து கொடுத்தும் வருவார்கள். அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதருக்கும் கட்டுப்பட்டு நடப்பார்கள். இத்தகையோருக்கு வெகு விரைவில் அல்லாஹ் அருள்புரிவான்..."***

***(அல்குர்ஆன் 9:71)***

***மேலும், அல்லாஹு தஆலா கூறுகிறான்: (நம்பிக்கையாளர்களே!) உங்களில் ஒரு கூட்டத்தார் மனிதர்களைச் சிறந்ததின் பக்கம் அழைத்து, நன்மையைச் செய்யும்படி ஏவி, பாவமான காரியங்களில் இருந்து அவர்களை விலக்கிக் கொண்டும் இருக்கட்டும். இத்தகையவர்கள்தாம் வெற்றியாளர்கள். (அல்குர்ஆன் 3:104)***

நபி ﷺ அவர்கள் கூறுகிறார்கள்: உங்களில் யாராவது ஒரு தவறைக் கண்டால் அதை தனது கரத்தால் மாற்றட்டும். அது இயலாவிட்டால் தனது நாவால் மாற்றட்டும். அதுவும் இயலாவிட்டால் உள்ளத்தால் (வெறுத்து விலகி விடட்டும்). இது ஈமானின் குறைந்தபட்ச அளவாகும். (ஸஹீஹுல் புகாரி)

மேலும் நபி ﷺ கூறுகிறார்கள்: இறைநம்பிக்கையாளர்கள் தங்களிடையே நேசங்கொள்வதற்கும், கருணை காட்டுவதற்கும், அன்பு செலுத்துவதற்கும் உதாரணம் ஓர் உடலைப் போல! உடலில் ஏதேனும் ஓர் உறுப்பு பாதிக்கப்பட்டால் அனைத்து உறுப்புகளும் காய்ச்சல் மற்றும் தூக்கமின்மையால் முறையிடுகின்றன. **(ஸஹீஹுல் புகாரி)**

இன்று நமது சமுதாயத்தில் சிறியோர் முதல் பெரியோர் வரை பெரும்பாலோர் சரியான மார்க்க ஞானத்திற்கும் முறையான வழிகாட்டலுக்கும் அதிகம் தேவையுள்ளவர்களாக இருப்பதைப் பார்க்கிறோம். ஆகவே, மேற்கூறப்பட்ட குர்ஆன் வசனங்கள் மற்றும் நபி மொழிகளுக்கிணங்க சமுதாய சீர்திருத்தப் பணியில் ஈடுபடுவது மார்க்கக் கடமை என்பதை உணர்ந்து, அல்குர்ஆன் மற்றும் நபி வழியின் அடிப்படையில் அந்த உயர்ந்த பணியை நிறைவேற்றி இறைப்பொருத்தத்தை அடைய வேண்டும் என்ற தூய எண்ணத்தில் தொடங்கப்பட்டதுதான் **தாருல் ஹுதா.**

## பணிகளும் தொண்டுகளும்:

### அழைத்தல்:

இதுவே இஸ்லாமின் அடிப்படையாகும். உலகில் இப்பணி இறைத் தூதர்கள் வாயிலாக நிலை நிறுத்தப்பட்டது. இறுதித் தூதர் முஹம்மது (ஸல்) அவர்களுக்குப் பின் அவர்களுடைய சமுதாயத்தினர் அனைவரின் மீதும் இப்பணி கடமையாக்கப்பட்டது. மேன்மைமிகு குர்ஆனும், சிறப்புமிகு நபி மொழியும் இதன் அவசியத்தை நமக்கு வலியுறுத்துகின்றன. இதற்கிணங்க இயன்ற அளவு அனைத்து வழிகளிலும் மனித சமுதாயத்திற்கு இஸ்லாமை அறிமுகப்படுத்துவதும், அதன் உயர்வுகளை விளங்கச் செய்வதும் தாருல் ஹுதாவின் தலையாயப் பணியாகும்.

### கற்பித்தல்:

இஸ்லாமை அறிய விரும்பும் சிறுவர்கள், வாலிபர்கள், முதியவர்கள், ஆண்கள், பெண்கள் என அனைவருக்கும் மேன்மைமிகு குர்ஆன், சிறப்புமிகு நபிமொழிகளை அவரவர் தகுதிக்கேற்ப கற்றுத் தருவது தாருல் ஹுதாவின் இரண்டாவது முக்கிய பணியாகும்.

### நூல் வெளியிடுதல்:

மேன்மைமிகு குர்ஆன், சிறப்புமிகு நபிமொழி இவ்விரண்டையும் அடிப்படையாகக் கொண்டு சமுதாயப் பேரறிஞர்களால் அரபி மொழியில் எழுதப்பட்ட நூல்களை தமிழிலும் ஏனைய உலக மொழிகளிலும் மொழியாக்கம் செய்து, அந்நூற்களைச் சலுகை விலையில் மக்களுக்கு வழங்குவது தாருல் ஹுதாவின் மூன்றாவது சிறப்புப் பணியாகும்.

**உதவுதல்:**

அல்லாஹுூ தஆலாவே அனைவரின் தேவைகள், துன்பங்கள் அனைத்தையும் நிவர்த்தி செய்பவன். மிகப்பெரிய வள்ளலாகிய அல்லாஹ் தன் சார்பாக உலகில் ஏழை, எளியோர், நலிந்தோர் ஆகியோரின் துயர் துடைக்கும் வள்ளல் பெருமக்களுக்கு பெரும் வெகுமதிகளை ஈருலகிலும் வழங்குவதாக வாக்களித்துள்ளான். பிறர் துன்பங்களில் பங்கெடுப்பது, பிறர் தேவைகளை நிறைவேற்ற இயன்றவரை உதவுவது முஸ்லிம்களுடைய அடிப்படைப் பண்புகளாகும். இவ்வுன்னதப் பணிக்காக **பைத்துல்மால்** (பொது நிதி) ஏற்பாடு செய்து இரக்கச் சிந்தையும், மார்க்கப்பற்றும் கொண்ட வள்ளல் பெருமக்களிடமிருந்து கடமையான, உபரியான தர்மங்களைப் பெற்று தேவையுடையோருக்கு உதவுதல் தாருல் ஹுூதாவின் நான்காவது பணியாகும்.

மேற்கூறிய பணிகளைத் தவிர, இஸ்லாம் முழுமையாக ஒவ்வொருவரின் வாழ்விலும் வரவேண்டும் என்பதற்காகவும், மனிதச் சமுதாயங்களுக்குள் நல்லுறவும், அன்பும், கருணையும், சமூக புரிந்துணர்வும் ஏற்பட வேண்டும் என்பதற்காகவும் இயன்றவரை அல்லாஹ்வுக்காக தொண்டாற்ற வேண்டும் என்பது தாருல் ஹுூதாவின் குறிக்கோளாகும்.

இப்பணிகள் அனைத்தும் தொய்வின்றி தொடர்ந்து சிறப்பாக, திறம்பட நடைபெறவும், அவற்றை அல்லாஹ் அங்கீகரிக்கவும் தாங்கள் துஆ செய்யும்படி அன்புடன் கேட்டுக் கொள்வதுடன் தங்களால் இயன்றவரை இப்பணிகளில் பங்கு பெறவும் அழைக்கிறோம்.

பேராற்றலுடைய அல்லாஹ்விடமே உதவி தேடுகிறோம்! அவனையே முன்னோக்கி நிற்கிறோம்!!

உங்களால் முடிந்த உதவிகளை அல்லாஹ்வின் பொருத்தம் நாடி தந்துதவுங்கள்.

> ***நன்மையான காரியங்களில் எவற்றை நீங்கள் உங்களுக்காக (மரணம் வருவதற்கு) முன்னதாகவே செய்து கொள்கிறீர்களோ அவற்றை அல்லாஹ்விடத்தில் மிகச் சிறந்ததாகவும், மகத்தான கூலியாகவும் பெற்றுக் கொள்வீர்கள். (அல்குர்ஆன் 73:20)***

அல்லாஹ் தங்களுக்கு நற்கூலி வழங்குவானாக!

---

# முன்னுரை

முதலாவதாக, இந்த முன்னுரையில் பின்வருகின்ற முக்கியமான குறிப்புகளை அறிந்து கொள்வோம்.

அ) மொழி ரீதியாகவும் துறை ரீதியாகவும் ஃபிக்ஹ் என்ற பதத்தின் பொருள்:

ஆ) ஃபிக்ஹ் உடைய அடிப்படையான மூல ஆதாரங்கள்.

இ) இதன் தலைப்பு. அதாவது, இதில் ஆய்வு செய்யப்படுகின்ற மைய கருப்பொருள்.

ஈ) இதன் பலன். அதாவது, இதை கற்பதால் நமக்கு கிடைக்கும் நன்மைகளும் பலன்களும்.

உ) இக்கல்வியின் சிறப்பு. அதாவது, இக்கல்விக்கு மார்க்கம் கூறியிருக்கின்ற சிறப்புகள்.

## அ) மொழி ரீதியாகவும் துறை ரீதியாகவும் ஃபிக்ஹ் என்ற பதத்தின் பொருள்:

மொழி ரீதியாக ஃபிக்ஹ் என்றால் அறிதல், புரிதல், விளங்குதல் என்று பொருள்படும்.

அல்குர்ஆனில் கூறப்பட்டுள்ள பின்வருகின்ற வசனத்தில் **فقه** என்ற இந்த பதம் புரிதல், விளங்குதல் என்ற பொருளில்தான் பயன்படுத்தப்பட்டுள்ளது.

مَا نَفْقَهُ كَثِيرًا مِمَّا تَقُولُ

நீர் கூறுவதில் அதிகமானதை நாங்கள் விளங்க மாட்டோம் (புரிய மாட்டோம்). (அல்குர்ஆன் 11:91)

மேலும், அல்குர்ஆனில் கூறப்பட்டுள்ள பின் வருகின்ற மற்றொரு வசனத்திலும் இந்த பதம் இந்த பொருளில்தான் பயன்படுத்தப்பட்டுள்ளது.

وَلَٰكِنْ لَا تَفْقَهُونَ تَسْبِيحَهُمْ

என்றாலும், நீங்கள் அவர்களின் (-வானம் மற்றும் பூமியில் உள்ள படைப்புகளின்) இறைத் துதிகளை (-அவர்கள் அல்லாஹ்வை எப்படி துதிக்கின்றார்கள் என்று) அறிய மாட்டீர்கள். (அல்குர்ஆன் 17:44)

துறை ரீதியாக ஃபிக்ஹ் என்றால், தெளிவான ஆதாரங்களில் இருந்து எடுக்கப்படுகின்ற செயல் சார்ந்த மார்க்க சட்டங்களை உள்ளடக்கிய கல்வியாகும். சில நேரங்களில் அந்த சட்டங்களுக்கும் “ஃபிக்ஹ்” என்று கூறப்படும்.

## ஆ) ஃபிக்ஹ் உடைய அடிப்படையான மூல ஆதாரங்கள்

1) **القرآن الكريم** - கண்ணியமிகு அல்குர்ஆன்

2) **السنة المطهرة** - தூய்மையான நபிவழி

3) **إجماع** - “இஜ்மாஃ” ஏகோபித்த முடிவு. (அதாவது, நபித்தோழர்கள் அல்லது அவர்களுடைய மாணவர்களின் ஏகோபித்த, ஒருங்கிணைந்த, ஒருமித்த முடிவாகும்.)

4) **قياس** - “கியாஸ்”

அரபி மொழியில் கியாஸ் என்றால், அளவிடுதல், மதிப்பிடுதல், கண்டுபிடித்தல் என்று பொருளாகும். ஃபிக்ஹ் துறையில் கியாஸ் என்றால், ஒரு குறிப்பிட்ட பிரச்சனைக்கு மார்க்கம் கூறியிருக்கின்ற சட்டத்தை வைத்து புதிய ஒரு பிரச்சனைக்கு தீர்வு காண்பதாகும்.

## இ) ஃபிக்ஹ் உடைய موضوع - ஆய்வுப் பொருள்[1]

அடியார்களில் **مكلف** - “முகல்லஃப்”[2] உடைய செயல்கள் அனைத்தையும் பற்றி பொதுவாக இந்தக் கல்வியில் ஆய்வு செய்யப்படும்.

1. எதைப் பற்றி இந்த கல்வியில் பேசப்படுமோ, ஆய்வு செய்யப்படுமோ அதை இங்கு ஆய்வுப் பொருள் என்று குறிப்பிடுகிறோம்.
2. அல்லாஹ்வின் சட்டத்தை ஏற்று நடக்க கடமைப்பட்டவர்களை முகல்லஃப் என்று கூறப்படும்.

மனிதன் தனது ரப்பு -இறைவனிடம் பேண வேண்டிய உறவுகள், மனிதன் தன்னை அதாவது, தனது உடல் இன்னும் ஆன்மாவை பேண வேண்டிய முறைகள், மனிதன் தனது சமுதாயத்திற்கு செய்ய வேண்டிய கடமைகள், அவர்களிடம் பேண வேண்டிய ஒழுக்கங்கள் என மனிதர்களின் உரிமைகளையும் அவர்கள் மீதுள்ள கடமைகளையும் பற்றி இந்த கல்வியில் ஆய்வு செய்யப்படும்.

இன்னும், அமல்களுக்குரிய (-மனிதனின் வெளிரங்கமான உறுப்புகளில் இருந்து வெளிப்படுகின்ற செயல்களுக்குரிய) சட்டங்களைப் பற்றியும் இந்த கல்வியில் பேசப்படும்.

மேலும், பேச்சுகள், செயல்கள், ஒப்பந்தங்கள், நடத்தைகள், என ஒரு முஸ்லிமிடமிருந்து வெளிவரக்கூடிய அனைத்து விஷயங்களின் சட்டங்களைப் பற்றியும் இந்த கல்வியில் விவாதிக்கப்படும். அவற்றுக்குரிய **حكم** - ஹுக்ம் தீர்ப்பு இந்த கல்வியில்தான் முடிவு செய்யப்படும்.

இந்த செயல் சார்ந்த சட்டங்கள் இரண்டு வகைப்படும்.

**முதலாவது: أحكام العبادات** - அஹ்காமுல் இபாதாத். அதாவது, தொழுகை, நோன்பு, ஹஜ், இன்னும் இவை போன்ற **عبادة** - "இபாதா" இறை வழிபாடுகள் உடைய சட்டங்கள்.

**இரண்டாவது: أحكام المعاملات** - அஹ்காமுல் முஆமலாத். அதாவது, ஒப்பந்தங்கள், நடத்தைகள், குற்றங்கள், தண்டனைகள், பொறுப்பு ஏற்பது, உத்திரவாதங்கள் கொடுப்பது ஆகியவற்றின் சட்டங்கள். மேலும், இவை அல்லாத மக்கள் தங்களுக்குள் ஏற்படுத்திக் கொள்கின்ற எல்லா வகையான பரிவர்த்தனைகளின் சட்டங்கள்.

இந்த இரண்டாவது வகை சட்டங்களை பின் வருகின்ற விஷயங்களில் சுருக்கி விட முடியும்.

1) **أحكام الأسرة** - அஹ்காமுல் உஸ்ரா. அதாவது, குடும்பவியல் சட்டங்கள். அதாவது, குடும்பம் உருவாகுவதில் இருந்து அதன் இறுதி வரை உள்ள சட்டங்கள்.

திருமணம், விவாகரத்து, பரம்பரை (வமிசாவளி), குடும்ப பராமரிப்பு செலவுகள், வாரிசுரிமைகள் இன்னும் இது போன்ற காரியங்களின் சட்டங்கள் எல்லாம் குடும்பவியல் சட்டங்களுக்குள் வரும்.

2) **أحكام المعاملات المالية -** அஹ்காமுல் முஆமலாத் அல்மாலிய்யா. அதாவது, பொருளாதார பரிவர்த்தனைகளுடைய சட்டங்கள், சமூகத்தினரின் தனிப்பட்ட உரிமைகள் தொடர்பான சட்டங்கள்.

அதாவது, தனிநபர் உடைய கொடுக்கல், வாங்கல், வியாபாரம், வாடகைக்கு விடுதல், (வாடகைக்கு எடுத்தல்,) கூட்டாக வணிகம் அல்லது தொழில் செய்தல் இன்னும் இது போன்ற பரிவர்த்தனைகள் தொடர்புடைய சட்டங்கள்.

3) **الأحكام الجنائية -** அல்அஹ்காமுல் ஜினாயிய்யா. குற்றவியல் சட்டங்கள். அதாவது, ஒரு முஸ்லிமிடம் இருந்து உருவாகின்ற குற்றங்கள், அத்துமீறிய நடவடிக்கைகள், அதற்காக அவன் பெற வேண்டிய தண்டனைகள் ஆகியவற்றுடன் தொடர்புடைய சட்டங்கள்.

4) **أحكام المرافعات والقضاء -** அஹ்காமுல் முராஃபஆத் வல் கழா. சர்ச்சைகள், தீர்ப்புகள் உடைய சட்டங்கள். அதாவது, சண்டை சச்சரவுகள், வழக்குகள், உரிமை கோருவதின் வழிமுறைகள் இன்னும் இது போன்ற காரியங்களில் நீதித்துறை பின்பற்ற வேண்டிய சட்டங்களாகும்.

5) **الأحكام الدولية -** அல்அஹ்காமுத் தவ்லிய்யா. சர்வதேச சட்டவிதிகள். அதாவது, மற்ற நாடுகளுடன் ஒரு முஸ்லிம் நாடு கடைபிடிக்க வேண்டிய தொடர்புகள், ஒரு நாட்டுடன் சமாதான ஒப்பந்தம் செய்வது, போர் செய்வது, ஜிஹாத் செய்வது, மற்ற நாடுகளுடன் பரஸ்பர உடன்படிக்கைகள் செய்வது சம்பந்தமான சட்டங்கள், இஸ்லாமிய நாட்டில் வாழ்கின்ற முஸ்லிமல்லாதோர் கடைபிடிக்க வேண்டிய சட்டங்கள் இதில் அடங்கும்.

### ஈ) இந்த ஃபிக்ஹ் - சட்டக் கல்வியின் பலன்

இக்கல்வியைக் கற்று அதன்படி செயல்படுவதால் அடியார்களின்

சீர்திருத்தமும் அவர்களுடைய வணக்க வழிபாடுகளின் சீர்த்திருத்தமும் அவர்களுடைய குணங்களின் சீர்திருத்தமும் ஏற்படுகின்றன.

ஓர் அடியான் சீர் பெற்றால் அவனுடைய சமுதாயம் சீர் பெற்றுவிடும். தனி நபர்களும் சமுதாயமும் சீர் பெற்று விட்டால் உலகத்தில் மகிழ்ச்சியும், வளமான வாழ்க்கையும் அமையும். மறுமையில் அல்லாஹ்வின் பொருத்தமும், அவனுடைய சொர்க்கமும் கிடைக்கும். இதுதான் இந்தக் கல்வியின் பலனாகும்.

### உ) மார்க்கத்தில் ஃபிக்ஹ் -சட்டக் கல்வியின் சிறப்பு, அதை கற்பதற்கு ஆர்வமூட்டுதல்

மார்க்கத்தில் கல்வி ஞானம் பெறுவது சிறந்த அமல்கள் மற்றும் மிக நல்ல பண்புகளில் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். குர்ஆன் மற்றும் சுன்னாவிலிருந்து பல ஆதாரங்கள் இதன் சிறப்பை உறுதி செய்வதுடன் இதை கற்க ஆர்வமும் ஊட்டுகின்றன.

அல்லாஹ் கூறுகின்றான்:

**فَلَوْلَا نَفَرَ مِنْ كُلِّ فِرْقَةٍ مِنْهُمْ طَائِفَةٌ لِيَتَفَقَّهُوا فِي الدِّينِ وَلِيُنْذِرُوا قَوْمَهُمْ إِذَا رَجَعُوا إِلَيْهِمْ لَعَلَّهُمْ يَحْذَرُونَ.**

மார்க்க விஷயங்களை அறிந்து கொள்ள உங்களில் ஒவ்வொரு கூட்டத்தில் இருந்தும் சிலர் மாத்திரம் புறப்பட்டால் போதாதா? (அவர்கள் மார்க்க விஷயத்தைக் கற்று) தங்கள் மக்களிடம் திரும்பி வந்து அவர்களுக்கு(த் தாங்கள் கற்றதை எடுத்துக்கூறி) அச்சமூட்டி எச்சரிக்கை செய்வார்கள். (ஊரில் இருப்பவர்கள்) எச்சரிக்கையாக இருந்து (தங்கள் மக்களைக் காத்துக்) கொள்வார்கள்.

(அல்குர்ஆன் 9:122)

இன்னும், நபி ﷺ கூறினார்கள்:

**مَنْ يُرِدْ اللَّهُ بِهِ خَيْرًا يُفَقِّهْهُ فِي الدِّينِ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ٧١**

அல்லாஹ் யாருக்கு நன்மையை நாடுகின்றானோ அவருக்கு மார்க்கத்தில் விளக்கத்தை (-ஞானத்தை, அறிவைத்) தருகின்றான்.[3]

நன்மைகள் அனைத்தும் மார்க்கக் கல்வி ஞானம் பெறுவதை சார்ந்தே இருப்பதாக நபி ﷺ அவர்கள் கூறினார்கள். இது அதன் முக்கியத்துவத்தையும் அதன் மகத்துவத்தையும் அதன் தகுதி உயர்ந்திருப்பதையும் சுட்டிக் காட்டுகிறது.

மேலும், நபி ﷺ கூறினார்கள்:

**النَّاسُ مَعَادِنُ خِيَارُهُمْ فِي الْجَاهِلِيَّةِ خِيَارُهُمْ فِي الْإِسْلَامِ إِذَا فَقُهُوا رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ٣٣٨٣**

மக்கள் கனிமங்கள் (சுரங்க பொருள்கள்) ஆவார்கள். ஜாஹிலிய்யா காலத்தில் அவர்களில் சிறந்தவர்களாக இருந்தவர்கள் மார்க்க ஞானத்தை பெற்றுக் கொண்டால் இஸ்லாமிலும் அவர்களில் சிறந்தவர்களாக இருப்பார்கள்.[4]

ஆகவே, மார்க்க சட்டங்களை கற்பதின் அந்தஸ்து மிக மகத்தானதாகும். ஏனெனில், முஸ்லிம் தனது மார்க்கத்தில் ஞானம் பெற்று, தனக்குள்ள உரிமைகளையும் தன் மீதுள்ள கடமைகளையும் தான் செய்ய வேண்டியதையும் செய்யக்கூடாததையும் அறிந்து கொண்டால், அவரால் தனது ரப்பை கல்வியுடனும் தெளிவான ஆதாரத்துடனும் வணங்க முடியும். மேலும், இவ்வுலகிலும் மறுமையிலும் நன்மையையும் நற்பாக்கியத்தையும் பெறுவதற்கு அவர் தகுதி உடையவராக இருப்பார்.

------------------

3. அறிவிப்பாளர்: முஆவியா ﷺ நூல்: புகாரி, எண்: 71
4. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﷺ நூல்: புகாரி, எண்: 3383

DARUL HUDA , CHENNAI - 1 | muftiomar@gmail.com | 044 25247866

# كتاب الطهارة

## தஹாரா - தூய்மை

இதில் பத்து பாடங்கள் உள்ளன.

# தூய்மை மற்றும் தண்ணீர் உடைய சட்டங்கள்

இந்த பாடத்தில் பல சட்ட விளக்கங்கள் உள்ளன.

**المسألة الأولى - முதல் சட்ட விளக்கம்:**

தூய்மையின் வரையறை, அதன் முக்கியத்துவத்தின் விளக்கம், அதன் வகைகளின் விளக்கம்.

**தூய்மையின் முக்கியத்துவம்:** தொழுகையின் திறவுகோல் மற்றும் தொழுகையின் நிபந்தனைகளில் மிகவும் உறுதியான ஒரு நிபந்தனை தூய்மை ஆகும்.

**ஷர்த் - நிபந்தனை:** நிபந்தனை என்றால், அது எந்த காரியத்திற்கு உரியதோ அந்த காரியத்தை அது எப்போதும் முந்தி இருக்க வேண்டும். ஆகவே, தொழுகைக்கு முன் தூய்மை கண்டிப்பாக இருக்க வேண்டும்.

**தூய்மை இரு வகைப்படும்**

**முதல் வகை: طهارة معنوية** - ஆன்மீகத் தூய்மை ஆகும். அதாவது, ஷிர்க் - இணைவைத்தல், பெரும்பாவங்கள், இன்னும் உள்ளத்தில் கறையை ஏற்படுத்துகின்ற எல்லா விஷயங்களை விட்டும் உள்ளம் தூய்மையாக இருப்பதை ஆன்மீகத் தூய்மை என்று கூறப்படும். உடலுடைய தூய்மையைவிட உள்ளத்தின் தூய்மை மிக முக்கியமானதாகும்.

ஷிர்க் - இணைவைத்தல் என்ற அசுத்தம் உள்ளத்தில்

இருக்கின்ற நிலையில் உடல் (அல்லாஹ்வை வணங்குவதற்குரிய) சுத்தத்தை அடைவது சாத்தியமாகாது.

ஆதாரம்:

அல்லாஹ் கூறுகின்றான்:

إِنَّمَا الْمُشْرِكُونَ نَجَسٌ

இணைவைப்பவர்கள் எல்லாம் அசுத்தமானவர்களே!

(அல்குர்ஆன் 9:28)

**இரண்டாவது வகை: طهارة حسية** - வெளிப்படையான தூய்மை ஆகும். இதைப் பற்றிய விளக்கங்களை பின்வருகின்ற வரிகளில் பார்ப்போம்.

தஹாரா - தூய்மையின் **تعريف** - வரையறை: அசுத்தமான, அருவருப்பான அனைத்தையும் விட்டு நீங்கி சுத்தமாகுதல் என்பது அகராதியில் இதன் பொருளாகும்.

**حدث** - ஹதஸ் - தொடக்குகளை நீக்குவது மற்றும் **خَبَث** - கபஸ் அசுத்தத்தை அகற்றுவதற்கு தஹாரா என்று இந்த ஃபிக்ஹ் கல்வியின் வழக்கத்தில் கூறப்படும்.

### ஹதஸ் - தொடக்கு என்றால் என்ன?

மனிதன் இறை வழிபாடுகளில் குறிப்பிட்ட சிலவற்றை செய்ய முடியாத நிலைக்கு ஆளாகுவதை ஹதஸ் என்று கூறப்படும். அந்த ஹதஸை விட்டு மார்க்கம் கூறியிருக்கின்ற முறையில் தூய்மை அடையாமல் குறிப்பிட்ட வழிபாடுகளை நாம் செய்ய முடியாது.

### ஹதஸ் இரு வகைப்படும்:

ஒன்று: **حدث أكبر** - ஹதஸ் அக்பர் பெருந்தொடக்கு. மற்றொன்று, **حدث أصغر** - ஹதஸ் அஸ்கர் சிறு தொடக்கு.

'ஹதஸ் அக்பர்' ஐ விட்டு தூய்மை பெறுவதற்கு உடல் முழுக்க குளிக்க வேண்டும். 'ஹதஸ் அஸ்கர்' ஐ விட்டு தூய்மை பெறுவதற்கு உளூ செய்ய வேண்டும்.

சிறிய, பெரிய இரண்டு ஹதஸ்களிலும் தண்ணீரை பயன்படுத்த முடியாத இக்கட்டான நிலை ஏற்பட்டால் அல்லது ஹதஸை நீக்குவதற்கு தண்ணீர் கிடைக்கவில்லை என்றால் **تيمم** - 'தயம்மும்' செய்ய வேண்டும். தயம்மும் பற்றிய விளக்கம் அதற்குரிய பாடத்தில் இன் ஷா அல்லாஹ் வரும்.

**خَبَث** - கபஸ் அசுத்தத்தை அகற்றுவது என்றால் உடல், உடை, இடம் ஆகியவற்றில் இருந்து (மார்க்கம் எதை அசுத்தம் என்று கூறியதோ அந்த) அசுத்தத்தை அகற்றுவதாகும்.

ஆகவே, **طهارة حسية** - வெளிப்படையான தூய்மை இரு வகைப்படும். ஒன்று **حدث** - ஹதசை நீக்கி தூய்மை ஆகுவது. இந்த வகை தூய்மை வெறும் உடலுடன் மட்டும் உள்ளதாகும். இரண்டாவது **خَبَث** - கபசை நீக்கி தூய்மை ஆகுவது. இது உடல், உடை, மற்றும் இடத்துடன் சம்பந்தப்பட்ட தூய்மை ஆகும்.

**خَبَث - கபஸ் மூன்று வகைப்படும்:** முதலாவது வகை, அதை கழுவி சுத்தம் செய்ய வேண்டும். இரண்டாவது வகை, அதன் மீது தண்ணீரை தெளித்து சுத்தம் செய்ய வேண்டும். மூன்றாவது வகை, அதை துடைத்து சுத்தம் செய்ய வேண்டும்.

**المسألة الثانية - இரண்டாவது சட்ட விளக்கம்:**

தண்ணீர் - இதன் மூலம்தான் தூய்மை ஏற்படும்.

சுத்தம் செய்வதற்கும் அசுத்தம் மற்றும் தொடக்கை நீக்குவதற்கும் தேவையான ஒன்று தண்ணீர்தான்.

அந்தத் தண்ணீர் அதன் இயற்கைத் தன்மை மாறாமல் அப்படியே இருக்க வேண்டும்.

இந்த தண்ணீருக்கு சுத்தம் செய்யக்கூடிய தண்ணீர் **الماء الطهور** - அல்மாவுத் தஹூர் என்று கூறப்படும். இந்த வகை தண்ணீர் தானும் சுத்தமாக இருப்பதுடன் மற்ற பொருளையும் சுத்தப்படுத்தக் கூடியதாக இருக்கும்.

இத்தகைய தண்ணீரின் வகைகள் பின்வருமாறு:

1) மழை நீர்

2) பனிக்கட்டிகளில் இருந்து கரைந்து வருகின்ற நீர்

3) ஆலங்கட்டியில் இருந்து உருகி வருகின்ற நீர்

4) நதிகளின் நீர்

5) ஊற்றுகளில் இருந்து வெளியாகும் நீர்

6) கடல் நீர்

7) குளம், ஏரிகளில் தேங்கி இருக்கின்ற நீர்

ஆதாரம்:

அல்லாஹ் கூறுகின்றான்:

وَيُنَزِّلُ عَلَيْكُمْ مِنَ السَّمَاءِ مَاءً لِيُطَهِّرَكُمْ بِهِ

அவன் வானத்தில் இருந்து உங்களுக்கு நீரை இறக்குகின்றான், அதன் மூலம் உங்களை சுத்தப்படுத்துவதற்காக. (அல்குர்ஆன் 8:11)

وَأَنْزَلْنَا مِنَ السَّمَاءِ مَاءً طَهُورًا

நாம்தான் மேகத்தில் இருந்து மிக சுத்தமான நீரை இறக்கினோம். (அல்குர்ஆன் 25:48)

நபி ﷺ கூறினார்கள்:

اَللّٰهُمَّ اغْسِلْنِي مِنْ خَطَايَايَ بِالْمَاءِ وَالثَّلْجِ وَالْبَرَدِ رواه النسائي برقم ٨٩٥

அல்லாஹ்வே! என்னை என் பாவத்திலிருந்து தண்ணீராலும் பனிக் கட்டியாலும் ஆலங்கட்டியாலும் கழுவுவாயாக![5]

கடலைப் பற்றி நபி ﷺ கூறினார்கள்:

5. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்: நசாயி, எண்: 895

هُوَ الطَّهُورُ مَاؤُهُ الْحِلُّ مَيْتَتُهُ

அது, (-கடல்) அதன் நீர் மிக சுத்தமானதாகும், அதில் இறந்தவையும் (உண்பதற்கு) ஆகுமானதாகும்.[6]

தண்ணீரைப் போன்று இருக்கக்கூடிய தண்ணீர் அல்லாத மற்ற திரவங்கள் மூலமாக சுத்தம் உண்டாகாது. உதாரணமாக: சிர்கா, பெட்ரோல், மண்ணெண்ணெய், பழச்சாறுகள், எழுமிச்சை சாறு, இன்னும் இவைப் போன்ற எதுவும் அது சுத்தமானதாக இருந்தாலும் கபசை அல்லது ஹதசை சுத்தப்படுத்துவதற்கு அதைப் பயன்படுத்த முடியாது.

ஆதாரம்:

அல்லாஹ் கூறுகின்றான்:

فَلَمْ تَجِدُوا مَاءً فَتَيَمَّمُوا صَعِيدًا طَيِّبًا

நீங்கள் தண்ணீரைப் பெறவில்லை என்றால், (சுத்தம் செய்வதற்கு) தூய்மையான மண்ணை நாடுங்கள். (அல்குர்ஆன் 5:6)

தண்ணீர் இல்லாத நேரத்தில் வேறு திரவங்களால் சுத்தம் செய்ய முடியும் என்று இருந்தால் அல்லாஹ் அதை இங்கு கூறி இருப்பான், மண்ணை நாடுங்கள் என்று கூறி இருக்க மாட்டான்.

**المسألة الثالثة - மூன்றாவது சட்ட விளக்கம்**:

## அசுத்தம் கலந்த தண்ணீருடைய சட்டம்

தண்ணீரில் ஏதாவது அசுத்தம் கலந்து, தண்ணீருடைய நிறத்தை, அல்லது ருசியை, அல்லது வாடையை மாற்றி விட்டால் அந்த தண்ணீர் பயன்படுத்தப்படுவதற்கு ஆகுமாகாத, அசுத்தமான தண்ணீராக ஆகிவிடும். இந்த தண்ணீரைக் கொண்டு ஹதசை - சிறு தொடக்கை, பெருந் தொடக்கை நீக்க முடியாது. இன்னும் கபசை - அசுத்தத்தை நீக்குவதற்கு இந்த தண்ணீரை பயன்படுத்த முடியாது. இதுதான் அறிஞர்களின் ஒருமித்த கருத்தாகும். தண்ணீரின் அளவு குறைவாக அல்லது அதிகமாக இருந்தாலும் இதுதான் சட்டம். தண்ணீரின் நிறம்,

6. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﷺ, நூல்: அபூ தாவூத், எண்: 83.

ருசி, வாடை ஆகிய மூன்று தன்மைகளில் ஒன்று மாறினாலும் அந்த தண்ணீர் பயன்பாட்டிற்கு தகுதி அற்றதாக ஆகிவிடும்.

தண்ணீரின் அளவு அதிகமாக இருந்து, அதில் கலந்த அசுத்தம் தண்ணீரின் தன்மையை மாற்றவில்லை என்றால் அந்த தண்ணீர் அசுத்தமானதாக ஆகாது. அந்த தண்ணீரைக் கொண்டு தஹாரா - சுத்தம் செய்யலாம்.

தண்ணீரின் அளவு குறைவாக இருந்து, அசுத்தம் அதில் கலந்துவிட்டால் அந்த தண்ணீர் அசுத்தமானதாக ஆகிவிடும். அந்த தண்ணீரை தஹாராவிற்கு பயன்படுத்த முடியாது.

அதிகமான தண்ணீரின் அளவு:

இரண்டு **قلة** - குல்லத் அல்லது அதைவிட அதிகமான அளவுள்ள தண்ணீரை நாம் அதிகமான தண்ணீர் என்று கூறுகிறோம். இந்த அளவைவிட குறைவாக உள்ள தண்ணீரை குறைவான தண்ணீர் என்று கூறுகிறோம்.

குல்லத் (**قلة**) என்றால் பானைக்கு சொல்லப்படும். இதன் பன்மை குலல் (**قلل**), கிலால் (**قلال**) ஆகும். இன்றைய லிட்டர் அளவின் படி இரண்டு குல்லத் என்பது 160.5 நூற்றி அறுபது லிட்டரும் அரை லிட்டரும் ஆகும்.

ஆதாரம்:

நபி ﷺ கூறினார்கள்

**إِذَا كَانَ الْمَاءُ قُلَّتَيْنِ فَإِنَّهُ لَا يَنْجُسُ رواه أبو داود برقم ٦٥**

தண்ணீர் இரண்டு குல்லத் அளவு இருந்தால் அது அசுத்தமாகாது.[7]

**المسألة الرابعة - நான்காவது சட்ட விளக்கம்**

## தண்ணீரில் சுத்தமான ஒரு பொருள் கலந்தால்...

தண்ணீரில் சுத்தமான ஒரு (திடப்பொருள் அல்லது சுத்தமான ஒரு திரவப்) பொருள் கலந்துவிட்டால், கலந்த அந்தப் பொருள் அதில்

7. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு உமர் ﵄, நூல்: அபூ தாவூத், எண்: 65

தண்ணீரைவிட அதிகமாக இல்லாமல் குறைவாக இருந்தால் அந்த தண்ணீர் கெட்டு விடாது. அது சுத்தமானதாகவே இருக்கும். தஹாரா - சுத்தம் செய்வதற்கு அதை பயன்படுத்துவது கூடும்.

மரத்தின் இலைகள், சோப்பு, இலந்தை இலை, ஷாம்பு இன்னும் இவை போன்ற சுத்தமான வஸ்துகள் தண்ணீரில் கலந்துவிடுவதால் அந்த தண்ணீர் கெட்டு விடாது. நாம் சுத்தம் செய்வதற்கு தகுதியானதாகவே அந்தத் தண்ணீர் இருக்கும். ஹதசில் இருந்து சுத்தம் செய்வதற்கும் அதை பயன்படுத்தலாம். **نجاسة** - நஜாசத் அசுத்தத்தை அகற்றுவதற்கும் அதை பயன்படுத்தலாம்.

ஆதாரம்:

**وَإِنْ كُنْتُمْ مَرْضَى أَوْ عَلَى سَفَرٍ أَوْ جَاءَ أَحَدٌ مِنْكُمْ مِنَ الْغَائِطِ أَوْ لَامَسْتُمُ النِّسَاءَ فَلَمْ تَجِدُوا مَاءً فَتَيَمَّمُوا صَعِيدًا طَيِّبًا فَامْسَحُوا بِوُجُوهِكُمْ وَأَيْدِيكُمْ**

நீங்கள் நோயாளிகளாகவோ, பிரயாணத்திலோ, மலஜல உபாதைக் கழித்தோ, பெண்களைத் தீண்டி(ச் சேர்ந்து) இருந்தோ, (பிறகு, சுத்தம் செய்து கொள்ள) நீங்கள் தண்ணீரையும் பெற்றுக் கொள்ளாத சமயத்தில் (தொழுகையின் நேரம் வந்துவிடுமேயானால் அதற்காக நீங்கள் தொழுகையைப் பிற்படுத்த வேண்டியதில்லை.) சுத்தமான மண்ணைத் தொட்டு உங்கள் முகங்களையும் உங்கள் கைகளையும் துடைத்து “தயம்மும்” செய்து கொள்ளுங்கள். (பிறகு, தொழுங்கள்.)

(அல்குர்ஆன் 4:43)

இந்த வசனத்தில் **ماء** - மாஅன் என்று பொதுவான வார்த்தையாக அல்லாஹ் கூறுகின்றான். ஆகவே, இந்த பதம் கலக்கப்படாத தண்ணீரையும் கலக்கப்பட்ட தண்ணீரையும் குறிக்கும்.

இதற்கு விளக்கமாகவும் ஆதாரமாகவும் நபி ﷺ அவர்களின் ஒரு வழிகாட்டலை பார்க்கிறோம்.

ஆதாரம்:

DARUL HUDA , CHENNAI - 1 | muftiomar@gmail.com | 044 25247866

**عَنْ أُمِّ عَطِيَّةَ الْأَنْصَارِيَّةِ ﵂ قَالَتْ دَخَلَ عَلَيْنَا رَسُولُ اللهِ ﷺ حِينَ تُوُفِّيَتْ ابْنَتُهُ فَقَالَ اغْسِلْنَهَا ثَلَاثًا أَوْ خَمْسًا أَوْ أَكْثَرَ مِنْ ذَلِكَ إِنْ رَأَيْتُنَّ ذَلِكَ بِمَاءٍ وَسِدْرٍ وَاجْعَلْنَ فِي الْآخِرَةِ كَافُورًا رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١١٧٥**

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களுடைய மகளார் மரணித்தபோது (நாங்கள் அவரை குளிப்பாட்ட தயாராக இருந்த நிலையில் நபி ﷺ) அவர்கள் எங்களிடம் வந்தார்கள். பிறகு, (எங்களுக்கு) கூறினார்கள்: நீங்கள் அவரை மூன்று முறை அல்லது ஐந்து முறை அல்லது, நீங்கள் கருதினால் அதைவிட அதிகமாக இலந்தை இலை கலந்த தண்ணீரால் குளிப்பாட்டுங்கள். இறுதியாக குளிப்பாட்டும்போது கற்பூரத்தை வையுங்கள்.[8]

**ஐந்தாவது சட்ட விளக்கம்:**

## பயன்படுத்தப்பட்ட தண்ணீருடைய சட்டம்

ஒருவர் கடமையான குளிப்பு குளிக்கும்போது அல்லது உளூ செய்யும்போது உறுப்புகளில் இருந்து விழக்கூடிய நீர் அசுத்தமானதல்ல. அது சுத்தமானதும் சுத்தப்படுத்தக்கூடியதும் ஆகும். மீண்டும் சுத்தம் செய்வதற்கு அதை பயன்படுத்துவது கூடும். ஹதசையும் **نجس** - நஜிசையும் (-வெளிரங்கமான அசுத்தத்தையும்) நீக்குவதற்கு அதை பயன்படுத்தலாம். தண்ணீருடைய மூன்று தன்மைகளில் ஒன்று மாறாமல் இருக்கின்றவரை அந்தத் தண்ணீரை தஹாராவிற்கு பயன்படுத்துவது கூடும்.

ஆதாரம்:

**وَإِذَا تَوَضَّأَ النَّبِيُّ ﷺ وَسَلَّمَ كَادُوا يَقْتَتِلُونَ عَلَى وَضُوئِهِ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٨٢**

நபி ﷺ அவர்கள் உளூ செய்தால் அவர்களுடைய உளூவின் தண்ணீரை எடுக்க (தோழர்கள்) சண்டையிடு(ம்) அளவிற்கு போட்டி போடு)வார்கள்.[9]

---

8. அறிவிப்பாளர்: உம்மு அத்தியா ﵂, நூல்: புகாரி, எண்: 1175
9. அறிவிப்பாளர்: மிஸ்வர் ﵁, நூல்: புகாரி, எண்: 182

கருத்து: உளூ செய்யப்பட்ட தண்ணீர் அசுத்தமானதாக மாறி இருந்தால் நபி ﷺ அவர்கள் இத்தகைய செயலை தவிர்க்கும்படி கூறியிருப்பார்கள்.

ஆதாரம்:

**عَنْ مُحَمَّدِ بْنِ الْمُنْكَدِرِ رحمه الله قَالَ سَمِعْتُ جَابِرًا رضي الله عنه يَقُولُ جَاءَ رَسُولُ اللهِ ﷺ يَعُودُنِي وَأَنَا مَرِيضٌ لَا أَعْقِلُ فَتَوَضَّأَ وَصَبَّ عَلَيَّ مِنْ وَضُوئِهِ فَعَقَلْتُ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٨٧**

“நான் நோயாளியாக, எதையும் புரிய முடியாமல் இருந்தபோது என்னை நலம் விசாரிப்பதற்கு ரஸூலுல்லாஹி ﷺ அவர்கள் வந்தார்கள். அவர்கள் உளூ செய்துவிட்டு அவர்களுடைய உளூவின் தண்ணீரை என் மீது ஊற்றினார்கள். நான் (உணர்வு பெற்று) தெளிவடைந்தேன்” என்று ஜாபிர் رضي الله عنه கூறியதை நான் செவியுற்றேன் என முஹம்மது இப்னு அல்முன்கதிர் رحمه الله அறிவிக்கிறார்கள்.[10]

**கருத்து:** உளூ செய்து வடிந்த நீர் அசுத்தமானதாக மாறியிருந்தால் அதை நபி ﷺ அவர்கள் ஜாபிர் رضي الله عنه அவர்கள் மீது ஊற்றியிருக்க மாட்டார்கள்.

நபி ﷺ அவர்கள், நபித்தோழர்கள், மற்றும் அக்கால பெண்கள் சிறு பாத்திரங்களுக்குள் கை விட்டு உளூ செய்வார்கள். இன்னும் கொஞ்சம் பெரிய பாத்திரங்களில் அள்ளிக் குளிப்பார்கள். அந்த நேரங்களில் உளூவின் தண்ணீர் இன்னும் குளிப்பின் தண்ணீர் அந்தப் பாத்திரங்களில் தெறிக்காமல் இருக்காது. உடலில் இருந்த தண்ணீர் வடிந்து அந்த பாத்திரங்களில் கண்டிப்பாக விழும். தெறிக்கின்ற தண்ணீரும் வடிந்து விழுகின்ற தண்ணீரும் அசுத்தமானதாக இருந்திருந்தால் அந்த தண்ணீர் விழுந்த பாத்திரத்தில் உள்ள தண்ணீரை பயன்படுத்துவது கூடாது என்று ஆகி இருக்கும்.

ஆதாரம்:

10. நூல்: புகாரி, எண்: 187

DARUL HUDA , CHENNAI - 1 | muftiomar@gmail.com | 044 25247866

**عَنْ أَبِي هُرَيْرَةَ رضي الله عنه قَالَ لَقِيَنِي رَسُولُ اللهِ ﷺ وَأَنَا جُنُبٌ فَأَخَذَ بِيَدِي فَمَشَيْتُ مَعَهُ حَتَّى قَعَدَ فَانْسَلَلْتُ فَأَتَيْتُ الرَّحْلَ فَاغْتَسَلْتُ ثُمَّ جِئْتُ وَهُوَ قَاعِدٌ فَقَالَ أَيْنَ كُنْتَ يَا أَبَا هِرٍّ فَقُلْتُ لَهُ فَقَالَ سُبْحَانَ اللهِ يَا أَبَا هِرٍّ إِنَّ الْمُؤْمِنَ لَا يَنْجُسُ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ٢٧٦**

அபூ ஹுரைரா رضي الله عنه கூறுகிறார்கள்: நான் **جُنُب** – 'ஜுனுப்' பெருந் தொடக்குள்ளவனாக இருந்தபோது ரஸூலுல்லாஹ் ﷺ என்னை சந்தித்தார்கள். அவர்கள் என் கரத்தை பிடித்தார்கள். ஆகவே, நான் அவர்களுடன் நடந்து சென்றேன். இறுதியாக அவர்கள் (ஓர் இடத்தில்) அமர்ந்தார்கள். நான் நழுவிச் சென்று (எனது) தங்குமிடம் வந்து குளித்துவிட்டு, பிறகு (நபி ﷺ அவர்கள் இருந்த இடத்திற்கு) வந்தேன். அவர்கள் (அங்கேயே) அமர்ந்து இருந்தார்கள். அபூ ஹிர்ரே! எங்கே (சென்று) இருந்தீர் என்று கேட்டார்கள். நான் (நடந்ததை) கூறினேன். அவர்கள் கூறினார்கள்: ஸுப்ஹானல்லாஹ், அபூ ஹிர்ரே! நிச்சயமாக முஃமின் (-நம்பிக்கையாளர்) அசுத்தமாக மாட்டார்.[11]

கருத்து: குளிப்பு கடமையாகிய நிலையில் இருந்தும் ஒரு முஃமின் அசுத்தமடையாதபோது அவரின் உடம்பில் இருந்து வழிகின்ற தண்ணீர் அசுத்தமாகாது என்றும் பிற பொருளை சுத்தப்படுத்தக்கூடிய தன்மையை அது இழந்து விடாது என்றும் அறிய முடிகிறது.

**ஆறாவது சட்ட விளக்கம்:**

## மனிதர்கள் மற்றும் கால் நடைகளின் எச்சில் பட்ட தண்ணீர்

மனிதன் சுத்தமானவன். ஆகவே, அவனுடைய எச்சில்பட்ட தண்ணீரும் சுத்தமாகவே இருக்கும். அவன் முஸ்லிமாக இருந்தாலும் அல்லது முஸ்லிமாக இல்லையென்றாலும் சரியே. அவ்வாறே, பெருந்தொடக்குள்ளவர், மாதவிடாய் உள்ள பெண், பிரசவ தொடக்குள்ள

11. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா رضي الله عنه, நூல்: புகாரி, எண்: 276

பெண் ஆகியோருடைய எச்சில் தண்ணீரும் சுத்தமானதுதான்.

முஃமின் -நம்பிக்கையாளர் அசுத்தமாக மாட்டார் என்ற நபிமொழியை சற்று முன் நாம் பார்த்தோம்.

ஆகவே, அவருடைய வாய் ஒரு பாத்திரத்தில் படுவதால் அந்த பாத்திரத்தில் உள்ள தண்ணீர் அசுத்தமாகி விடாது.

ஆதாரம்:

**عَنْ عَائِشَةَ ﵂ قَالَتْ كُنْتُ أَشْرَبُ وَأَنَا حَائِضٌ ثُمَّ أُنَاوِلُهُ النَّبِيَّ ﷺ فَيَضَعُ فَاهُ عَلَى مَوْضِعِ فِيَّ فَيَشْرَب رواه مسلم برقم ٤٥٣**

ஆயிஷா ﵂ கூறுகிறார்கள்: நான் மாதவிடாய் உள்ளவளாக இருக்கும் போது (தண்ணீர்) குடித்து விட்டு பிறகு அதை நபி ﷺ அவர்களுக்கு கொடுப்பேன். அவர்கள் நான் வாய் வைத்த அதே இடத்தில் தனது வாயை வைத்து குடிப்பார்கள்.[12]

கால்நடைகள் மற்றும் பறவைகளில் நாம் எதனுடைய மாமிசத்தை சாப்பிடுகிறோமோ அதனுடைய எச்சில்பட்ட தண்ணீரும் சுத்தமானதுதான் என்பதில் அறிஞர்கள் ஒரே கருத்துடையவர்களாக இருக்கின்றார்கள்.

ஆனால், சாப்பிடுவதற்கு ‘ஹலால்’ -ஆகுமாகாத விலங்குடைய எச்சில் சம்பந்தமாக பல கருத்துகள் இருந்தாலும் சரியான கருத்து அதனுடைய எச்சிலும் சுத்தமானதுதான். அதனுடைய எச்சில் தண்ணீரை அசுத்தமாக்கி விடாது. அதுவும் குறிப்பாக தண்ணீர் அதிகமாக இருந்தால் அதில் விலங்குகள் குடிப்பதால் அந்த தண்ணீர் அசுத்தமாகி விடாது; சுத்தமாகத்தான் இருக்கும்.

தண்ணீர் மிகக் குறைவாக இருந்து, விலங்குகள் குடித்ததால் தண்ணீரில் மாற்றம் ஏற்பட்டுவிட்டால் மட்டும் அந்த தண்ணீர் அசுத்தமாகிவிடும்.

ஆதாரம்:

12. அறிவிப்பாளர்: ஆயிஷா ﵂, நூல்: முஸ்லிம், 453.

**عَنِ ابْنِ عُمَرَ ﵄ قَالَ سَمِعْتُ رَسُولَ اللّٰهِ ﷺ سُئِلَ عَنِ الْمَاءِ يَكُونُ بِالْفَلَاةِ مِنَ الْأَرْضِ وَمَا يَنُوبُهُ مِنْ الدَّوَابِّ وَالسِّبَاعِ فَقَالَ رَسُولُ اللّٰهِ ﷺ إِذَا بَلَغَ الْمَاءُ قُلَّتَيْنِ لَمْ يُنَجِّسْهُ شَيْءٌ رواه ابن ماجة برقم ٥١٠**

பூமியில் வனாந்தரத்தில் உள்ள தண்ணீரைப் பற்றியும் அவற்றில் கால்நடைகளும் விலங்குகளும் வந்து (குடித்துவிட்டு, குளித்துவிட்டு) போவதைப் பற்றியும் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கு ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: “தண்ணீர் இரண்டு குல்லத் அளவு இருந்தால் அதை எதுவும் அசுத்தமாக்கி விடாது.”[13]

**கருத்து:** மிருகங்கள் வாய் வைத்த தண்ணீர் அதிக அளவில் இருந்தால் அந்தத் தண்ணீர் அசுத்தமாகாது என்பதை இந்த ஹதீஸ் தெளிவு படுத்துவதைப் போல், தண்ணீர் குறைவாக இருந்து, மிருகங்கள் வாய் வைப்பதால் தண்ணீரில் மாற்றம் ஏற்பட்டால்தான் அந்த தண்ணீரை பயன்படுத்த முடியாது என்பதையும் இந்த ஹதீஸ் சுட்டிக்காட்டுகிறது.

ஆதாரம்:

**عَنْ كَبْشَةَ بِنْتِ كَعْبِ بْنِ مَالِكٍ أَنَّ أَبَا قَتَادَةَ ﵁ دَخَلَ عَلَيْهَا ثُمَّ ذَكَرَتْ كَلِمَةً مَعْنَاهَا فَسَكَبْتُ لَهُ وَضُوءًا فَجَاءَتْ هِرَّةٌ فَشَرِبَتْ مِنْهُ فَأَصْغَى لَهَا الْإِنَاءَ حَتَّى شَرِبَتْ قَالَتْ كَبْشَةُ فَرَآنِي أَنْظُرُ إِلَيْهِ فَقَالَ أَتَعْجَبِينَ يَا ابْنَةَ أَخِي فَقُلْتُ نَعَمْ قَالَ إِنَّ رَسُولَ اللّٰهِ ﷺ قَالَ إِنَّهَا لَيْسَتْ بِنَجِسٍ إِنَّمَا هِيَ مِنْ الطَّوَّافِينَ عَلَيْكُمْ وَالطَّوَّافَاتِ رواه النسائي في السنن الصغرى برقم ٦٧**

கப்ஷா பின்த் கஅப் இப்னு மாலிக் கூறுகிறார்: “என்னிடம் அபூ கதாதா ﵁ வந்தார். நான் அவருக்கு (-அபூ கதாதாவிற்கு அவர்) உளூ செய்ய தண்ணீர் ஊற்றினேன். அப்போது ஒரு பூனை வந்தது. அது அதில்

13. அறிவிப்பாளர்: இப்னு உமர் ﵄, நூல்: இப்னு மாஜா, எண்: 510

தண்ணீர் குடிக்கத் தொடங்கியது. அவர் அதற்கு அந்த பாத்திரத்தை சாய்த்தார். அது நன்றாக குடித்தது. நான் அவரை (ஆச்சரியமாக) பார்ப்பதை அவர் கவனித்தார்." அவர் கூறினார்: "என் சகோதரரின் மகளே! நீ ஆச்சரியப்படுகிறாயா?" நான், ஆம் என்றேன். அவர் கூறினார்: "ரஸூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: நிச்சயமாக அது (-பூனை) அசுத்தமானதல்ல. அது உங்களிடம் அதிகம் வரக்கூடியவைகளில் ஒன்றாகும்."[14]

பூனைகளை விட்டும் உணவுகளையும், குடிநீர்களையும் பாதுகாப்பாக வைப்பது சிரமமான ஒன்றாகும். ஆகவே, அவற்றின் எச்சில் அசுத்தம் என்றும் அவை வாய் வைத்த பொருள் அசுத்தமாகிவிடும் என்றும் அவை வாய்வைத்த பொருளை கழுவ வேண்டும் என்றும் கூறினால் அது மிகுந்த சிரமத்தை ஏற்படுத்திவிடும். அல்லாஹ் இந்த உம்மத்தை விட்டும் சிரமமான சட்டங்களை அகற்றி விட்டான்.

நாயின் எச்சில் அசுத்தமாகும். அவ்வாறே பன்றியும் அதன் எச்சியும் அசுத்தமாகும்.

ஆதாரம்:

**عَنْ أَبِي هُرَيْرَةَ ﷺ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ طَهُورُ إِنَاءِ أَحَدِكُمْ إِذَا وَلَغَ فِيهِ الْكَلْبُ أَنْ يَغْسِلَهُ سَبْعَ مَرَّاتٍ أُولَاهُنَّ بِالتُّرَابِ رواه مسلم برقم ٤٢٠**

ரஸூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: உங்கள் ஒருவரின் பாத்திரத்தில் நாய் நக்கிவிட்டால் அதை சுத்தம் செய்வதற்கு ஏழுமுறை கழுவ வேண்டும். அதில் முதல் முறை மண்ணால் தேய்த்து கழுவ வேண்டும்.[15]

பன்றியைப் பற்றி அல்லாஹ் கூறுகின்றான்:

**أَوْ لَحْمَ خِنْزِيرٍ فَإِنَّهُ رِجْسٌ**

14. அறிவிப்பாளர்: அபூ கதாதா ؓ, நூல்: சுனன் நசாயி சுக்ரா, எண்: 67.
15. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ؓ, நூல்: முஸ்லிம், எண்: 420

அல்லது பன்றியின் மாமிசத்தைத் தவிர (இதுவும் எனக்கு தடுக்கப்பட்டதாகும்.) ஏனெனில், நிச்சயமாக அது அசுத்தமாகும்.

(அல்குர்ஆன் 6:145)

**கருத்து:** இந்த மார்க்கத்தில் தடுக்கப்பட்ட மாமிச உணவுகளை கூறும் போது அதில் பன்றியின் மாமிசத்தையும் அல்லாஹ் குறிப்பிட்டுவிட்டு, அந்த பன்றி முழுவதுமே அசுத்தமான ஒன்று என உறுதிபடுத்துகின்றான். ஆகவே, அதன் எச்சிலும் அசுத்தமானதுதான். அது வாய் வைத்த பாத்திரம் சிறியதாக இருந்தால் அதில் உள்ள உணவை அல்லது தண்ணீரை கொட்டிவிட வேண்டும்.

----------------------

# பாத்திரங்கள் தொடர்பான சட்டங்கள்

தண்ணீர் மற்றும் உணவு போன்ற பொருள்களை பாதுகாத்து வைக்கப்படும் வஸ்துக்களுக்கு பாத்திரம் என்று கூறப்படும்.

இன்று பல உலோகங்களால் இது செய்யப்படுகின்றது. இவ்வகையான பாத்திரங்களை பயன்படுத்துவது ஆகுமானதுதான்.

வஸ்த்துக்கள் சம்பந்தமாக பொது விதி என்னவென்றால், அவை ஆகுமானவையாக இருப்பதுதான்.

ஆதாரம்:

அல்லாஹ் கூறுகின்றான்:

هُوَ الَّذِي خَلَقَ لَكُمْ مَا فِي الْأَرْضِ جَمِيعًا

அவன்தான் பூமியில் உள்ள அனைத்தையும் உங்களுக்கு படைத்தான். (அல்குர்ஆன் 2:29)

**கருத்து:** மனிதர்களின் தேவைக்காகத்தான் அல்லாஹ் இவ்வுலக வஸ்துக்களை படைத்தான். ஆகவே, அல்லாஹ்வும் அவனது தூதரும் ஒன்றைத் தடுக்காதவரை படைக்கப்பட்ட எல்லாப் வஸ்துக்களும் ஆகுமானவை ஆகும். அவ்வாறே, அவற்றை பயன்படுத்துவதும் ஆகுமானதாக இருக்கும்.

இந்த பாடத்தில் பல சட்ட விளக்கங்கள் உள்ளன.



**முதலாவது சட்ட விளக்கம்:**

## தங்கம், வெள்ளி, இன்னும் மற்ற உலோகங்களினால் செய்யப்பட்ட பாத்திரங்களை தஹாரா –சுத்தம் செய்வதில் பயன்படுத்துவது

எல்லா வகையான பாத்திரங்களும் அவை சுத்தமாகவும் ஆகுமானவையாகவும் இருந்தால் உண்பது, குடிப்பது அல்லது மற்ற தேவைகளுக்காக அவற்றை பயன்படுத்துவது கூடும். ஆனால், தங்கம், வெள்ளி பாத்திரங்களை உண்பதற்காக, குடிப்பதற்காக பயன்படுத்துவது கூடாது.

ஆதாரம் 1:

நபி ﷺ கூறினார்கள்:

**عن عَبْد الرَّحْمَنِ بْن أَبِي لَيْلَى أَنَّهُمْ كَانُوا عِنْدَ حُذَيْفَةَ رضي الله عنه فَاسْتَسْقَى فَسَقَاهُ مَجُوسِيٌّ فَلَمَّا وَضَعَ الْقَدَحَ فِي يَدِهِ رَمَاهُ بِهِ وَقَالَ لَوْلَا أَنِّي نَهَيْتُهُ غَيْرَ مَرَّةٍ وَلَا مَرَّتَيْنِ كَأَنَّهُ يَقُولُ لَمْ أَفْعَلْ هَذَا وَلَكِنِّي سَمِعْتُ النَّبِيَّ ﷺ يَقُولُ لَا تَلْبَسُوا الْحَرِيرَ وَلَا الدِّيبَاجَ وَلَا تَشْرَبُوا فِي آنِيَةِ الذَّهَبِ وَالْفِضَّةِ وَلَا تَأْكُلُوا فِي صِحَافِهَا فَإِنَّهَا لَهُمْ فِي الدُّنْيَا وَلَنَا فِي الْآخِرَةِ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ٥٠٠٦**

அப்துர் ரஹ்மான் இப்னு அபி லைலா அறிவிக்கின்றார்: நாங்கள் ஹுதைஃபா رضي الله عنه அவர்களிடம் இருந்தோம். அவர்கள் தண்ணீர் கேட்டார்கள். மஜூசி ஒருவர் அவர்களுக்கு தண்ணீர் கொடுத்தார். அவர்களின் கரத்தில் அவர் பாத்திரத்தை வைத்தவுடன் அந்த பாத்திரத்தை அவர்கள் எறிந்தார்கள். மேலும், கூறினார்கள்: நான் அவரை ஒரு முறையோ அல்லது இருமுறையோ தடுத்திருக்கவில்லை என்றால்....

(- நான் இப்படி செய்திருக்க மாட்டேன்- என்று அவர்கள் கூறுகிறார்கள் போலும். இவ்வாறு அறிவிப்பாளர் கூறுகிறார்.) எனினும் நான் நபி ﷺ அவர்கள் கூற செவியுற்றேன்: “நீங்கள் மென்மையான தடிப்பமான பட்டாடையை அணியாதீர்கள்! தங்கம், வெள்ளி பாத்திரங்களில் பருகாதீர்கள்! அவற்றின் பாத்திரங்களில் உண்ணாதீர்கள்! நிச்சயமாக இவை உலகத்தில் அவர்களுக்கும் (-இறை மறுப்பாளர்களுக்கும்), மறுமையில் நமக்கும் (-நம்பிக்கையாளர்களுக்கும்) உரியதாகும்.”[16]

ஆதாரம் 2:

**عَنْ أُمِّ سَلَمَةَ رضي الله عنها أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ الَّذِي يَشْرَبُ فِي آنِيَةِ الْفِضَّةِ إِنَّمَا يُجَرْجِرُ فِي بَطْنِهِ نَارَ جَهَنَّمَ رواه مسلم برقم ٣٨٤٦**

ரஸூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: வெள்ளி பாத்திரங்களில் குடிப்பவர் தனது வயிற்றில் மடக் மடக் என்று குடிப்பதெல்லாம் நரக நெருப்பைத்தான்.[17]

**கருத்து:** இந்த இரண்டு நபிமொழிகளும் தங்கம், வெள்ளி பாத்திரங்களில் உண்பதையும் குடிப்பதையும் தெளிவாக தடை செய்கின்றன; மற்ற பயன்பாட்டுக்காக அவற்றை பயன்படுத்துவதை தடை செய்யவில்லை. ஆகவே, சுத்தம் செய்வதற்கு பயன்படுத்துவது கூடும் என்பதை அறிய முடிகிறது.

ஒரு பாத்திரம் முழுமையாக தங்கம், வெள்ளியிலிருந்து செய்யப்பட்டிருந்தாலும் அல்லது தங்கம், வெள்ளியினால் முலாம் பூசப்பட்டிருந்தாலும் அல்லது தங்கம், வெள்ளி கலந்து செய்யப்பட்டிருந்தாலும் அந்த பாத்திரத்தில் உண்பது, குடிப்பது கூடாது.

16. அறிவிப்பாளர்: அப்துர் ரஹ்மான் இப்னு அபி லைலா رحمه الله, நூல்: புகாரி, எண்: 5006
17. அறிவிப்பாளர்: உம்மு சலமா رضي الله عنها, நூல்: முஸ்லிம், எண்: 3846

**இரண்டாவது சட்ட விளக்கம்**

## தங்கம், வெள்ளியினால் பற்ற வைக்கப்பட்ட பாத்திரத்தை பயன்படுத்துவது

ஒரு பாத்திரம் ஓட்டை விழுந்து அதை தங்கத்தினால் பற்றவைக்கப் பட்டால் அந்த பாத்திரத்தில் உண்பது, குடிப்பது கூடாது. இதற்கு ஆதாரம் முன்னர் கூறப்பட்ட நபிமொழிகள்தான். ஆனால், குறைந்தளவு வெள்ளியினால் பற்றவைக்கப்பட்டால் அந்த பாத்திரத்தை பயன்படுத்துவது கூடும்.

ஆதாரம்:

**عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ ؓ أَنَّ قَدَحَ النَّبِيِّ ﷺ انْكَسَرَ فَاتَّخَذَ مَكَانَ الشَّعْبِ سِلْسِلَةً مِنْ فِضَّةٍ قَالَ عَاصِمٌ رَأَيْتُ الْقَدَحَ وَشَرِبْتُ فِيهِ رواه البخاري برقم ٢٨٧٨**

நபி ﷺ அவர்களுடைய பாத்திரம் உடைந்துவிட்டது. உடைந்த அந்த இடத்தில் வெள்ளியினால் ஆன ஒரு வளையத்தை வைத்(து பற்றவைத்) தார்கள். இந்த ஹதீஸின் அறிவிப்பாளர் தொடரில் உள்ள ஆஸிம் என்பவர் கூறுகிறார்: நான் அந்த பாத்திரத்தை பார்த்திருக்கிறேன். இன்னும் அதில் குடித்திருக்கிறேன்.[18]

**மூன்றாவது சட்ட விளக்கம்**

## காஃபிர்களின் பாத்திரங்களை பயன்படுத்துவது

முஸ்லிம் அல்லாதவர்களின் பாத்திரங்களை பொறுத்தவரை அவை அசுத்தமடைந்தவை என்று உறுதியாகத் தெரியவில்லை என்றால் அவற்றை பயன்படுத்துவது கூடும். அவை அசுத்தமானவை என்று உறுதியாகத் தெரிந்தால் அவற்றை கழுவியப் பிறகுதான் பயன்படுத்த வேண்டும்.

18. அறிவிப்பாளர்: அனஸ் ؓ, நூல்: புகாரி, எண்: 2878

ஆதாரம்:

**عَنْ أَبِي ثَعْلَبَةَ الْخُشَنِيِّ ﷺ قَالَ قُلْتُ يَا نَبِيَّ اللهِ إِنَّا بِأَرْضِ قَوْمٍ مِنْ أَهْلِ الْكِتَابِ أَفَنَأْكُلُ فِي آنِيَتِهِمْ وَبِأَرْضِ صَيْدٍ أَصِيدُ بِقَوْسِي وَبِكَلْبِي الَّذِي لَيْسَ بِمُعَلَّمٍ وَبِكَلْبِي الْمُعَلَّمِ فَمَا يَصْلُحُ لِي قَالَ أَمَّا مَا ذَكَرْتَ مِنْ أَهْلِ الْكِتَابِ فَإِنْ وَجَدْتُمْ غَيْرَهَا فَلَا تَأْكُلُوا فِيهَا وَإِنْ لَمْ تَجِدُوا فَاغْسِلُوهَا وَكُلُوا فِيهَا وَمَا صِدْتَ بِقَوْسِكَ فَذَكَرْتَ اسْمَ اللهِ فَكُلْ وَمَا صِدْتَ بِكَلْبِكَ الْمُعَلَّمِ فَذَكَرْتَ اسْمَ اللهِ فَكُلْ وَمَا صِدْتَ بِكَلْبِكَ غَيْرِ مُعَلَّمٍ فَأَدْرَكْتَ ذَكَاتَهُ فَكُلْ. رواه البخاري برقم ٥٠٥٦**

அபூ ஸஃலபா அல்குஷனி ﷺ அறிவிக்கிறார்: “அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் வேதக்காரார்கள் வசிக்கின்ற பூமியில் இருக்கின்றோம். நாங்கள் அவர்களின் பாத்திரங்களில் சாப்பிடலாமா? நாங்கள் வேட்டை பூமியில் இருக்கின்றோம். எனது வில்லால் நான் வேட்டை ஆடுகிறேன், பயிற்றுவிக்கப்படாத எனது நாயைக் கொண்டும், இன்னும் பயிற்றுவிக்கப்பட்ட எனது நாயைக் கொண்டும் நான் வேட்டை ஆடுகிறேன். (இவற்றில்) எது எனக்கு (உண்பதற்கு) ஆகுமானது?” என்று நான் கேட்டேன். நபி ﷺ கூறினார்கள்: “வேதக்காரார்கள் பற்றி நீர் கூறியதில் அவர்களின் பாத்திரங்கள் அல்லாத வேறு பாத்திரங்களை நீங்கள் பெற்றுக்கொண்டால் அவர்களுடைய பாத்திரங்களில் சாப்பிடாதீர்கள். நீங்கள் வேறு பாத்திரங்களை பெற்றுக் கொள்ள வில்லையென்றால் அந்த பாத்திரங்களை கழுவி விடுங்கள், (பிறகு) அவற்றில் சாப்பிடுங்கள். அல்லாஹ்வின் பெயர் கூறி உமது வில்லால் நீ வேட்டையாடியதை நீ சாப்பிடு! பயிற்றுவிக்கப்பட்ட உனது நாயைக் கொண்டு, நீ “பிஸ்மில்லாஹ்” கூறி வேட்டையாடியதை நீ சாப்பிடு! பயிற்றுவிக்கப்படாத உனது நாயைக் கொண்டு நீ வேட்டையாடி, (அந்த பிராணியை உயிருடன் நீ பெற்று, பின்னர்) அதை நீ அறுத்துவிட்டால் நீ அதை சாப்பிடு.”[19]

19. நூல்: புகாரி, எண்: 5056

காஃபிர்களின் பாத்திரங்கள் அசுத்தமாக இருக்கின்றன என்று உறுதியாக அறியமுடியவில்லையென்றால் அத்தகைய பாத்திரங்களை பயன்படுத்துவது கூடும்.

ஆதாரம்:

நபி ﷺ அவர்களும் அவர்களின் தோழர்களும் ஒரு முஷ்ரிக்கான பெண்ணின் பாத்திரத்தில் இருந்து தண்ணீர் எடுத்து உளூ செய்தார்கள்.[20]

வேதக்காரார்களின் உணவை அல்லாஹ் நமக்கு ஆகுமாக்கி இருக்கின்றான். அவர்கள் நமக்கு உணவளிப்பதாக இருந்தால் அவர்களின் பாத்திரத்தில்தான் நமக்கு உணவளிப்பார்கள். ஆகவே, அவர்களின் உணவு நமக்கு ஆகுமானதாக இருக்கும்போது அவர்களின் பாத்திரமும் ஆகுமானதாகத்தான் இருக்கும். ஆனால், அது அசுத்தமானது என்று உறுதியாக தெரிந்தால் மட்டும் நாம் அந்த பாத்திரத்தை தவிர்த்துக் கொள்ள வேண்டும்.

ஆதாரம்:

**عَنْ أَنَسٍ ﷺ أَنَّ يَهُودِيًّا دَعَا النَّبِيَّ ﷺ إِلَى خُبْزِ شَعِيرٍ وَإِهَالَةٍ سَنِخَةٍ فَأَجَابَهُ رواه أحمد برقم ١٢٧٢٤**

அனஸ் ﷺ அறிவிக்கின்றார்கள்: யஹூதி ஒருவர் நபி ﷺ அவர்களை பார்லி ரொட்டி, இன்னும் வாடை வீசும்படியான எண்ணையை (அல்லது கொழுப்பை உணவாக ஏற்பாடு செய்து அவற்றை) உண்பதற்காக அழைத்தார். நபி ﷺ அவர்கள் அவரின் அழைப்பை ஏற்றார்கள்.[21]

**கருத்து:** அந்த யஹூதி சமைத்த உணவும் அவருடைய பாத்திரமும் சுத்தமானதாக இருந்த காரணத்தினால்தான் நபி ﷺ அவர்கள் அந்த உணவை அவருடைய பாத்திரத்திலேயே சாப்பிட்டார்கள்.

20. நூல்: புகாரி, பாடம்: தயம்மும் ஹதீஸ் எண்: 331.
21. நூல்: அஹ்மது, எண்: 12724

**நான்காவது சட்ட விளக்கம்**

## இறந்துபோன பிராணிகளின் தோல்களினால் செய்யப்பட்ட பாத்திரங்களில் சுத்தம் செய்வது

எந்த பிராணிகளை நாம் அறுத்து புசிப்பது கூடுமோ அவை (-ஆடு, மாடு, ஒட்டகம் போன்றவை) இறந்துவிட்டால் அவற்றின் தோல்களை பதனிட்டு பயன்படுத்துவது கூடும்.

ஆதாரம்:

**عَنِ ابْنِ عَبَّاسٍ ﵁ قَالَ سَمِعْتُ رَسُولَ اللّٰهِ ﷺ يَقُولُ أَيُّمَا إِهَابٍ دُبِغَ فَقَدْ طَهُرَ. رواه ابن ماجة برقم ٣٥٩٩**

இப்னு அப்பாஸ் ﵁ கூறுகிறார்கள்: ரஸூலுல்லாஹ் ﷺ கூறுவதை நான் செவியுற்றேன்: "எந்த ஒரு **إِهَاب** - தோலாக இருந்தாலும் பதனிடப்பட்டுவிட்டால் திட்டமாக அது சுத்தமாகிவிடும்."[22]

இந்த ஹதீஸை தனது சுனன் நூலில் பதிவு செய்துவிட்டு இமாம் திர்மிதி ﵀ அவர்கள் பின்வருமாறு கூறுகிறார்கள்:

**وقَالَ إِسْحَاقُ قَالَ النَّضْرُ بْنُ شُمَيْلٍ إِنَّمَا يُقَالُ الْإِهَابُ لِجِلْدِ مَا يُؤْكَلُ لَحْمُهُ**

நழ்ர் இப்னு ஷுமைல் என்ற அறிஞர் கூறுவதாக அறிஞர் இஸ்ஹாக் கூறுகிறார்: எந்த பிராணியின் மாமிசத்தை சாப்பிடப்படுமோ அதனின் தோலுக்குத்தான் **إِهَاب** - இஹாப் என்று சொல்லப்படும்.

**عَنْ عَبْدِ اللّٰهِ بْنِ عَبَّاسٍ ﵁ قَالَ سَمِعْتُ رَسُولَ اللّٰهِ ﷺ يَقُولُ إِذَا دُبِغَ الْإِهَابُ فَقَدْ طَهُرَ رواه مسلم برقم ٥٤٧**

22. நூல்: இப்னு மாஜா, எண்: 3599

அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ﵄ கூறுகிறார்கள்: ரஸூலுல்லாஹ் ﷺ கூறுவதை நான் செவியுற்றேன்: "**إِهَاب** - தோல் பதனிடப்பட்டுவிட்டால் திட்டமாக அது சுத்தமாகிவிடும்."[23]

**عَنِ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللهُ عَنْهُ عَنْ مَيْمُونَةَ رَضِيَ اللهُ عَنْهَا أَنَّ شَاةً لِمَوْلَاةِ مَيْمُونَةَ رَضِيَ اللهُ عَنْهَا مَرَّ بِهَا يَعْنِي النَّبِيَّ ﷺ قَدْ أُعْطِيَتْهَا مِنْ الصَّدَقَةِ مَيْتَةً فَقَالَ هَلَّا أَخَذُوا إِهَابَهَا فَدَبَغُوهُ فَانْتَفَعُوا بِهِ فَقَالُوا يَا رَسُولَ اللهِ إِنَّهَا مَيْتَةٌ قَالَ إِنَّمَا حُرِّمَ أَكْلُهَا. رواه ابن ماجة برقم ٣٦٠٠**

மைமூனா ﵂ அவர்களிடமிருந்து இப்னு அப்பாஸ் ﵁ அறிவிக்கின்றார்கள்: மைமூனா அவர்களின் அடிமைப்பெண் ஒருவருக்கு தர்மமாக வழங்கப்பட்ட ஆடு ஒன்று இறந்துவிட்டது. (அதை அவர்கள் தெருவின் ஓரமாக எறிந்து விட்டார்கள்.) அந்த ஆட்டை நபி ﷺ அவர்கள் கடந்து சென்றபோது, "அவர்கள் இதன் தோலை எடுத்து அதை பதனிட்டு அதன் மூலம் பயன்பெற்றிருக்க வேண்டாமா" என்று கூறினார்கள். "அல்லாஹ்வின் தூதரே! அது இறந்துபோனது" என்று அவர்கள் கூறினார்கள். நபி ﷺ கூறினார்கள்: "தடுக்கப்பட்டதெல்லாம் அதை (-இறந்ததை) உண்பதைத்தான்."[24]

**கருத்து:** நாம் அறுத்து சாப்பிடுவதற்கு அனுமதிக்கப்பட்ட பிராணி தானாக செத்துவிட்டால் அதன் மாமிசத்தை நாம் சாப்பிடக் கூடாது. ஆனால், அதை உரித்து அதனுடைய தோலை நமது தேவைகளுக்காக பயன்படுத்துவது கூடும் என்பதை இந்த ஹதீஸில் இருந்து விளங்க முடிகிறது.

அல்லாஹ் கூறுகின்றான்:

**قُلْ لَا أَجِدُ فِي مَا أُوحِيَ إِلَيَّ مُحَرَّمًا عَلَى طَاعِمٍ يَطْعَمُهُ إِلَّا أَنْ يَكُونَ مَيْتَةً**

23. நூல்: முஸ்லிம், எண்: 547

24. நூல்: இப்னு மாஜா, எண்: 3600

(நபியே) கூறுவீராக! உண்பவருக்கு தடுக்கப்பட்டதாக எதையும் நான் எனக்கு வஹ்யி அறிவிக்கப்படுவதில் காணவில்லை, அது இறந்துபோனதாக இருந்தாலே தவிர. (அல்குர்ஆன் 6:145)

நாம் அறுத்து புசிப்பதற்கு ஆகுமாகாத பிராணிகளின் தோல்களை நாம் பயன்படுத்துவது கூடாது. அந்த பிராணி இறந்த பின்னர், அல்லது அது உயிருடன் இருக்கும்போது அறுத்து அதன் தோலை உரித்து பதனிட்டாலும் சரி.

பாடத்தின் சுருக்கம்: உண்பதற்கு ஹலாலான பிராணியின் தோல் சுத்தமானதாகும். அந்த பிராணி தானாக இறந்து, பின்னர் அதன் தோல் உரிக்கப்பட்டு பதனிடப்பட்டாலும், அல்லது அது அறுக்கப்பட்டு, பின்னர் அதன் தோல் உரிக்கப்பட்டு பதனிடப்பட்டாலும் சரி.

உண்பதற்கு ஹலால் ஆகாத பிராணியின் தோல் எந்த நிலையிலும் அதை பயன்படுத்துவது கூடாது.

.....................................

DARUL HUDA , CHENNAI - 1 | muftiomar@gmail.com | 044 25247866

# தேவையை நிறைவேற்றுவது மற்றும் அதன் ஒழுக்கங்கள்

இந்த பாடத்தில் பல சட்ட விளக்கங்கள் உள்ளன.

**முதல் சட்ட விளக்கம்**

தேவையை நிறைவேற்றிய பின்னர் தண்ணீரால் சுத்தம் செய்வதற்கு **استنجاء** - இஸ்திஞ்சா என்றும் கற்களால் அல்லது சுத்தம் செய்வதற்கு அனுமதிக்கப்பட்ட ஒரு பொருளால் சுத்தம் செய்வதற்கு **استجمار** -இஸ்திஜ்மார் என்றும் கூறப்படும். அந்தப் பொருள் தானும் சுத்தமாக இருக்க வேண்டும், சுத்தத்தை ஏற்படுத்தக்கூடியதாக இருக்க வேண்டும், சுத்தம் செய்வதற்கு அதைப் பயன்படுத்துவதை மார்க்கம் அனுமதித்திருக்க வேண்டும்.

மலம், ஜலம் கழித்தப் பின்னர் இந்த இரண்டு வகையில் எந்த வகையைப் பயன்படுத்தி சுத்தம் செய்தாலும் சுத்தம் நிறைவேறிவிடும்.

ஆதாரம் 1:

**عَنْ أَنَس بْن مَالِكٍ ﵁ قَالَ كَانَ رَسُولُ اللهِ ﷺ يَدْخُلُ الْخَلَاءَ فَأَحْمِلُ أَنَا وَغُلَامٌ نَحْوِي إِدَاوَةً مِنْ مَاءٍ وَعَنَزَةً فَيَسْتَنْجِي بِالْمَاءِ رواه مسلم برقم ٣٩٩**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் (தேவையை நிறைவேற்ற) திறந்த வெளிக்கு வருவார்கள். நானும் என்னைப் போன்ற சிறுவர் ஒருவரும் ஒரு பாத்திரத்தில் தண்ணீரையும் ஒரு தடியையும் எடுத்து வருவோம்.

நபி ﷺ அவர்கள் அந்த தண்ணீரால் சுத்தம் செய்வார்கள்.[25]

ஆதாரம் 2:

**عَنْ عَائِشَةَ رضي الله عنها أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ إِذَا ذَهَبَ أَحَدُكُمْ إِلَى الْغَائِطِ فَلْيَذْهَبْ مَعَهُ بِثَلَاثَةِ أَحْجَارٍ يَسْتَطِيبُ بِهِنَّ فَإِنَّهَا تُجْزِئُ عَنْهُ. رواه أبو داود برقم ٣٦**

ரஸூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: உங்களில் ஒருவர் மலம் கழிக்கச் சென்றால் தன்னுடன் மூன்று கற்களை எடுத்துச் செல்லட்டும். அவர் அவற்றினால் சுத்தம் செய்வார். நிச்சயமாக அவை அதற்கு (-தண்ணீருக்கு) பதிலாக போதுமாகி விடும்.[26]

முடிந்தால் இரண்டையும் சேர்த்து சுத்தம் செய்வது சிறப்பானதாகும். அதாவது முதலில் கற்களை பயன்படுத்திவிட்டு, பிறகு தண்ணீரால் சுத்தம் செய்வது சிறந்த முறையாகும்.

சுத்தமான கற்கள், அல்லது சுத்தத்தை ஏற்படுத்துகின்ற டிஸ்ஸூ பேப்பர் போன்ற பொருள் எதுவாக இருந்தாலும் அவற்றை பயன்படுத்தியும் சுத்தம் செய்யலாம். அந்த பொருள் சுத்தமாகவும் சுத்தம் செய்யக்கூடியதாகவும் இருக்க வேண்டும்.

நபி ﷺ அவர்கள் சுத்தம் செய்வதற்கு கற்களை பயன்படுத்தினார்கள். ஆகவே, தேவையை நிறைவேற்றிய பின்னர் சுத்தம் செய்ய உதவக் கூடிய அனுமதிக்கப்பட்ட பொருள் எதுவாக இருந்தாலும் அதைப் பயன்படுத்தலாம் என்பதை இந்த ஹதீஸில் இருந்து நாம் அறிய முடிகிறது.

குறைந்தது மூன்று முறை தடவுவதால் மட்டுமே சுத்தம் ஏற்படும். ஆகவேதான் மூன்று கற்கள் இருக்க வேண்டும் என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள்.

சில வஸ்த்துக்களைக் கொண்டு சுத்தம் செய்வதை நபி ﷺ தடுத்தார்கள். அதாவது, எலும்பு, கால்நடைகளின் காய்ந்துபோன விட்டைகள் இவற்றை சுத்தம் செய்வதற்கு பயன்படுத்துவது தடுக்கப்பட்டதாகும்.

25. அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் رضي الله عنه, நூல்: முஸ்லிம். எண்: 399

26. அறிவிப்பாளர்: ஆயிஷா رضي الله عنها, நூல்: அபூ தாவூத், எண்: 36

ஆதாரம்:

عَنْ عَبْدِ الرَّحْمٰنِ بْنِ يَزِيدَ قَالَ قِيلَ لِسَلْمَانَ ﵁ قَدْ عَلَّمَكُمْ نَبِيُّكُمْ ﷺ كُلَّ شَيْءٍ حَتَّى الْخِرَاءَةَ فَقَالَ سَلْمَانُ أَجَلْ نَهَانَا أَنْ نَسْتَقْبِلَ الْقِبْلَةَ بِغَائِطٍ أَوْ بَوْلٍ وَأَنْ نَسْتَنْجِيَ بِالْيَمِينِ أَوْ أَنْ يَسْتَنْجِيَ أَحَدُنَا بِأَقَلَّ مِنْ ثَلَاثَةِ أَحْجَارٍ أَوْ أَنْ نَسْتَنْجِيَ بِرَجِيعٍ أَوْ بِعَظْمٍ. رواه الترمذي برقم ١٦

ஸல்மான் ஃபார்ஸி ﵁ அவர்களிடம் கூறப்பட்டது, "உங்கள் நபி ﷺ அவர்கள் உங்களுக்கு மலம் ஜலம் கழிப்பது உள்பட எல்லாவற்றையும் கற்பித்திருக்கிறார்கள்." அதற்கு ஸல்மான் கூறினார், "ஆம், மலம் அல்லது சிறுநீர் கழிக்கும்போது கிப்லாவை முன்னோக்குவதையும் வலது கையால் சுத்தம் செய்வதையும் அல்லது மூன்று கற்களைவிட குறைவானதைக் கொண்டு எங்களில் ஒருவர் சுத்தம் செய்வதையும் அல்லது விட்டையைக் கொண்டு அல்லது எலும்பைக் கொண்டு நாங்கள் சுத்தம் செய்வதையும் (நபி ﷺ அவர்கள்) எங்களுக்கு தடுத்தார்கள்."[27]

**இரண்டாவது சட்ட விளக்கம்**

## தேவையை நிறைவேற்றும்போது கிப்லாவை முன்னோக்குவதும் பின்னோக்குவதும்

பொது வெளியில், தடுப்புகள் இல்லாமல் தேவையை நிறைவேற்றும்போது கிப்லாவின் திசையை முன்னோக்கி, அல்லது பின்னோக்கி அமர்வது கூடாது.

عَنْ أَبِي أَيُّوبَ الْأَنْصَارِيِّ ﵁ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ إِذَا أَتَيْتُمْ الْغَائِطَ فَلَا تَسْتَقْبِلُوا الْقِبْلَةَ وَلَا تَسْتَدْبِرُوهَا وَلَكِنْ شَرِّقُوا أَوْ غَرِّبُوا قَالَ أَبُو أَيُّوبَ فَقَدِمْنَا الشَّامَ

27. அறிவிப்பாளர்: அப்துரர்ஹமான் இப்னு யசீது ﵁, நூல்: திர்மிதி, எண்: 16

**فَوَجَدْنَا مَرَاحِيضَ بُنِيَتْ قِبَلَ الْقِبْلَةِ فَنَنْحَرِفُ وَنَسْتَغْفِرُ اللّٰهَ تَعَالَى رواه البخاري برقم ٣٨٠**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: "நீங்கள் மலம் கழிக்கச் சென்றால் கிப்லாவை முன்னோக்காதீர்கள். இன்னும் அதை பின்னோக்காதீர்கள். எனினும் கிழக்கு அல்லது மேற்கு திசையில் முன்னோக்கி அல்லது பின்னோக்கி அமருங்கள்."[28] அபூ அய்யூப் ؓ கூறுகிறார்கள்: "நாங்கள் ஷாம் தேசம் வந்தோம். அங்கு கழிவறைகள் கிப்லாவை முன்னோக்கி கட்டப்பட்டிருந்தன. நாங்கள் கொஞ்சம் திரும்பி அமர்ந்து கொள்வோம். (பின்னர் அதற்காக) அல்லாஹுத் தஆலாவிடம் பாவமன்னிப்புத் தேடுவோம்."[29]

கட்டிடங்களில் கட்டப்பட்ட கழிவறைகளில் அல்லது கிப்லாவிற்கும் தனக்கும் இடையில் மறைப்பு ஏதும் இருந்தால் கிப்லாவை முன்னோக்கி அல்லது பின்னோக்கி அமர்வதில் குற்றம் இல்லை.

ஆதாரம்:

**عَنِ ابْنِ عُمَرَ ؓ قَالَ رَقِيتُ يَوْمًا عَلَى بَيْتِ حَفْصَةَ ؓ فَرَأَيْتُ النَّبِيَّ ﷺ عَلَى حَاجَتِهِ مُسْتَقْبِلَ الشَّامِ مُسْتَدْبِرَ الْكَعْبَةِ. رواه الترمذي برقم ١١**

இப்னு உமர் ؓ கூறுகிறார்கள்: "ஒரு நாள் நான் ஹஃப்ஸா ؓ அவர்களின் வீட்டின் மேல் ஏறினேன். அப்போது நபி ﷺ அவர்கள் ஷாமை முன்னோக்கியவர்களாக, கஃபாவை பின்னோக்கியவர்களாக தனது தேவைக்கு அமர்ந்திருப்பதைப் பார்த்தேன்."[30]

**عَنْ مَرْوَانَ الْأَصْفَرِ قَالَ رَأَيْتُ ابْنَ عُمَرَ ؓ أَنَاخَ رَاحِلَتَهُ مُسْتَقْبِلَ الْقِبْلَةِ ثُمَّ جَلَسَ يَبُولُ إِلَيْهَا فَقُلْتُ يَا أَبَا عَبْدِ الرَّحْمَنِ أَلَيْسَ قَدْ نُهِيَ عَنْ هَذَا قَالَ**

---

28. இது, மதீனாவைக் கவனித்து கூறப்பட்டதாகும். நமக்கு கிப்லா மேற்குத் திசையில் இருப்பதால் நாம் மேற்கு அல்லது கிழக்குத் திசையை நோக்கி தேவையை நிறைவேற்றக் கூடாது.
29. அறிவிப்பாளர்: அபூ அய்யூப் அல் அன்சாரி ؓ, நூல்: புகாரி, எண்: 380
30. நூல்: திர்மிதி, எண்: 11

بَلَى إِنَّمَا نُهِيَ عَنْ ذَلِكَ فِي الْفَضَاءِ فَإِذَا كَانَ بَيْنَكَ وَبَيْنَ الْقِبْلَةِ شَيْءٌ يَسْتُرُكَ فَلَا بَأْسَ رواه أبو داود برقم ١٠

மர்வானுல் அஸ்ஃபர் கூறுகிறார்: “இப்னு உமர் ﵁ அவர்கள் தனது ஒட்டகத்தை கிப்லாவின் பக்கம் உட்கார வைத்துவிட்டு (அதை மறைப்பாக வைத்து) அவர் அதன் பக்கம் சிறுநீர் கழிக்க அமர்ந்தார். அபூ அப்துர் ரஹ்மான் அவர்களே! இது தடுக்கப்பட வில்லையா?” என்று கேட்டேன். அவர்கள் கூறினார்கள்: “ஏன் இல்லை! இது தடுக்கப்பட்டதெல்லாம், திறந்தவெளியில்தான். உனக்கும் கிப்லாவிற்கும் இடையில் உன்னை மறைக்கும்படி ஏதும் ஒரு பொருள் இருந்தால் (இது) குற்றமாகாது.”[31]

இருப்பினும், கட்டிடங்களிலும் இதை தவிர்ப்பதுதான் மிகச் சிறப்பாகும். அல்லாஹ் மிக அறிந்தவன்.

**மூன்றாவது சட்ட விளக்கம்:**

## கழிவறைக்கு செல்பவர் பேண வேண்டிய சுன்னத்துகள் - நபிவழி ஒழுக்கங்கள்

**சுன்னத்து 1:**

عَنْ عَلِيٍّ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ سِتْرُ مَا بَيْنَ الْجِنِّ وَعَوْرَاتِ بَنِي آدَمَ إِذَا دَخَلَ الْكَنِيفَ أَنْ يَقُولَ بِسْمِ اللّٰهِ. رواه ابن ماحة برقم ٢٩٤

அலி ﵁ அவர்கள் கூறுகிறார்கள்: மனிதர்கள் கழிவறைக்கு செல்லும்போது ஜின்களுக்கும் மனிதர்களில் மர்மஸ்தானங்களுக்கும் இடையில் திரையாவது அவர்கள் பிஸ்மில்லாஹ் சொல்வதாகும்.[32]

சுன்னத்து 2:

31. நூல்: அபூ தாவூத், எண்: 10
32. நூல்: இப்னு மாஜா, எண்: 294

عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ رَضِيَ اللهُ عَنْهُ قَالَ كَانَ النَّبِيُّ ﷺ إِذَا دَخَلَ الْخَلَاءَ قَالَ اَللّٰهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنَ الْخُبُثِ وَالْخَبَائِثِ. رواه البخاري برقم ٥٨٤٧

அனஸ் இப்னு மாலிக் رَضِيَ اللهُ عَنْهُ கூறுகிறார்கள்: நபி ﷺ அவர்கள் கழிவறையில் நுழைந்தால் (-நுழைய நாடினால்) அவர்கள் கூறுவார்கள்,

اَللّٰهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنْ الْخُبُثِ وَالْخَبَائِثِ

“அல்லாஹ்வே! நிச்சயமாக நான் உன்னைக் கொண்டு தீய ஆண், பெண் ஷைத்தான்களை விட்டு பாதுகாவல் தேடுகிறேன்.”[33]

**சுன்னத்து 3:**

عَنْ عَائِشَةَ رَضِيَ اللهُ عَنْهَا قَالَتْ كَانَ النَّبِيُّ ﷺ إِذَا خَرَجَ مِنْ الْخَلَاءِ قَالَ غُفْرَانَكَ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ٧

ஆயிஷா رَضِيَ اللهُ عَنْهَا அவர்கள் கூறுகிறார்கள்: நபி ﷺ அவர்கள் கழிவறையிலிருந்து வெளியேறினால்,

غُفْرَانَكَ

“(அல்லாஹ்வே!) உன்னிடம் மன்னிப்புக் கோருகிறேன்” என்று கூறுவார்கள்.[34]

**சுன்னத்து 4:**

கழிவறையில் நுழையும்போது அல்லது பொது வெளியில் தேவையை நிறைவேற்ற அமரும்போது முதலில் இடது காலை வைப்பதும், கழிவறையில் இருந்து வெளியேறும்போது அல்லது பொது வெளியில் தேவையை நிறைவேற்றிய பின்னர் எழும்போதும் வலது காலை

33. நூல்: புகாரி, எண்: 5847
34. நூல்: திர்மிதி, எண்: 7.

வைத்து வெளியேறுவதும் அழகான செயல் என்று அறிஞர்கள் பலர் கூறியுள்ளார்கள்.[35]

இமாம் நவவி ﷺ அவர்களும் தமது மஜ்மூஃ என்ற நூலில் இந்த கருத்தை விரும்பியுள்ளார்கள்.



**சுன்னத்து 5:**

**عَنْ جَابِرٍ رضي الله عنه قَالَ خَرَجْنَا مَعَ رَسُولِ اللهِ ﷺ فِي سَفَرٍ وَكَانَ رَسُولُ اللهِ ﷺ لَا يَأْتِي الْبَرَازَ حَتَّى يَتَغَيَّبَ فَلَا يُرَى. رواه ابن ماجة برقم ٣٣٠**

ஜாபிர் رضي الله عنه கூறுகிறார்கள்: நாங்கள் ஒரு பயணத்தில் நபி ﷺ அவர்களுடன் புறப்பட்டோம். ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் (தேவையை நிறைவேற்றச் சென்றால், எங்கள் பார்வைகளை விட்டு) மறைந்து அவர்களை பார்க்க முடியாமல் போகின்ற வரை அவர்கள் தேவையை நிறைவேற்ற மாட்டார்கள்.[36]

**عَنْ عَبْدِ الرَّحْمَنِ بْنِ أَبِي قُرَادٍ رضي الله عنه قَالَ حَجَجْتُ مَعَ النَّبِيِّ ﷺ فَذَهَبَ لِحَاجَتِهِ فَأَبْعَدَ. رواه ابن ماجة برقم ٣٢٩**

அப்துர் ரஹ்மான் இப்னு அபீ குராத் رضي الله عنه கூறுகிறார்கள்: நான் நபி ﷺ அவர்களுடன் ஹஜ்ஜுக்குச் சென்றேன். அப்போது அவர்கள் தனது தேவைக்காக சென்றார்கள். வெகுதூரம் சென்றுவிட்டார்கள்.[37]

**சுன்னத்து 6:**

**عَنْ ابْنِ عُمَرَ رضي الله عنه أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ إِذَا أَرَادَ حَاجَةً لَا يَرْفَعُ ثَوْبَهُ حَتَّى يَدْنُوَ مِنْ الْأَرْضِ. رواه أبو داود برقم ١٣**

---

35. பார்க்க ஷர்ஹுஸ் சுன்னா - இமாம் பகவி ﷺ, எண்: 216
36. நூல்: இப்னு மாஜா, எண்: 330.
37. நூல்: இப்னு மாஜா, எண்: 329.

நபி ﷺ அவர்கள் தேவையை நிறைவேற்ற நாடினால் பூமிக்கு அருகில் நெருங்குகின்ற வரை தனது ஆடையை உயர்த்த மாட்டார்கள்.[38]

**நான்காவது சட்ட விளக்கம்**

## தேவையை நிறைவேற்றுபவர் கண்டிப்பாக தவிர்க்க வேண்டிய செயல்கள்

**1) தேங்கி நிற்கின்ற தண்ணீரில் சிறுநீர் கழிப்பது "ஹராம்" தடுக்கப்பட்ட செயலாகும்.**

ஆதாரம்:

**عَنْ جَابِرٍ رضي الله عنه عَنْ رَسُولِ اللّٰهِ ﷺ أَنَّهُ نَهَى أَنْ يُبَالَ فِي الْمَاءِ الرَّاكِدِ رواه مسلم برقم ٤٢٣**

நிச்சயமாக ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் தேங்கிய தண்ணீரில் சிறுநீர் கழிப்பதை தடுத்தார்கள்.[39]

**2) வலது கையால் மர்மஸ்தானத்தை தொடுவதும் வலது கையால் சுத்தம் செய்வதும் கூடாது.**

ஆதாரம்:

**عَنْ أَبِي قَتَادَةَ رضي الله عنه عَنْ النَّبِيِّ ﷺ قَالَ إِذَا بَالَ أَحَدُكُمْ فَلَا يَأْخُذَنَّ ذَكَرَهُ بِيَمِينِهِ وَلَا يَسْتَنْجِي بِيَمِينِهِ وَلَا يَتَنَفَّسْ فِي الْإِنَاءِ. رواه البخاري برقم ١٥٠**

நபி ﷺ கூறினார்கள்: "உங்களில் ஒருவர் சிறுநீர் கழித்தால் அவர் தனது மர்மஸ்தானத்தை தனது வலது கையால் பிடிக்கவேண்டாம்; தனது வலது கையால் சுத்தம் செய்யவேண்டாம்; (குடிக்கும்போது) பாத்திரத்தில் மூச்சு விட வேண்டாம்."[40]

38. அறிவிப்பாளர்: இப்னு உமர் رضي الله عنه, நூல்: அபூ தாவூத், எண்: 13
39. அறிவிப்பாளர்: ஜாபிர் رضي الله عنه, நூல்: முஸ்லிம், எண்: 423
40. அறிவிப்பாளர்: அபூ கதாதா رضي الله عنه, நூல்: புகாரி, எண்: 150

**3) பாதைகளில், நிழல்களில், பூங்காக்களில், (பொது இடங்களில்,) காய்க்கின்ற மரங்களில், தண்ணீர் ஓடுகின்ற ஓடைகளில், மலம், ஜலம் கழிப்பது கூடாது.**

ஆதாரம் 1:



**عَنْ أَبِي هُرَيْرَةَ ﷺ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ اتَّقُوا اللَّعَّانَيْنِ قَالُوا وَمَا اللَّعَّانَانِ يَا رَسُولَ اللهِ قَالَ الَّذِي يَتَخَلَّى فِي طَرِيقِ النَّاسِ أَوْ فِي ظِلِّهِمْ رواه مسلم برقم ٣٩٧**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: அதிக சாபத்திற்குரிய இரண்டு காரியங்களை தவிர்த்துக் கொள்ளுங்கள்! அல்லாஹ்வின் தூதரே! அதிக சாபத்திற்குரிய இரண்டு காரியங்கள் என்ன? என்று அவர்கள் கேட்டார்கள். நபி ﷺ கூறினார்கள்: "மக்களின் பாதையில் அல்லது அவர்களுடைய நிழலில் (-அவர்களுக்கு நிழல் தரக்கூடிய மரங்களுடைய நிழலில்) மலம் ஜலம் கழிப்பவர்."[41]

ஆதாரம் 2:

**عَنْ مُعَاذِ بْنِ جَبَلٍ ﷺ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ اتَّقُوا الْمَلَاعِنَ الثَّلَاثَةَ الْبَرَازَ فِي الْمَوَارِدِ وَقَارِعَةِ الطَّرِيقِ وَالظِّلِّ. رواه أبو داود برقم ٢٤**

ரஸூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: சாபத்திற்குரிய மூன்று காரியங்களை விட்டும் தவிர்ந்து கொள்ளுங்கள்! நீரோடைகளில், பாதையின் நடுவில், நிழலில் மலம்(, ஜலம்) கழிப்பதை விட்டும் தவிர்ந்து கொள்ளுங்கள்![42]

**4) மலம், ஜலம் கழிக்கும்போது குர்ஆன் ஓதுவதும் திக்ரு செய்வதும் கூடாது.**

**5) விட்டை, எலும்பு, அல்லது உணவுகளைக் கொண்டு சுத்தம் செய்வது கூடாது.**

41. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﷺ, நூல்: முஸ்லிம், எண்: 397

42. அறிவிப்பாளர்: முஆத் இப்னு ஜபல் ﷺ, நூல்: அபூ தாவூத், எண்: 24

ஆதாரம்:

**عَنْ جَابِرٍ ﷺ قَالَ نَهَى رَسُولُ اللّٰهِ ﷺ أَنْ يُتَمَسَّحَ بِعَظْمٍ أَوْ بِبَعْرٍ. رواه مسلم برقم ٣٨٧**

எலும்பினால் அல்லது விட்டையினால் துடைத்து சுத்தம் செய்வதை ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் தடுத்தார்கள்.[43]

**6) முஸ்லிம்களின் கப்ருகளுக்கு நடுவில் மலம், ஜலம் கழிப்பது கூடாது.**

ஆதாரம்:

**عَنْ عُقْبَةَ بْنِ عَامِرٍ ﷺ قَالَ قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ لَأَنْ أَمْشِيَ عَلَى جَمْرَةٍ أَوْ سَيْفٍ أَوْ أَخْصِفَ نَعْلِي بِرِجْلِي أَحَبُّ إِلَيَّ مِنْ أَنْ أَمْشِيَ عَلَى قَبْرِ مُسْلِمٍ وَمَا أُبَالِي أَوَسْطَ الْقُبُورِ قَضَيْتُ حَاجَتِي أَوْ وَسْطَ السُّوقِ. رواه ابن ماجة برقم ١٥٥٦**

ரஸூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: நான் ஒரு முஸ்லிமுடைய கப்ரின் மீது நடப்பதைவிட நெருப்பு கங்கின் மீது அல்லது கத்தியின் மீது நடப்பது அல்லது எனது செருப்பை எனது காலால் தைப்பது எனக்கு விருப்பமானதாகும். கப்ருகளுக்கு நடுவில் நான் என் தேவையை நிறைவேற்றினால் என்ன? அல்லது, கடைத்தெருவிற்கு நடுவில் எனது தேவையை நிறைவேற்றினால் என்ன? நான் பொருட்படுத்த மாட்டேன்.[44]

**கருத்து:** ஒரு முஸ்லிமுடைய கப்ரை மிதித்து நடப்பது இன்னும் முஸ்லிம்களுடைய அடக்கஸ்தலங்களுக்கு மத்தியில் மலம், ஜலம் கழிப்பது இவ்விரண்டும் பெரும் பாவங்கள் மற்றும் அநாகரீகமான செயல்கள் என்பதை மேற்கூறப்பட்ட ஹதீஸ் உணர்த்துகிறது. மக்கள் கூடி இருக்கக்கூடிய கடைத் தெருவில் தேவையை நிறைவேற்றுவது ஒரு கேவலமான செயலாக இருப்பதைப் போன்றே அடக்கம் செய்யப்பட்டு இருக்கக்கூடிய மைய்யித்துகளுக்கு மத்தியில் தேவையை நிறைவேற்றுவது கேவலமான செயலாகும். மய்யித்துகள் (-இறந்தவர்கள்)

43. அறிவிப்பாளர்: ஜாபிர் ؓ, நூல்: முஸ்லிம், எண்: 387

44. அறிவிப்பாளர்: உக்பா இப்னு ஆமிர் ؓ, நூல்: இப்னு மாஜா, எண்: 1556

நம்மைப் பார்க்கவில்லையென்றாலும் அடக்கம் செய்யப்பட்டவர்களின் கண்ணியத்தை இந்த செயல் அசிங்கப்படுத்துவதாக இருக்கிறது.

**ஐந்தாவது சட்ட விளக்கம்**

## மலம், ஜலம் கழிக்க செல்பவர் தவிர்க்க வேண்டிய வெறுக்கப்பட்ட செயல்கள்



அ) காற்று வீசுகின்ற திசைக்கு எதிராக ஒரு தடுப்பு இல்லாமல் தேவையை நிறைவேற்றுவது வெறுக்கப்பட்டதாகும். இதனால் சிறுநீர் அவரது உடையில், உடலில் பட்டுவிடுவதற்கு வாய்ப்பு உள்ளது.

ஆ) மலம், ஜலம் கழித்துக்கொண்டிருக்கும் போது பேசுவது வெறுக்கப்பட்டதாகும்.

ஆதாரம்:

**عَنِ ابْنِ عُمَرَ رضي الله عنه أَنَّ رَجُلًا مَرَّ وَرَسُولُ اللهِ ﷺ يَبُولُ فَسَلَّمَ فَلَمْ يَرُدَّ عَلَيْهِ رواه مسلم برقم ٥٥٥**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் சிறுநீர் கழித்துக் கொண்டிருக்க ஒருவர் (அவர்களை) கடந்து சென்றார். அவர் (நபி ﷺ அவர்களுக்கு) ஸலாம் கூறினார். ஆனால், நபி ﷺ அவர்கள் அவருக்கு பதில் கூறவில்லை.[45]

இ) பொந்து, ஓட்டை, போன்ற இடுக்குகளில் சிறுநீர் கழிப்பது வெறுக்கப்பட்டதாகும்.

ஆதாரம்:

**عَنْ عَبْدِ اللهِ بْنِ سَرْجِسَ رضي الله عنه أَنَّ رَسُولَ اللهِ ﷺ نَهَى أَنْ يُبَالَ فِي الْجُحْرِ رواه أبو داود برقم ٢٧**

பொந்துகளில் சிறுநீர் கழிப்பதை ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் தடுத்தார்கள்.[46]

45. அறிவிப்பாளர்: இப்னு உமர் رضي الله عنه, நூல்: முஸ்லிம், எண்: 555
46. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு சர்ஜிஸ் رضي الله عنه, நூல்: அபூ தாவூத், எண்: 27

இந்த அறிவிப்பை தொடர்ந்து இமாம் அபூ தாவூத் ﷺ எழுதுகிறார்கள்:

**قَالُوا لِقَتَادَةَ مَا يُكْرَهُ مِنَ الْبَوْلِ فِي الْجُحْرِ قَالَ كَانَ يُقَالُ إِنَّهَا مَسَاكِنُ الْجِنِّ**

கதாதா ﵀ அவர்களிடம் “பொந்துகளில் சிறுநீர் கழிப்பது ஏன் வெறுக்கப்படுகிறது” என்று மாணவர்கள் கேட்டார்கள். “அவை ஜின்களின் வசிப்பிடம் என்று கூறப்படுகிறது” என அவர்கள் பதில் கூறினார்கள்:

அந்த பொந்துகளில் ஏதாவது விஷ ஜந்துக்கள் இருந்து அவை இவரை தீண்டி விடலாம்.

ஈ) அல்லாஹ்வுடைய பெயர், திக்ருகள் உள்ள பொருள்களை எடுத்துக்கொண்டு கழிவறைக்கு செல்வது அல்லது திறந்தவெளி கழிப்பிடத்திற்குச் செல்வது வெறுக்கப்பட்டதாகும். ஆனால், ஏதும் நிர்ப்பந்தம் இருந்தால் அப்போது குற்றமாகாது.

ஆதாரம்:

**عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ ﵁ أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ إِذَا دَخَلَ الْخَلَاءَ وَضَعَ خَاتَمَهُ. رواه ابن ماجة برقم ٢٩٩**

நபி ﷺ அவர்கள் கழிப்பிடம் சென்றால் தனது மோதிரத்தை கழற்றி (வைத்து) விடுவார்கள்.[47]

இந்த ஹதீஸ் பலவீனமானது என்று அறிஞர்கள் கூறுகிறார்கள். இருப்பினும் அல்லாஹ்வின் பெயர்கள் உள்ளவற்றைக் கண்ணியப்படுத்தும் விதமாக அது போன்ற பொருள்களை உடன் எடுத்துச் செல்வதை வெறுக்கப்பட்ட செயலாக அறிஞர்கள் கருதுகிறார்கள்.

மக்கள் பயன்படுத்துகின்ற கரன்சி நோட்டுகளில் அல்லாஹ்வின் பெயரோ அல்லது வேறு ஏதும் புனிதமான விஷயங்கள்

47. அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் ﵁, நூல்: இப்னு மாஜா, எண்: 299

எழுதப்பட்டிருந்தால் அவற்றை வெளியில் வைத்துவிட்டு செல்வது சிரமம் என்று இருப்பின் அது போன்றவற்றை உடன் எடுத்து செல்வது குற்றமாகாது.

குர்ஆன் பிரதிகளை கழிப்பிடம் எடுத்துச் செல்வது 'ஹராம்' தடுக்கப்பட்டதாகும். இது குர்ஆனை இழிவுபடுத்துகின்ற ஒரு செயலாக கருதப்படுகின்றது.

# பல் துலக்குவது மற்றும் இயற்கை விதிமுறைகள்

பல் துலக்குவதற்கு அரபியில் **سواك** - சிவாக் என்று சொல்லப்படும். குச்சி அல்லது அது போன்ற பொருளைக் கொண்டு பற்களை கரைகளில் இருந்தும் துர் வாடையிலிருந்தும் சுத்தம் செய்வதை சிவாக் என்று இங்கு நாம் கூறுகிறோம்.

இதில் பல சட்ட விளக்கங்கள் உள்ளன.

**முதல் சட்ட விளக்கம்**

## سواك - 'சிவாக்' பல் துலக்குவதுடைய சட்டம்

எல்லா நேரங்களிலும் பல் துலக்குவது சுன்னா -நபிவழியாகும். நோன்பாளி காலை, மதியம், மாலை, பிற்பகல், என எல்லா நேரத்திலும் அவர் பல் துலக்கலாம். நபி ﷺ அவர்கள் பொதுவாக எல்லோருக்கும் பல் துலக்குவதில் ஆர்வமூட்டினார்கள். அதில் நோன்பாளி, நோன்பில்லாதவர் என்று பாகுபாடு காட்டவில்லை. மேலும், நோன்பாளி குறிப்பிட்ட நேரம்வரைதான் பல் துலக்க வேண்டும் என்றும் கூறவில்லை. ஆகவே, பல் துலக்குவது எல்லோருக்கும் எல்லா நேரத்திலும் சுன்னத்தான - நன்மையான ஒரு காரியமாக இருக்கின்றது.

ஆதாரம் 1:

**عَنْ عَائِشَةَ رضي الله عنها عَن النَّبِيِّ ﷺ قَالَ السِّوَاكُ مَطْهَرَةٌ لِلْفَمِ مَرْضَاةٌ لِلرَّبِّ رواه النسائي في السنن الصغرى برقم ٥**

நபி ﷺ கூறினார்கள்: சிவாக் செய்வது வாயை சுத்தப்படுத்தக் கூடியதும், **رب** - ரப்பை திருப்திபடுத்தக்கூடியதும் ஆகும்.[48]

ஆதாரம் 2:

**عَنْ أَبِي هُرَيْرَةَ رضي الله عنه أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ لَوْلَا أَنْ أَشُقَّ عَلَى أُمَّتِي أَوْ عَلَى النَّاسِ لَأَمَرْتُهُمْ بِالسِّوَاكِ مَعَ كُلِّ صَلَاةٍ. رواه البخاري برقم ٨٣٨**



ரஸூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: நான் எனது உம்மத்திற்கு (அல்லது மக்களுக்கு) சிரமம் கொடுப்பதாக இல்லையென்றால் ஒவ்வொரு தொழுகையுடனும் சிவாக் செய்வதற்கு -பல் துலக்குவதற்கு அவர்களுக்கு கட்டளையிட்டிருப்பேன்.[49]

**இரண்டாவது சட்ட விளக்கம்**

## சிவாக் செய்வது எப்போது கட்டாயமாகிறது?

சில நேரங்களில் சிவாக் செய்வது அவசியமாகிறது.

அ) உளூ செய்யும்போது,

ஆ) தூக்கத்தில் இருந்து விழித்தப் பின்னர்

இ) வாய் வாடை மாறும் போது

ஈ) குர்ஆன் ஓதும் போது

உ) தொழுகையின் போது

ஊ) மஸ்ஜிதிற்குள் நுழையும் போது

எ) வீட்டிற்குள் நுழையும் போது

ஆதாரம்:

48. அறிவிப்பாளர்: ஆயிஷா رضي الله عنها, நூல்: சுனன் நசாயி சுக்ரா, எண்: 5
49. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா رضي الله عنه, நூல்: புகாரி, எண்: 838

عَنْ عَائِشَةَ ﵂ أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ إِذَا دَخَلَ بَيْتَهُ بَدَأَ بِالسِّوَاكِ رواه مسلم برقم ٣٧٢

நபி ﷺ அவர்கள் தனது வீட்டிற்குள் நுழைந்தால் முதலில் சிவாக் செய்வார்கள்.[50]

ஏ) நீண்ட நேரம் வாய்மூடி அமைதியாக இருந்த பின்னர்.

ஐ) பல் மஞ்சளித்த பின்னர்

ஆதாரம்:

عَنْ حُذَيْفَةَ ﵁ قَالَ كَانَ النَّبِيُّ ﷺ إِذَا قَامَ مِنْ اللَّيْلِ يَشُوصُ فَاهُ بِالسِّوَاكِ رواه البخاري برقم ٢٣٨

நபி ﷺ அவர்கள் இரவில் எழுந்தால் தனது வாயை மிஸ்வாக் குச்சியைக் கொண்டு தேய்த்து சுத்தம் செய்வார்கள்.[51]

ஒரு முஸ்லிம் அல்லாஹ்வை வணங்கும்போது மிக சுத்தமாகவும் மிகத் தூய்மையாகவும் இருக்க வேண்டும் என்பது கட்டளையாகும்.

**மூன்றாவது சட்ட விளக்கம்**

## எதன் மூலம் சிவாக் - பல் துலக்குவது?

ஈரமான, பிய்ந்து விடாத, ஈறுகளை காயப்படுத்தாத குச்சியைக் கொண்டு சிவாக் - பல் துலக்குவது சுன்னாவாகும்.

நபி ﷺ அவர்கள் அராக் மரத்தின் குச்சியைக் கொண்டு பல் துலக்குவார்கள். அது இல்லையென்றால் வலது அல்லது இடது கையின் விரலைக் கொண்டு பல் துலக்கலாம். இது பற்றி அலி ﵁ அவர்கள் அறிவிக்கின்ற ஒரு நபிமொழி முஸ்னது அஹ்மதில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

---

50. அறிவிப்பாளர்: ஆயிஷா ﵂, நூல்: முஸ்லிம், எண்: 372
51. அறிவிப்பாளர்: ஹுதைஃபா ﵁, நூல்: புகாரி, எண்: 238

**நான்காவது சட்ட விளக்கம்**

## சிவாக் – பல் துலக்குவதுடைய நன்மைகள்

சிவாக் செய்வது இவ்வுலகில் பற்களை சுத்தப்படுத்துகிறது, மறுமையில் ரப்பை - அல்லாஹ்வை திருப்திபடுத்துகிறது. ஆகவே, இந்த சுன்னாவை முஸ்லிம்கள் விடாமல், வழமையாக செய்துவர வேண்டும். இன்று பலர் இந்த சுன்னாவை அலட்சியம் செய்கின்றனர். பல மாதங்களாகியும் சிவாக் - பல் துலக்காமல் இருக்கின்றனர். இது ஒன்று அவர்களின் அலட்சியம் அல்லது அறியாமையாகும். மக்களுக்கு சிரமத்தை தந்துவிடுவோமோ என்று பயந்துதான் இதை கடமையாக்காமல் நபி ﷺ அவர்கள் விட்டுவிட்டார்கள்.



சிவாக் செய்வதில் இன்னும் பல நன்மைகள் உள்ளன.

- இது பற்களை உறுதிப்படுத்துகிறது.
- ஈறுகளை பலப்படுத்துகிறது.
- சப்தத்தை தெளிவுபடுத்துகிறது.
- உற்சாகத்தைத் தருகிறது.

**ஐந்தாவது சட்ட விளக்கம்**

## سنن الفطرة - இயற்கை விதிகள்

இந்த செயல்களுக்கு இயற்கை குணங்கள், இயற்கை பண்புகள் என்றும் சொல்லப்படும்.

அழகான தோற்றத்தில், சிறந்த உருவமைப்பில் மனிதன் இருக்க வேண்டுமென்று அல்லாஹ் விரும்புகின்றான். ஆகவே, அதற்கேற்ப சில இயல்பான நெறிகளை மனிதன் மீது அல்லாஹ் விதித்தான். ஆகவே, இந்த விதிகளை சரியாக செய்பவர் அல்லாஹ்வின் இயற்கையான நெறியை பேணுகின்றார்.

**عَنْ أَبِي هُرَيْرَةَ ﷺ عَنْ النَّبِيِّ ﷺ قَالَ الْفِطْرَةُ خَمْسٌ أَوْ خَمْسٌ مِنْ الْفِطْرَةِ الْخِتَانُ وَالِاسْتِحْدَادُ وَتَقْلِيمُ الْأَظْفَارِ وَنَتْفُ الْإِبِطِ وَقَصُّ الشَّارِبِ. رواه مسلم برقم ٦٨٤٢**

நபி ﷺ கூறினார்கள்: இயற்கை நெறி ஐந்தாகும். அல்லது ஐந்து காரியங்கள் இயற்கை நெறியில் உள்ளவையாகும். கத்னா -விருத்தசேதனம் செய்வது, மர்மஸ்தானத்தின் முடிகளை நீக்குவது, நகங்களை வெட்டுவது, அக்குள் முடியை பிடுங்குவது, மீசையை குறைப்பது.[52]

மற்றொரு நபிமொழியில் இந்த இயற்கை விதிகள் பத்து என்று வந்துள்ளது.

**عَنْ عَائِشَةَ ﷺ قَالَتْ قَالَ رَسُولُ اللَّهِ ﷺ عَشْرٌ مِنْ الْفِطْرَةِ قَصُّ الشَّارِبِ وَإِعْفَاءُ اللِّحْيَةِ وَالسِّوَاكُ وَاسْتِنْشَاقُ الْمَاءِ وَقَصُّ الْأَظْفَارِ وَغَسْلُ الْبَرَاجِمِ وَنَتْفُ الْإِبِطِ وَحَلْقُ الْعَانَةِ وَانْتِقَاصُ الْمَاءِ قَالَ زَكَرِيَّاءُ قَالَ مُصْعَبٌ وَنَسِيتُ الْعَاشِرَةَ إِلَّا أَنْ تَكُونَ الْمَضْمَضَةَ. رواه مسلم برقم ٣٨٤**

ரஸூலுல்லாஹ் ﷺ கூறுகிறார்கள்: பத்து காரியங்கள் இயற்கை நெறியில் உள்ளவையாகும். மீசையை குறைப்பது, தாடியை வளர்ப்பது, சிவாக் - பல் துலக்குவது, மூக்கை தண்ணீரால் சுத்தம் செய்வது, நகங்களை வெட்டுவது, விரல் முடிச்சுகளை (கைகளுக்கு மேல் புறத்தில் விரல்களில் மடக்கப்படுகின்ற இடங்களை) கழுவுவது, அக்குள் முடிகளை பிடுங்குவது, மர்மஸ்தான முடிகளை சிரைப்பது, மலம், ஜலம் கழித்த பின்னர் தண்ணீரால் சுத்தம் செய்வது, இந்த ஹதீஸின் அறிவிப்பாளர் முஸ்அப் ﷺ கூறுகிறார்: "நான் பத்தாவதை மறந்து விட்டேன். அனேகமாக, அது வாய் கொப்பளிப்பதாக இருக்க வேண்டும்."[53]

52. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﷺ, நூல்: முஸ்லிம், எண்: 6842
53. அறிவிப்பாளர்: ஆயிஷா ﷺ நூல்: முஸ்லிம் எண்: 384

**ஆறாவது சட்ட விளக்கம்**

மர்மஸ்தானத்தின் முடியைக் களைவது, மீசையை குறைப்பது, நகங்களை வெட்டுவது, அக்குள் முடியை பிடுங்குவது, ஆகிய இந்த செயல்களுக்குரிய கால அவகாசம் என்பது அவை வளர்ந்து விடுவதை கருத்தில் கொண்டு முடிவு செய்யப்படும். எனினும் நாற்பது நாட்களுக்கு அதிகமாக இவற்றை தள்ளிப் போடுவது கூடாது.

ஆதாரம்:



**عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ ﵁ قَالَ قَالَ أَنَسٌ وُقِّتَ لَنَا فِي قَصِّ الشَّارِبِ وَتَقْلِيمِ الْأَظْفَارِ وَنَتْفِ الْإِبِطِ وَحَلْقِ الْعَانَةِ أَنْ لَا نَتْرُكَ أَكْثَرَ مِنْ أَرْبَعِينَ لَيْلَةً رواه مسلم برقم ٢٥٨**

அனஸ் ﵁ அவர்கள் கூறுகிறார்கள்: மீசையை குறைப்பது, நகங்களை வெட்டுவது, அக்குள் முடியை பிடுங்குவது, மர்மஸ்தானத்தின் முடியைக் களைவது, ஆகிய இந்த செயல்களுக்குரிய கால அவகாசத்தை நபி ﷺ அவர்கள் நிர்ணயித்தார்கள். அதாவது, நாற்பது நாட்களுக்கு அதிகமாக நாங்கள் (அவற்றை) விடக் கூடாது.[54]

.............................................

54. நூல்: முஸ்லிம் 258

# وضوء - உளூ
# அங்க சுத்தம் செய்தல்

இதில் பல சட்ட விளக்கங்கள் உள்ளன.

**முதலாவது சட்ட விளக்கம்**

## உளூவின் வரையறை மற்றும் அதன் சட்டம்

**وضوء**- உளூ என்ற பதம் **وضاءة**-என்ற பதத்திலிருந்து எடுக்கப்பட்டதாகும். இதன் அகராதி பொருள் அழகு, சுத்தம் என்பதாகும்.

மார்க்க வழக்கத்தில் உளூ என்றால், வணக்க வழிபாட்டின் எண்ணத்துடன் மார்க்கம் கூறியிருக்கின்ற வழிமுறையில் நான்கு உறுப்புகளில் -முகம், இரு கைகள், தலை, இரு கால்களில்- தண்ணீரை பயன்படுத்துவதற்கு சொல்லப்படும்.

இதன் சட்டம்

சிறுதொடக்கு ஏற்பட்டவர் தொழுகையை அல்லது தவாஃபை அல்லது குர்ஆனை தொடுவதை நாடும்போது உளூ செய்வது கட்டாயமாகும்.[55]

55. குறிப்பு: தவாஃப் மற்றும் குர்ஆனை தொடுவதற்கு உளூ அவசியமா இல்லையா என்பதில் அறிஞர்களுக்கு இடையில் மாறுபட்ட பல கருத்துக்கள் உள்ளன. தொழுகைக்கு உளூ அவசியம் என்பதற்கு குர்ஆன், மற்றும் சரியான நபிமொழிகள், மற்றும் ஏகோபித்த முடிவுகள் ஆதாரமாக உள்ளன. மற்ற இரண்டிற்கும் தெளிவான, பலமான ஆதாரங்கள் இல்லாததால் அறிஞர்களுக்கு இடையில் இது குறித்து கருத்து வேற்றுமை நிலவுகின்றது. தவாஃப் செய்வதற்கு உளூ அவசியம், குர்ஆனை தொடுவதற்கு உளூ அவசியம் இல்லை என்ற கருத்தை நாம் தேர்ந்தெடுக்கின்றோம்.

**இரண்டாவது சட்ட விளக்கம்**

## உளூ செய்வது யார் மீது, எப்போது கட்டாயமாகிறது?

சிறுதொடக்கு ஏற்பட்டவர் தொழுகைக்கு முன் கண்டிப்பாக உளூ செய்ய வேண்டும்.

ஆதாரம் 1:

**يَاأَيُّهَا الَّذِينَ آمَنُوا إِذَا قُمْتُمْ إِلَى الصَّلَاةِ فَاغْسِلُوا وُجُوهَكُمْ وَأَيْدِيَكُمْ إِلَى الْمَرَافِقِ وَامْسَحُوا بِرُءُوسِكُمْ وَأَرْجُلَكُمْ إِلَى الْكَعْبَيْنِ**

நம்பிக்கையாளர்களே! நீங்கள் தொழுகைக்கு தயாரானால், உங்கள் முகங்களையும், உங்கள் கரங்களை முழங்கைகள் வரையும் கழுவுங்கள்! உங்கள் தலைகளை தண்ணீரால் தடவுங்கள்! இன்னும் உங்கள் கால்களையும் கரண்டைக்கால் வரை கழுவுங்கள். (அல்குர்ஆன் 5:6)



ஆதாரம் 2:

**عَنِ ابْنِ عُمَرَ ﵁ عَنْ النَّبِيِّ ﷺ قَالَ لَا تُقْبَلُ صَلَاةٌ بِغَيْرِ طُهُورٍ وَلَا صَدَقَةٌ مِنْ غُلُولٍ رواه الترمذي برقم ١**

நபி ﷺ கூறினார்கள்: சுத்தம் இல்லாத தொழுகை ஏற்கப்படாது. இன்னும், மோசடியிலிருந்து செய்யப்படுகின்ற தர்மம் ஏற்கப்படாது.[56]

ஆதாரம் 3:

**عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ عَنْ النَّبِيِّ ﷺ قَالَ لَا يَقْبَلُ اللّٰهُ صَلَاةَ أَحَدِكُمْ إِذَا أَحْدَثَ حَتَّى يَتَوَضَّأَ. رواه البخاري برقم ٦٤٤٠**

56. அறிவிப்பாளர்: இப்னு உமர் ﵁, நூல்: திர்மிதி, எண்:1

உங்களில் ஒருவர் சிறுதொடக்குடையவராக ஆகிவிட்டால் அவரின் தொழுகையை, அவர் உளூ செய்கின்றவரை அல்லாஹ் ஏற்கமாட்டான்.[57]

தொழுகைக்கு உளூ அவசியம் என்பதில் முஸ்லிம் அறிஞர்களில் யாருக்கும் மாற்று கருத்து இல்லை. இந்த சட்டம் குர்ஆன், ஹதீஸ், இஜ்மாஃ ஆகிய ஆதாரங்கள் மூலமாக உறுதியான ஒரு விஷயமாகும்.

## உளூ யார் மீது கடமை?

பருவ வயதை அடைந்த, புத்தி சுவாதீனமுள்ள முஸ்லிம் தொழ நாடும்போது அல்லது எதற்கு உளூ அவசியமோ அதை செய்ய நாடும்போது அவர் உளூ செய்வது கட்டாயமாகும்.

## உளூ எப்போது கடமை?

(ஃபர்ழான அல்லது நஃபிலான) தொழுகையை நிறைவேற்றும்போது அல்லது குர்ஆனைத் தொடுவது, தவாஃப் செய்வது போன்ற எந்த ஒரு காரியத்தை செய்வதற்கு உளூ அவசியமோ அதை ஒருவர் செய்ய நாடும்போது, உளூ செய்வது கட்டாயமாகும். அந்தக் காரியம் ஒரு குறிப்பிட்ட நேரத்தோடு சம்மந்தப்பட்டதாக இல்லையென்றாலும் சரியே.

**மூன்றாவது சட்ட விளக்கம்**

## உளூவின் நிபந்தனைகள்

உளூ சரியாகுவதற்கு பின்வருகின்ற நிபந்தனைகள் அவசியம்.

**அ) إسلام - இஸ்லாம் - அவர் முஸ்லிமாக இருக்க வேண்டும்.**

**ஆ) عقل - அக்ல் - புத்தி சுவாதீனம் உள்ளவராக இருக்க வேண்டும்.**

**இ) تمييز - தம்யீஸ் - பிரித்தறிகின்ற பக்குவம் இருக்க வேண்டும்.**

ஆகவே, காஃபிர் - முஸ்லிம் அல்லாதவர் உளூ செய்வது சரியாகாது. பைத்தியக்காரர் உடைய உளூவும் சரியாகாது. பிரித்தறிகின்ற பக்குவம் இல்லாத சிறுவரின் உளூவும் சரியாகாது.

**ஈ) நிய்யத் - மனதில் எண்ணம் இருக்க வேண்டும்.**

57. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﷺ, நூல்: புகாரி, எண்: 6440

عَنْ عُمَرَ بْنَ الْخَطَّابِ ﵁ قَالَ سَمِعْتُ رَسُولَ اللهِ ﷺ يَقُولُ إِنَّمَا الْأَعْمَالُ بِالنِّيَّةِ. رواه البخاري برقم ١

உமர் இப்னுல் கத்தாப் ﵁ கூறுகிறார்கள்: அமல்கள் எல்லாம் எண்ணத்தைக் கொண்டுதான் என்று ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறியதை நான் செவியுற்றேன்.[58]

நிய்யத் என்பது மனதில் இருக்க வேண்டிய ஒன்றாகும். நிய்யத்தை வாயினால் மொழிவது கூடாது. நபி ﷺ அவர்கள் அவ்வாறு செய்ததில்லை.

**உ) சுத்தமான தண்ணீர் இருக்க வேண்டும். அசுத்தமான நீரைக் கொண்டு உளூ செய்வது கூடாது.**

**ஊ) தோலில் தண்ணீர் படுவதை தடுக்கக்கூடிய ஏதும் ஒட்டி இருந்தால் முதலில் அவற்றை நீக்க வேண்டும். மெழுகு, பெயிண்ட், ஸ்டிக்கர், நக பாளிஷ் போன்ற ஏதும் உளூவின் உறுப்புகளில் ஒட்டி இருந்தால் முதலில் அவற்றை அப்புறப்படுத்த வேண்டும்.**

**எ) மலம், ஜலம் கழித்திருந்தால் தண்ணீரால், அல்லது கற்களால், அந்த இடத்தை சுத்தம் செய்திருக்க வேண்டும்.**

**ஏ) உளூ செய்யும்போது இடைவெளி விடாமல், தொடர்ந்து செய்ய வேண்டும்.**

**ஐ) உளூவின் உறுப்புகளை கழுவுவதில் குர்ஆன், ஹதீஸில் கூறப்பட்டுள்ள வரிசை முறையைப் பின்பற்ற வேண்டும்.**

**ஒ) கழுவ வேண்டிய உறுப்புகளை முழுமையாக கழுவ வேண்டும்.**

**நான்காவது சட்ட விளக்கம்**

## உளூவின் ஃபர்ழுகள்

அதாவது, உளூவில் கட்டாயம் பேண வேண்டிய செயல்கள்

58. நூல்: புகாரி, எண்: 1

அவை மொத்தம் ஆறு ஆகும்.

**1) முகத்தை முழுமையாக கழுவ வேண்டும்.** இதில் வாய் கொப்பளிப்பதும் மூக்கில் தண்ணீர் செலுத்துவதும் உள்ளடங்கும். ஏனெனில், வாயும் மூக்கும் முகத்தில் உள்ளவையாகும்.[59]

**2) இரண்டு கரங்களையும் முழங்கை வரை கழுவ வேண்டும்.**

**3) தலை முழுவதையும் காதுகள் உள்பட நனைந்த கையால் தடவ வேண்டும்.**

ஆதாரம்:

**عَنْ عَبْدِ اللّٰهِ بْنِ زَيْدٍ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ الْأُذُنَانِ مِنْ الرَّأْسِ. رواه ابن ماجة برقم ٤٣٧**

ரஸூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: இரண்டு காதுகளும் தலையைச் சேர்ந்ததாகும்.[60]

தலையில் சில பகுதியில் **مسح** - மஸ்ஹ் செய்துவிட்டு சில பகுதியை விடுவது கூடாது.

**4) இரண்டு கால்களையும் கரண்டைக்கால் வரை கழுவ வேண்டும்.**

**5) உறுப்புகளை குர்ஆன், சுன்னாவில் கூறப்பட்ட வரிசை முறையில் கழுவ வேண்டும்.**

உளூவைப் பற்றி அல்லாஹ் கூறும்போது எப்படி உறுப்புகளை வரிசைப்படுத்தி கூறி இருக்கின்றானோ அந்த வரிசைப்படிதான் உளூ செய்ய வேண்டும். நபி ﷺ அவர்கள் எப்படி உளூ செய்தார்கள் என்று அறிவிக்கப்படுகின்ற அறிவிப்புகளில் நபி ﷺ அவர்கள் இந்த உறுப்புகளை வரிசையாகத்தான் கழுவி இருக்கின்றார்கள் என்று பதிவு செய்யப்பட்டுள்ளது.

59. வாய் கொப்பளிப்பதையும் மூக்கில் தண்ணீர் செலுத்துவதையும் சுன்னா என்று பல அறிஞர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

60. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு ஸய்து ﵁, நூல்: இப்னு மாஜா, எண்: 437

**6) தொடர்ச்சியாக செய்ய வேண்டும்.** அதாவது, ஓர் உறுப்பை கழுவிய பின்னர் அடுத்த உறுப்பை உடனடியாக, தாமதமின்றி கழுவ வேண்டும். நபி ﷺ அவர்கள் தொடர்ச்சியாகத்தான் உளூ செய்தார்கள். உறுப்புகளை கழுவுவதில் அவர்கள் நீண்ட இடைவெளிகளை விட்டதில்லை. மேலும் பின்வருகின்ற ஒரு நபிமொழியும் இதற்கு ஆதாரமாக உள்ளது.

**عَنْ بَعْضِ أَصْحَابِ النَّبِيِّ ﷺ أَنَّ النَّبِيَّ ﷺ رَأَى رَجُلًا يُصَلِّ وَفِي ظَهْرِ قَدَمِهِ لُمْعَةٌ قَدْرُ الدِّرْهَمِ لَمْ يُصِبْهَا الْمَاءُ فَأَمَرَهُ النَّبِيُّ ﷺ أَنْ يُعِيدَ الْوُضُوءَ وَالصَّلَاةَ**

**رواه أبو داود برقم ١٤٩**

தொழுதுகொண்டிருந்த ஒரு மனிதரை நபி ﷺ அவர்கள் பார்த்தார்கள். அவருடைய பாதத்தின் மேல் பகுதியில் ஒரு திர்ஹம் அளவு இடம் வெளிச்சமாக - நனையாமல் இருந்தது. அவர் (தனது) உளூவையும் தொழுகையையும் திரும்பச் செய்யும்படி நபி ﷺ அவர்கள் அவருக்கு கட்டளை இட்டார்கள்.[61]

**கருத்து:** உளூவின் உறுப்புகளை தொடர்ச்சியாக கழுவுவது கட்டாயமான ஒன்றாக இல்லையென்றால் விடுபட்ட இடத்தை மட்டும் கழுவும்படி நபி ﷺ அவர்கள் அவருக்கு கூறியிருப்பார்கள். உளூவை முழுமையாக மீண்டும் செய்யும்படி கூறியிருக்க மாட்டார்கள்.

**ஐந்தாவது சட்ட விளக்கம்**

## உளூவின் சுன்னத்துகள்

உளூ செய்யும்போது பேண வேண்டிய சில செயல்கள் உள்ளன. அவற்றை செய்வதால் நன்மைகள் கிடைக்கும். அவற்றை ஒருவர் (சுன்னத்தைப் புறக்கணிக்க வேண்டும் என்ற எண்ணமில்லாமல்) விட்டுவிட்டால் அது அவர் மீது குற்றமாகாது. இத்தகைய செயல்களுக்கு உளூவின் சுன்னத்துகள் என்று கூறப்படுகின்றன.

அந்த சுன்னத்துகள்:

61. அறிவிப்பாளர்: சில நபித்தோழர்கள், நூல்: அபூ தாவூத், எண்: 149

**1) உளூவின் ஆரம்பத்தில் பிஸ்மில்லாஹ் சொல்வது**

ஆதாரம்:

عن أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ ﷺ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ لَا وُضُوءَ لِمَنْ لَمْ يَذْكُرْ اسْمَ اللهِ عَلَيْهِ. رواه أحمد برقم ١٠٩٤٣

ரஸூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: அல்லாஹ்வின் பெயரை யார் உளூவில் கூறவில்லையோ அவருக்கு உளூவே இல்லை.[62]

**2) சிவாக் - பல் துலக்குவது**

ஆதாரம்:

عَنْ أَبِي هُرَيْرَةَ ﷺ عَنْ رَسُولِ اللهِ ﷺ أَنَّهُ قَالَ لَوْلَا أَنْ أَشُقَّ عَلَى أُمَّتِي لَأَمَرْتُهُمْ بِالسِّوَاكِ مَعَ كُلِّ وُضُوءٍ. رواه أحمد برقم ٩٥٤٨

ரஸூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: நான் எனது சமுதாயத்திற்கு சிரமம் அளித்து விடுவேன் என்று இல்லையென்றால் ஒவ்வொரு முறை உளூ செய்யும்போதும் சிவாக் செய்யும்படி -பல் துலக்கும்படி அவர்களுக்கு கட்டளையிட்டிருப்பேன்.[63]

**3) உளூவின் ஆரம்பத்தில் இரு கைகளையும் மணிக்கட்டுவரை கழுவுவது.**

ஆதாரம்:

عَنِ الْمِقْدَامِ بْنِ مَعْدِي كَرِبَ الْكِنْدِيِّ ﷺ قَالَ أُتِيَ رَسُولُ اللهِ ﷺ بِوَضُوءٍ فَتَوَضَّأَ فَغَسَلَ كَفَّيْهِ ثَلَاثًا. رواه أبو داود برقم ١٠٥

உளூ செய்வதற்குரிய தண்ணீர் நபி ﷺ அவர்களிடம் கொண்டு

62. அறிவிப்பாளர்: அபூ சயீது அல்குத்ரி ﷺ, நூல்: அஹ்மது, எண்: 10943
63. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﷺ, நூல்: அஹ்மது, எண்: 9548

வரப்பட்டது. அவர்கள் உளூ செய்(ய ஆரம்பித்)தார்கள். (முதலில்) தனது முன்னங்கைகளை கழுவினார்கள்.[64]

**4) அண்ணார்ந்து நன்கு வாய் கொப்பளிப்பது, மூக்கில் தண்ணீர் செலுத்தி, உறிஞ்சி மூக்கை சுத்தம் செய்வது.**

நோன்பாளியாக இருந்தால் அண்ணார்ந்து வாய் கொப்பளிப்பதையும் மூக்கில் தண்ணீரை உறிஞ்சுவதையும் தவிர்க்க வேண்டும். வெறும் வாய் கொப்பளிப்பதையும் மூக்கில் தண்ணீர் செலுத்தி சுத்தம் செய்வதையும் மட்டும் செய்ய வேண்டும்.

ஆதாரம் 1:

عَنِ الْمِقْدَامِ بْنِ مَعْدِي كَرِبَ الْكِنْدِيِّ ﵁ قَالَ أُتِيَ رَسُولُ اللهِ ﷺ بِوَضُوءٍ فَتَوَضَّأَ فَغَسَلَ كَفَّيْهِ ثَلَاثًا ثُمَّ تَمَضْمَضَ وَاسْتَنْشَقَ ثَلَاثًا رواه أبو داود برقم ١٠٥

உளூ செய்வதற்குரிய தண்ணீர் நபி ﷺ அவர்களிடம் கொண்டு வரப்பட்டது. அவர்கள் உளூ செய்(ய ஆரம்பித்)தார்கள். தனது முன்னங் கைகளை கழுவினார்கள். பிறகு, மூன்று முறை வாய் கொப்பளித்தார்கள்; (மூன்றுமுறை) மூக்கில் தண்ணீர் செலுத்தி சுத்தம் செய்தார்கள்.[65]

ஆதாரம் 2:

عَنْ لَقِيطِ بْنِ صَبْرَةَ ﵁ قَالَ قُلْتُ يَا رَسُولَ اللهِ أَخْبِرْنِي عَنْ الْوُضُوءِ قَالَ أَسْبِغْ الْوُضُوءَ وَبَالِغْ فِي الِاسْتِنْشَاقِ إِلَّا أَنْ تَكُونَ صَائِمًا رواه ابن ماجة برقم ٤٠١

லக்கீத் இப்னு ஸப்ரா ﵁ கூறுகின்றார்: அல்லாஹ்வின் தூதரே! உளூவைப் பற்றி எனக்கு அறிவியுங்கள் என்று நான் கூறினேன். அதற்கு நபி ﷺ கூறினார்கள்: “உளூவை முழுமையாக செய்! மூக்கை சுத்தம் செய்யும்போது நன்றாக தண்ணீரை உறிஞ்சி சுத்தம் செய், நீர் நோன்பாளியாக இருந்தாலே தவிர.”[66]

64. அறிவிப்பாளர்: மிக்தாம் இப்னு மஃதீ கரிப் அல்கிந்தி ﵁, நூல்: அபூ தாவூத், எண்: 105
65. அறிவிப்பாளர்: மிக்தாம் இப்னு மஃதீ கரிப் அல்கிந்தி ﵁, நூல்: அபூ தாவூத், எண்: 105
66. நூல்: இப்னு மாஜா, எண்: 401

**5) உறுப்புகளை தேய்த்து கழுவ வேண்டும். அடர்த்தியான தாடியை கோதிக் கழுவ வேண்டும்.**

ஆதாரம் 1:

**عَنْ عَبْدِ اللهِ بْنِ زَيْدٍ ﵁ أَنَّ النَّبِيَّ ﷺ أُتِيَ بِثُلُثَيْ مُدٍّ فَتَوَضَّأَ فَجَعَلَ يَدْلُكُ ذِرَاعَيْهِ. رواه ابن خزيمة برقم ١١٨**

நபி ﷺ அவர்களிடம் ஒரு முத்[67] உடைய மூன்றில் இரு மடங்கு அளவு தண்ணீர் கொண்டு வரப்பட்டது. அவர்கள் உளூ செய்தார்கள். அப்போது தனது இரு குடங்கைகளையும் தேய்த்துக் கழுவினார்கள்.[68]

ஆதாரம் 2:

**عَنِ الْمُسْتَوْرِدِ بْنِ شَدَّادٍ ﵁ قَالَ رَأَيْتُ رَسُولَ اللهِ ﷺ إِذَا تَوَضَّأَ يَدْلُكُ أَصَابِعَ رِجْلَيْهِ بِخِنْصَرِهِ. رواه أبو داود برقم ١٢٧**

முஸ்தவ்ரித் இப்னு ஷத்தாத் ﵁ கூறுகிறார்கள்: "நபி ﷺ அவர்கள் உளூ செய்தால் தனது இரண்டு கால்களின் விரல்களை தனது சுண்டு விரலால் தேய்த்து (கோதி) கழுவுவதை நான் பார்த்தேன்."[69]

ஆதாரம் 3:

**عَنْ أَنَسٍ يَعْنِي ابْنَ مَالِكٍ ﵁ أَنَّ رَسُولَ اللهِ ﷺ كَانَ إِذَا تَوَضَّأَ أَخَذَ كَفًّا مِنْ مَاءٍ فَأَدْخَلَهُ تَحْتَ حَنَكِهِ فَخَلَّلَ بِهِ لِحْيَتَهُ وَقَالَ هَكَذَا أَمَرَنِي رَبِّي عَزَّ وَجَلَّ. رواه أبو داود برقم ١٢٤**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் உளூ செய்தால் ஒரு கை தண்ணீரை

---

67. **مُد** – முத் என்றால் சுமார் 628 மில்லி லிட்டர் ஆகும். முத்தின் மூன்றில் இரண்டு பகுதி என்றால் 418 மில்லி லிட்டர் (அரை லிட்டருக்கும் கொஞ்சம் குறைவான) அளவு ஆகும்

68. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு ஸைது ﵁, நூல்: இப்னு குஸைமா, எண்: 118

69. நூல்: அபூ தாவூத், எண்: 127

எடுத்து அதை தனது தாடிக்குள் நுழைத்து அதன் மூலம் தனது தாடியை கோதி கழுவுவார்கள். மேலும் கூறுவார்கள்: “இப்படித்தான் எனது ரப்பு எனக்கு கட்டளையிட்டிருக்கின்றான்.”[70]

**6) கைகளையும் கால்களையும் கழுவும்போது முதலில் வலதையும், பிறகு, இடதையும் கழுவ வேண்டும்.**

ஆதாரம்:

**عَنْ عَائِشَةَ ﵂ قَالَتْ كَانَ رَسُولُ اللهِ ﷺ يُحِبُّ التَّيَامُنَ يَأْخُذُ بِيَمِينِهِ وَيُعْطِي بِيَمِينِهِ وَيُحِبُّ التَّيَمُّنَ فِي جَمِيعِ أُمُورِهِ. رواه النسائي برقم ٤٩٧٣**

ஆயிஷா ﵂ கூறுகிறார்கள்: ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் வலது பக்கத்தை விரும்புகின்றவர்களாக இருந்தார்கள். தனது வலது கையால் வாங்குவார்கள். வலது கையால் கொடுப்பார்கள். தனது எல்லாக் காரியங்களிலும் வலது பக்கத்தில் இருந்து ஆரம்பிப்பதை விரும்புவார்கள்.[71]



**7) முகத்தையும் கைகளையும் கால்களையும் கழுவும் போது மூன்று முறை கழுவ வேண்டும். ஒரு முறை கழுவுவது கட்டாயமாகும். மூன்று முறை கழுவுவது சுன்னாவாகும்.**

ஆதாரம்:

**عنْ جَابِرٍ ﵁ أَنَّ النَّبِيَّ ﷺ تَوَضَّأَ مَرَّةً مَرَّةً وَمَرَّتَيْنِ مَرَّتَيْنِ وَثَلَاثًا ثَلَاثًا قَالَ نَعَمْ. رواه الترمذي برقم ٤٣**

நபி ﷺ அவர்கள் ஒரு முறை, ஒரு முறை, இரண்டு முறை, இரண்டு முறை, மூன்று முறை, மூன்று முறை உளூ செய்தார்கள் (-உறுப்புகளை கழுவினார்கள்).[72]

70. அறிவிப்பாளர்: அனஸ் (இப்னு மாலிக்) ﵁, நூல்: அபூ தாவூத், எண்: 124
71. நூல்: நசாயி, எண்: 4973
72. அறிவிப்பாளர்: ஜாபிர் ﵁, நூல்: திர்மிதி, எண்: 43

**8) உளூ செய்த பின்னர் நபிமொழியில் வந்துள்ள துஆவை ஓத வேண்டும்.**

ஆதாரம்:

**عَنْ عُمَرَ بْنِ الْخَطَّابِ ﷺ قَالَ قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ مَنْ تَوَضَّأَ فَأَحْسَنَ الْوُضُوءَ ثُمَّ قَالَ أَشْهَدُ أَنْ لَا إِلَهَ إِلَّا اللّٰهُ وَحْدَهُ لَا شَرِيكَ لَهُ وَأَشْهَدُ أَنَّ مُحَمَّدًا عَبْدُهُ وَرَسُولُهُ اَللّٰهُمَّ اجْعَلْنِي مِنْ التَّوَّابِينَ وَاجْعَلْنِي مِنْ الْمُتَطَهِّرِينَ فُتِحَتْ لَهُ ثَمَانِيَةُ أَبْوَابِ الْجَنَّةِ يَدْخُلُ مِنْ أَيِّهَا شَاءَ. رواه الترمذي برقم ٥٠**

ரஸூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: யார் உளூ செய்வாரோ, அந்த உளூவை மிக அழகிய முறையில் செய்வாரோ, பிறகு,

**أَشْهَدُ أَنْ لَا إِلَهَ إِلَّا اللّٰهُ وَحْدَهُ لَا شَرِيكَ لَهُ**
**وَأَشْهَدُ أَنَّ مُحَمَّدًا عَبْدُهُ وَرَسُولُهُ**
**اَللّٰهُمَّ اجْعَلْنِي مِنْ التَّوَّابِينَ وَاجْعَلْنِي مِنْ الْمُتَطَهِّرِينَ**

என்ற இந்த திக்ரை கூறுவாரோ, அவருக்கு சொர்க்கத்தின் எட்டு வாசல்களும் திறக்கப்படும். அவர் அவற்றில் எதில் வேண்டுமானாலும் நுழைவார்.[73]

துஆவின் பொருள்: வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை; அவனுக்கு இணை துணை இல்லை என்று நான் சாட்சி சொல்கிறேன். மேலும், முஹம்மது ﷺ, அவர்கள் அவனுடைய அடியாரும் தூதரும் ஆவார் என்று நான் சாட்சி சொல்கிறேன். அல்லாஹ்வே! என்னை பாவமீட்சி கோருவோரில் ஆக்கு! மேலும், என்னைப் பரிசுத்தமானவர்களில் ஆக்கு![74]

---

73. அறிவிப்பாளர்: உமர் இப்னுல் கத்தாப் ﷺ, நூல்: திர்மிதி, எண்: 50

74. நூல்: ஸஹீஹ் முஸ்லிம், திர்மிதி

**ஆறாவது சட்ட விளக்கம்:**

## உளூவை முறிக்கின்ற காரியங்கள்

ஆறு காரியங்கள் உளூவை முறித்து விடும்.

**1) முன். பின் துவாரத்திலிருந்து வெளியேறக் கூடியது உளூவை முறித்து விடும்.**

சிறுநீர் அல்லது மலம் வெளியேறும் இடத்திலிருந்து எது வெளியேறினாலும் உளூ முறிந்து விடும். அதாவது சிறுநீர், அல்லது மலம், விந்து, வெள்ளைப் படுதல், பெண்களுக்கு வருகின்ற இஸ்திஹாளா (-மாத தொடக்கைவிட அதிகமாக வரும்) இரத்தம், காற்று பிரிதல், இவை கொஞ்சமாக இருந்தாலும் அல்லது அதிகமாக இருந்தாலும் உளூவை முறித்து விடும்.



ஆதாரம் 1: அல்லாஹ் கூறுகின்றான்:

أَوْ جَاءَ أَحَدٌ مِنْكُمْ مِنَ الْغَائِطِ

அல்லது உங்களில் ஒருவர் கழிப்பிடம் சென்று வந்தால் (உளூ செய்யாமல், அல்லது தண்ணீர் இல்லையென்றால் தயம்மும் செய்யாமல் தொழுகையை நெருங்காதீர்கள்!). (அல்குர்ஆன் 4:43)

இந்த வசனத்தில் சொல்லப்பட்டுள்ள “நீங்கள் கழிப்பிடம் சென்று வந்தால்” என்ற வாக்கியம் முன், பின் துவாரங்களில் இருந்து வெளியேறக்கூடிய அனைத்தையும் எடுத்துக் கொள்ளும்.

ஆதாரம் 2:

عَنْ أَبِي هُرَيْرَةَ ﷺ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ لَا يَقْبَلُ اللهُ صَلَاةَ أَحَدِكُمْ إِذَا أَحْدَثَ حَتَّى يَتَوَضَّأَ. رواه البخاري برقم ٦٤٤٠

நபி ﷺ கூறினார்கள்: உங்களில் ஒருவர் தொடக்குடையவராக ஆகிவிட்டால் அவர் உளூ செய்கின்றவரை அவரின் தொழுகையை அல்லாஹ் அங்கீகரிக்க மாட்டான்.[75]

75. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﷺ, நூல்: புகாரி, எண்: 6440

ஆதாரம் 3:

**عَنْ زِرِّ بْنِ حُبَيْشٍ ﷺ قَالَ أَتَيْتُ رَجُلًا يُدْعَى صَفْوَانَ بْنَ عَسَّالٍ ﷺ فَقَعَدْتُ عَلَى بَابِهِ فَخَرَجَ فَقَالَ مَا شَأْنُكَ قُلْتُ أَطْلُبُ الْعِلْمَ قَالَ إِنَّ الْمَلَائِكَةَ تَضَعُ أَجْنِحَتَهَا لِطَالِبِ الْعِلْمِ رِضًا بِمَا يَطْلُبُ فَقَالَ عَنْ أَيِّ شَيْءٍ تَسْأَلُ قُلْتُ عَنْ الْخُفَّيْنِ قَالَ كُنَّا إِذَا كُنَّا مَعَ رَسُولِ اللَّهِ ﷺ فِي سَفَرٍ أَمَرَنَا أَنْ لَا نَنْزِعَهُ ثَلَاثًا إِلَّا مِنْ جَنَابَةٍ وَلَكِنْ مِنْ غَائِطٍ وَبَوْلٍ وَنَوْمٍ. رواه النسائي برقم ١٥٨**

ஸிர் இப்னு ஹுபைஷ்[76] ﷺ கூறுகிறார்: நான் ஸஃப்வான் இப்னு அஸ்ஸால் என்று அழைக்கப்படுகின்ற ஒரு மனிதரிடம் வந்து அவரின் வாசலில் உட்கார்ந்து கொண்டேன். அவர் வெளியே வந்தபோது உனது தேவை என்ன என்று கேட்டார்? நான் கூறினேன்: நான் கல்வியைத் தேடி வந்துள்ளேன். அவர் கூறினார்: நிச்சயமாக வானவர்கள் தங்களது இறக்கைகளை கல்வியைத் தேடுபவருக்காக அவரின் கல்வித் தேடலை திருப்தி கொண்டு தாழ்த்துகின்றனர். பிறகு, அவர் கேட்டார், நீர் எதைப் பற்றி கேட்கிறீர்? குஃப் -காலுறைகளை அணிவதின் சட்டத்தைப் பற்றி என்று நான் கூறினேன். அவர் கூறினார்: நாங்கள் ரஸூலுல்லாஹ்வுடன் பயணத்தில் இருந்தோம். மூன்று நாட்கள் நாங்கள் குஃபை - காலுறையை கழட்ட வேண்டாம், பெருந்தொடக்கு ஏற்பட்டாலே தவிர. (பெருந்தொடக்கு ஏற்பட்டு விட்டால் குளிக்கும் போது காலுறையை கழட்டி விட்டு குளிக்க வேண்டும்.) என்றாலும், மலம், ஜலம் இன்னும் தூக்கத்தினால் (உளூ முறிந்து விட்டால் காலுறையை கழட்டாமல், அதன் மீது நீங்கள் மஸ்ஹ் செய்யுங்கள்) என்று எங்களுக்கு கட்டளையிட்டார்கள்.[77]

76. ஸிர் இப்னு ஹுபைஷ் ﷺ நபியவர்களின் காலத்தில் வாழ்ந்தவர். ஆனால் நபியவர்களை சந்திக்கவில்லை. ஹிஜ்ரி எண்பத்தி ஒன்றில் இறப்பை எய்தினார். குர்ஆனையும் ஹதீஸையும் கற்றுத் தேர்ந்த தாபியீயாக விளங்கினார்.

77. நூல்: நசாயி, எண்: 158

**கருத்து:** இந்த ஹதீஸில் உளூவை முறிக்கக்கூடியவையாக மூன்று காரியங்கள் கூறப்பட்டுள்ளன. இந்த மூன்றில் ஒன்று நிகழ்ந்து விட்டால் ஹதஸ் - தொடக்கு ஏற்பட்டுவிடும். பிறகு, உளூ செய்யாமல் தொழுவது கூடாது.

ஆதாரம் 4:

**عَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ ﵁ قَالَ سُئِلَ النَّبِيُّ ﷺ عَنْ التَّشَبُّهِ فِي الصَّلَاةِ فَقَالَ لَا يَنْصَرِفْ حَتَّى يَسْمَعَ صَوْتًا أَوْ يَجِدَ رِيحًا. رواه ابن ماجة برقم ٥٠٧**

தொழுகையில் (இருக்கின்றபோது உளூ முறிந்து விட்டதா, இல்லையா என்று) சந்தேகம் ஏற்படுவதைப் பற்றி நபி ﷺ அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள் கூறினார்கள்: “(காற்று பிரிந்ததின்) சப்தத்தை செவியுறுகின்ற வரை, அல்லது துர்வாடையை உணர்கின்ற வரை அவர் தொழுகையில் இருந்து வெளியேறக் கூடாது.”[78]



**கருத்து:** காற்று பிரிவது உளூவை முறித்து, ஹதஸை ஏற்படுத்திவிடும் என்பதை இந்த ஹதீஸ் தெளிவுபடுத்துகிறது.

**2) உடலின் வேறு பகுதியிலிருந்து அசுத்தம் வெளியேறினாலும் உளூ முறிந்து விடும்.** உதாரணமாக, மிக அதிகமாக வாந்தி எடுத்து விட்டால், அல்லது அதிக இரத்தம் வெளியேறி விட்டால் பேணுதலின் அடிப்படையில் மீண்டும் உளூ செய்வது சிறந்ததாகும். வாந்தி அல்லது இரத்தம் குறைவான அளவில் இருந்தால் மீண்டும் உளூ செய்ய வேண்டிய அவசியம் இல்லை.[79]

**3) அறிவு நீங்கி விடுவதும், மயக்கம் அல்லது தூக்கத்தினால் சுய நினைவை இழந்து விடுவதும் உளூவை முறித்து விடும்.**

ஆதாரம் 1:

78. நூல்: இப்னு மாஜா 507

79. குறிப்பு: வாந்தியும் இரத்தமும் உளூவை முறித்து விடும் என்ற கருத்து ஹதீஸின் அடிப்படையில் பலவீனமானதாகும். வாந்தியும் இரத்தமும் உளூவை முறிக்காது என்ற கூற்றுதான் ஏற்கத்தக்க உறுதியான கருத்தாகும்.

ஸஃப்வான் இப்னு அஸ்ஸாலிடமிருந்து இமாம் நசாயி ﷺ (ஹதீஸ் எண் 158ல்) அறிவிக்கின்ற ஒரு நபிமொழி இதற்கு முன் கூறப்பட்டது. அதில், உளூவை முறிக்கின்ற காரியங்களில் தூக்கத்தையும் நபி ﷺ அவர்கள் சேர்த்துள்ளார்கள்.

ஆதாரம் 2:

**عَنْ عَلِيِّ بْنِ أَبِي طَالِبٍ ﵁ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ الْعَيْنُ وِكَاءُ السَّهِ فَمَنْ نَامَ فَلْيَتَوَضَّأْ. رواه ابن ماجة برقم ٤٧٠**

கண்தான் இருக்கையின் கயிறாகும். யார் தூங்கி விடுவாரோ அவர் உளூ செய்து கொள்ளட்டும் என்று ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்.[80]

**கருத்து:** விழிப்பில் இருக்கும்போது காற்று வெளியேறுவதை நம்மால் உணர முடியும். நம்மால் காற்றை வெளியேற்றவும் முடியும், தடுக்கவும் முடியும். ஆனால், கண் அயர்ந்து தூங்கி விட்டால் வயிற்றில் காற்று வெளியேறும் பாதை நமது கட்டுப்பாட்டை விட்டு நீங்கி விடுகிறது. எனவே, காற்று வெளியேறுவதை நம்மால் உணர முடியாது. ஆகவே, தூங்குவதையும் உளூவை முறிக்கக்கூடிய ஒரு செயலாகவே மார்க்கம் முடிவு செய்கிறது.

உணர்வு இல்லாத அளவிற்கு, அயர்ந்து தூங்குவதுதான் உளூவை முறித்து விடும். அது எந்த வகையில் தூங்கினாலும் சரி. ஆகவே, உணர்வுகளை நீக்கி விடாத அளவிற்குள்ள சிறு தூக்கம் உளூவை முறிக்காது.

ஆதாரம்:

**عَنْ أَنَس ﵁ قَالَ كَانَ أَصْحَابُ رَسُولِ اللهِ ﷺ يَنَامُونَ ثُمَّ يُصَلُّونَ وَلَا يَتَوَضَّئُونَ. رواه مسلم برقم ٥٦٦**

---

80. அறிவிப்பாளர்: அலி இப்னு அபீ தாலிப் ﵁, நூல்: இப்னு மாஜா, எண்: 470

“ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களுடைய தோழர்கள் தூங்குவார்கள், பிறகு, தொழுவார்கள். ஆனால், உளூ செய்ய மாட்டார்கள்.”[81]

**கருத்து:** தொழுகையை எதிர்பார்த்திருக்கின்றபோது உட்கார்ந்த நிலையில் வருகின்ற சிறு தூக்கம் உளூவை முறிக்காது என்பதால்தான் நபித்தோழர்கள் தொழுகைக்கு இகாமத் சொல்லப்பட்டவுடன் அதே உளூவைக் கொண்டு தொழுதார்கள். மீண்டும் அவர்கள் உளூ செய்யவில்லை. சிறு தூக்கமும் உளூவை முறிக்கக்கூடியதாக இருந்திருந்தால் அவர்கள் மீண்டும் உளூ செய்துதான் தொழுதிருப்பார்கள்.

**4) மர்மஸ்தானத்தை திரையின்றி தொடுவதும் உளூவை முறித்து விடும்.**

ஆதாரம் 1:



**عَنْ بُسْرَةَ بِنْتِ صَفْوَانَ رضي الله عنها أَنَّهَا سَمِعَتْ رَسُولَ اللّٰهِ ﷺ يَقُولُ مَنْ مَسَّ ذَكَرَهُ فَلْيَتَوَضَّأْ. رواه أبو داود برقم ١٥٤**

யார் தனது மர்மஸ்தானத்தை தொடுவாரோ அவர் உளூ செய்யட்டும் என ரஸூலுல்லாஹ் ﷺ கூறியதை நான் செவியுற்றேன் என்று புஸ்ரா பின்த் ஸஃப்வான் رضي الله عنها கூறுகிறார்கள்.[82]

ஆதாரம் 2:

**عَنْ أُمِّ حَبِيبَةَ رضي الله عنها قَالَتْ سَمِعْتُ رَسُولَ اللّٰهِ ﷺ يَقُولُ مَنْ مَسَّ فَرْجَهُ فَلْيَتَوَضَّأْ. رواه ابن ماجة برقم ٤٧٤**

யார் தனது மர்மஸ்தானத்தை தொடுவாரோ அவர் உளூ செய்யட்டும் என்று ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறியதை நான் செவியுற்றேன் என்று உம்மு ஹபீபா رضي الله عنها கூறினார்கள்.[83]

81. அறிவிப்பாளர்: அனஸ் رضي الله عنه நூல்: முஸ்லிம், எண்: 566
82. நூல்: அபூ தாவூத், எண்: 154
83. நூல்: இப்னு மாஜா, எண்: 474

**5) ஒட்டகக் கறியை சாப்பிடுவது உளூவை முறித்து விடும்.**

ஆதாரம்:

**وَسُئِلَ صلى الله عليه وسلم عَنْ الْوُضُوءِ مِنْ لُحُومِ الْإِبِلِ فَقَالَ تَوَضَّأْ مِنْهُ وَسُئِلَ عَنْ لُحُومِ الْغَنَمِ فَقَالَ إِنْ شِئْتَ تَوَضَّأْ وَإِنْ شِئْتَ لَا تَتَوَضَّأْ. رواه أحمد برقم ١٩٩٦١**

நபி ﷺ அவர்களிடம் ஒட்டகக் கறியை சாப்பிட்டதால் உளூ செய்வது பற்றி கேட்கப்பட்டது. அவர்கள் கூறினார்கள்: “நீ அதனால் (-ஒட்டகக் கறியை சாப்பிட்டால்) உளூ செய்.” ஆட்டுக் கறியைப் பற்றி அவர்களிடம் கேட்கப்பட்டது. அவர்கள் கூறினார்கள்: “நீ விரும்பினால் உளூ செய்! நீ விரும்பினால் உளூ செய்யாதே!”[84]

**6) இஸ்லாமை விட்டு வெளியேறி விடுவது உளூவை முறித்து விடும்.**

ஆதாரம்:

**وَمَنْ يَكْفُرْ بِالْإِيمَانِ فَقَدْ حَبِطَ عَمَلُهُ**

யார் ஈமானுக்கு பதிலாக இறை நிராகரிப்பில் செல்வாரோ திட்டமாக அவருடைய அமல்கள் அழிந்துவிடும். (அல்குர்ஆன் 5:5)

**கருத்து:** ஒருவர் இறை நிராகரிப்பில் சென்று விட்டால் அவருடைய நல்ல அமல்கள் வீணாகிவிடுகின்றன என்று அல்லாஹ் கூறுகிறான். உளூவும் ஒருவருடைய நல்ல காரியங்களில் ஒன்றாகும். ஆகவே, ஒருவர் இஸ்லாமை விட்டு வெளியேறி விட்டால் அவருடைய மற்ற அமல்கள் வீணாகி விடுவதைப் போன்று அவர் செய்த உளூவும் வீணாகிவிடும். அவர் தவ்பா செய்து மீண்டும் இஸ்லாமிற்கு வந்தால்

84. அறிவிப்பாளர்: ஜாபிர் இப்னு சமுரா ؓ, நூல்: அஹ்மது, எண்: 19961

அவர் புதிதாக உளூ செய்ய வேண்டும். முந்திய உளூவைக் கொண்டே அவர் தொழுகையை நிறைவேற்ற முடியாது.

மேலும், குளிப்பை கடமையாக்கக்கூடிய எல்லாக் காரியங்களும் உளூவையும் கடமையாக்கிவிடும். ஆனால், ஒருவர் மரணித்து விட்டால் அவரை குளிப்பாட்டுவது கடமையாகும். அவருக்கு உளூ செய்துவைப்பது அல்ல.

**ஏழாவது சட்ட விளக்கம்:**

## எந்த அமலுக்கு உளூ செய்வது கட்டாயம்?

பருவ வயது வந்த முஸ்லிம் பின்வருகின்ற காரியங்களுக்காக உளூ செய்வது கட்டாயமாகும்.

**1) தொழுகை**



ஆதாரம் 1:

عَنِ ابْنِ عُمَرَ ﷺ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ لَا تُقْبَلُ صَلَاةٌ بِغَيْرِ طُهُورٍ وَلَا صَدَقَةٌ مِنْ غُلُولٍ. رواه الترمذي برقم ١

நபி ﷺ கூறினார்கள்: சுத்தம் இல்லாத தொழுகை ஏற்கப்படாது. இன்னும், மோசடியிலிருந்து செய்யப்படுகின்ற தர்மம் ஏற்கப்படாது.[85]

ஆதாரம் 2:

عَنْ أَبِي هُرَيْرَةَ ﷺ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ لَا يَقْبَلُ اللهُ صَلَاةَ أَحَدِكُمْ إِذَا أَحْدَثَ حَتَّى يَتَوَضَّأَ. رواه البخاري برقم ٦٤٤٠

உங்களில் ஒருவர் சிறுதொடக்குடையவராக ஆகிவிட்டால் அவரின் தொழுகையை, அவர் உளூ செய்கின்றவரை அல்லாஹ் ஏற்கமாட்டான்.

**2) கஅபத்துல்லாஹ்வை தவாஃப் செய்வதற்கு உளூ கட்டாயமாகும்.**

85. அறிவிப்பாளர்: இப்னு உமர் ﷺ, நூல்: திர்மிதி, எண்:1

அந்த தவாஃப் ஃபர்ழாக அல்லது நஃபிலாக இருந்தாலும் சரி.

ஆதாரம் 1:

أَنَّهُ تَوَضَّأَ ثُمَّ طَافَ بِالْبَيْتِ

நிச்சயமாக (நபி ﷺ) அவர்கள் உளூ செய்தார்கள். பிறகு, கஅபாவை தவாஃப் செய்தார்கள் என்று ஆயிஷா ؓ அறிவிக்கின்றார்கள்.[86]

ஆதாரம் 2:

عَنِ ابْنِ عَبَّاسٍ ؓ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ "الطَّوَافُ بِالْبَيْتِ صَلَاةٌ إِلَّا أَنَّ اللهَ أَحَلَّ فِيهِ الْمَنْطِقَ، فَمَنْ نَطَقَ فَلَا يَنْطِقْ إِلَّا بِخَيْرٍ. رواه ابن حبان برقم ٣٨٣٦

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: கஅபாவை தவாஃப் செய்வது ஸலாஹ் -தொழுகையாகும். என்றாலும், அதில் பேசுவதை அல்லாஹ் ஆகுமாக்கியுள்ளான். யார் பேசுவாரோ அவர் நன்மையைத் தவிர வேறு எதையும் பேச வேண்டாம்.[87]

ஹைழ் உள்ள பெண்கள் கஅபாவை தவாஃப் செய்ய வேண்டாம் என்று நபி ﷺ அவர்கள் தடுத்ததிலிருந்தும் தவாஃபிற்கு முழுமையான சுத்தம் அவசியம் என்பதை அறிய முடிகிறது.[88]

**3) குர்ஆன் பிரதியை எவ்வித தடுப்புமின்றி தனது கரத்தால் தொடுவதற்கு உளூ கட்டாயமாகும்.**

ஆதாரம் 1: அல்லாஹ் கூறுகின்றான்:

لَا يَمَسُّهُ إِلَّا الْمُطَهَّرُونَ (٧٩)

இதை பரிசுத்தமானவர்களைத் தவிர தொட மாட்டார்கள்.

(அல்குர்ஆன் 56:79)

---

86. நூல்: புகாரி, எண்: 1533
87. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ؓ, நூல்: இப்னு ஹிப்பான். எண்: 3836
88. பார்க்க: ஸஹீஹுல் புகாரி, பாடம் ஹைழ் உள்ள பெண் ஹஜ்ஜுடைய எல்லா அமல்களையும் செய்வாள் தவாஃபைத் தவிர. ஹதீஸ் எண்: 285, 294.

ஆதாரம் 2:

عَنْ عَبْدِ اللهِ بْنِ أَبِي بَكْرِ بْنِ حَزْمٍ أَنَّ فِي الْكِتَابِ الَّذِي كَتَبَهُ رَسُولُ اللهِ ﷺ لِعَمْرِو بْنِ حَزْمٍ رضي الله عنه أَنْ لَا يَمَسَّ الْقُرْآنَ إِلَّا طَاهِرٌ. رواه مالك في الموطا برقم ٤١٩

அம்ர் இப்னு ஹஸ்ம் رضي الله عنه அவர்களுக்கு ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் எழுதிய கடிதத்தில் எழுதப்பட்டுள்ளதாவது, "சுத்தமானவரைத் தவிர குர்ஆனை வேறு யாரும் தொடமாட்டார்."[89]

**எட்டாவது சட்ட விளக்கம்:**

## உளூ செய்வது எப்போது "முஸ்தஹப்" விரும்பத்தக்கதாக ஆகிறது?



அத்தகைய அமல்கள் பின்வருமாறு:

**1) அல்லாஹ்வை திக்ர் - நினைவு கூரும்போதும், குர்ஆன் ஓதும் போதும் உளூ செய்வது "முஸ்தஹப்" விரும்பத்தக்கதாகும்.**

89. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு அபீ பக்ர் இப்னு ஹஸ்ம் رضي الله عنه, நூல்: முவத்தா, எண்: 419.

**குறிப்பு:** முதல் ஆதாரத்தில் (அல்குர்ஆன் 56:79) பரிசுத்தமானவர்கள் என்று அல்லாஹ் குறிப்பிடுவது வானவர்களை ஆகும். அங்கு கூறப்பட்ட குர்ஆன் என்பது லவ்ஹுல் மஹ்ஃபூள் என்ற பாதுகாக்கப்பட்ட பதிவேட்டில் உள்ள குர்ஆனாகும். நம்மிடம் இருக்கக்கூடிய குர்ஆன் பிரதி இங்கு நோக்கமல்ல. இது குறித்து மேலதிக கருத்துகளை தஃப்ஸீர் தபரியில் பார்க்கலாம்.

இரண்டாவது ஹதீஸில் கூறப்பட்டுள்ள தாஹிர் சுத்தமானவர் என்பது முஃமினைக் குறிக்கும். முஃமின் - நம்பிக்கையாளர் எப்போதும் அசுத்தமாக மாட்டார். அதாவது, இணைவைக்கக்கூடிய முஷ்ரிக் குர்ஆனை தொடுவதை தவிர்க்க வேண்டும். அதாவது ஒரு முஷ்ரிக் குர்ஆனை அவமதிப்பார் என்று இருந்தால் அவரிடம் குர்ஆனை தருவதை தவிர்க்க வேண்டும். எதிரிகளின் நாட்டிற்கு குர்ஆன் பிரதிகளை எடுத்துச் செல்வதை நபி ﷺ அவர்கள் தடுத்தார்கள். ஏனெனில், அவர்களின் கரங்களில் குர்ஆன் பிரதி கிடைத்தால் அதை அவர்கள் இழிவுபடுத்தலாம். இத்தகைய பயம் இல்லையென்றால் குர்ஆன் பிரதியை தருவது குற்றமல்ல. நபி ﷺ அவர்கள் குர்ஆன் வசனங்கள் அடங்கிய கடிதங்களை காஃபிர் மன்னர்களுக்கு அனுப்பினார்கள். குர்ஆனின் ஒரு வசனமும் குர்ஆன்தான். ஆகவே, குர்ஆனை உளூ இல்லாதவரும் தொடலாம் என்பது பல நபித்தோழர்கள் மற்றும் பல அறிஞர்களுடைய ஆதாரப்பூர்வமான கருத்தாகும். அதையே நாமும் விரும்புகிறோம்.

عَنْ أَبِي الْجُهَيْمِ بْنِ الْحَارِثِ بْنِ الصِّمَّةِ الْأَنْصَارِيِّ ﷺ قَالَ أَقْبَلَ رَسُولُ اللّٰهِ ﷺ نَحْوَ بِئْرِ جَمَلٍ فَلَقِيَهُ رَجُلٌ فَسَلَّمَ عَلَيْهِ فَلَمْ يَرُدَّ رَسُولُ اللّٰهِ ﷺ عَلَيْهِ السَّلَامَ حَتَّى أَتَى عَلَى جِدَارٍ فَمَسَحَ بِوَجْهِهِ وَيَدَيْهِ ثُمَّ رَدَّ عَلَيْهِ السَّلَامَ. رواه أبو داود برقم ٢٧٨

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் (மதீனாவில்) ஜமல் என்ற இடத்தில் உள்ள ஒரு கிணற்றை நோக்கி வந்தார்கள். அப்போது அவர்களை ஒருவர் சந்தித்து ஸலாம் கூறினார். ஆனால், ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் அவருக்கு பதில் சொல்லவில்லை. இறுதியாக ஒரு சுவரருகில் வந்து (அதில் இரு கைகளையும் அடித்து, பின்னர் அதைக்கொண்டு) தனது முகத்திலும் தனது இரு கைகளிலும் தடவி தயம்மும் செய்த பின்னர் பதில் ஸலாம் கூறினார்கள்.[90]

மேற்கூறப்பட்ட ஹதீஸின் மற்ற அறிவிப்புகளில் பின்வருமாறு ஒரு வாசகமும் பதிவாகியுள்ளது. அதாவது, நபி ﷺ விளக்கம் கூறினார்கள்:

إِنِّي كَرِهْتُ أَنْ أَذْكُرَ اللّٰهَ عَزَّ وَجَلَّ إِلَّا عَلَى طُهْرٍ أَوْ قَالَ عَلَى طَهَارَةٍ

“நான் சுத்தம் இல்லாத நிலையில் அல்லாஹ்வை நினைவு கூர்வதை விரும்பவில்லை”[91]

**2) ஒவ்வொரு தொழுகைக்காகவும் உளூ செய்வது முஸ்தஹப்பாகும்.** ஏற்கனவே, செய்த உளூ முறியவில்லை என்றாலும் அடுத்த தொழுகையின் நேரம் வந்துவிட்டால் புதிதாக உளூ செய்வது சிறப்பாகும்.

ஆதாரம்:

عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ ﷺ قَالَ كَانَ النَّبِيُّ ﷺ يَتَوَضَّأُ عِنْدَ كُلِّ صَلَاةٍ قُلْتُ كَيْفَ

90. அறிவிப்பாளர்: அபுல் ஜஹ்ம் இப்னுல் ஹாரிஸ் இப்னு அஸ்ஸிம்மா அல்அன்சாரி ﷺ, நூல்: அபூ தாவூத், எண்: 278

91. அறிவிப்பாளர்: அல்முஹாஜிர் இப்னு குன்ஃபுத் ﷺ, நூல்: அபூ தாவூத் எண்:17

**كُنْتُمْ تَصْنَعُونَ قَالَ يُجْزِئُ أَحَدَنَا الْوُضُوءُ مَا لَمْ يُحْدِثْ رواه البخاري برقم ٢٠٧**

அனஸ் இப்னு மாலிக் ﵁ கூறுகிறார்கள்: நபி ﷺ அவர்கள் ஒவ்வொரு தொழுகையின் போதும் உளூ செய்பவர்களாக இருந்தார்கள். (அம்ர் இப்னு ஆமிர் கூறுகிறார்:) நான் கேட்டேன், நீங்கள் எப்படி செய்வீர்கள்? அவர் கூறினார்: "எங்களில் ஒருவருக்கு (முந்தி செய்த) உளூவே போதுமானது அவர் தொடக்குடையவராக மாறாத வரை."[92]

**3) உடலுறவு கொண்டு பெருந்தொடக்கு ஏற்பட்ட பின்னர், மீண்டும் உடலுறவு கொள்ள விரும்பினால் உளூ செய்வது சிறப்பாகும். அல்லது பெருந்தொடக்கு ஏற்பட்ட பின்னர் குளிக்காமல் தூங்குவதற்கு அல்லது உண்பதற்கு, அல்லது குடிப்பதற்கு நாடும்போது உளூ செய்து கொள்வது சிறப்பாகும்.**



ஆதாரம் 1:

**عَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ إِذَا أَتَى أَحَدُكُمْ أَهْلَهُ ثُمَّ أَرَادَ أَنْ يَعُودَ فَلْيَتَوَضَّأْ. رواه مسلم برقم ٤٦٦**

ரஸூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: உங்களில் ஒருவர் தனது மனைவியிடம் உடலுறவு கொண்டால், பிறகு, மீண்டும் செய்வதற்கு அவர் விரும்பினால் அவர் உளூ செய்து கொள்ளட்டும்.[93]

ஆதாரம் 2:

**عَنْ عَائِشَةَ ﵂ أَنَّ رَسُولَ اللهِ ﷺ كَانَ إِذَا أَرَادَ أَنْ يَنَامَ وَهُوَ جُنُبٌ تَوَضَّأَ وُضُوءَهُ لِلصَّلَاةِ قَبْلَ أَنْ يَنَامَ. رواه مسلم برقم ٤٦٠**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் பெருந்தொடக்குள்ளவர்களாக இருக்கின்ற

92. நூல்: புகாரி, எண்: 207

93. அறிவிப்பாளர்: அபூ சயீது அல்குத்ரி ﵁, நூல்: முஸ்லிம், எண்: 466

நிலையில், அவர்கள் தூங்க நாடினால் தூங்குவதற்கு முன்பாக அவர்கள் தொழுகைக்கு உளூ செய்வது போன்று உளூ செய்து கொள்வார்கள்.[94]

ஆதாரம் 3:

**عَنْ عَائِشَةَ ﵂ قَالَتْ كَانَ رَسُولُ اللهِ ﷺ إِذَا كَانَ جُنُبًا فَأَرَادَ أَنْ يَأْكُلَ أَوْ يَنَامَ تَوَضَّأَ وُضُوءَهُ لِلصَّلَاةِ. رواه مسلم برقم ٤٦١**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் பெருந்தொடக்குள்ளவர்களாக இருந்தால், அவர்கள் சாப்பிட அல்லது தூங்க நாடினால் அவர்கள் தொழுகைக்கு உளூ செய்வது போன்று உளூ செய்து கொள்வார்கள்.[95]

**4) கடமையான குளிப்பிற்கு முன்பாக உளூ செய்வது முஸ்தஹப்பாகும்.**

ஆதாரம்:

**عَنْ عَائِشَةَ ﵂ قَالَتْ كَانَ رَسُولُ اللهِ ﷺ إِذَا اغْتَسَلَ مِنْ الْجَنَابَةِ غَسَلَ يَدَيْهِ وَتَوَضَّأَ وُضُوءَهُ لِلصَّلَاةِ ثُمَّ اغْتَسَلَ رواه البخاري برقم ٢٦٤**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் பெருந்தொடக்கினால் குளிப்பவர்களாக இருந்தால் தனது இரு கரங்களையும் கழுவுவார்கள். இன்னும் தொழுகைக்கு உளூ செய்வது போன்று உளூ செய்வார்கள். பிறகு, குளிப்பார்கள்.[96]

5) தூங்கும்முன் உளூ செய்வது சிறப்பாகும்.

ஆதாரம்:

**عَنِ الْبَرَاءِ بْنِ عَازِبٍ ﵁ قَالَ قَالَ لِي رَسُولُ اللهِ ﷺ إِذَا أَتَيْتَ مَضْجَعَكَ**

94. அறிவிப்பாளர்: ஆயிஷா ﵂, நூல்: முஸ்லிம், எண்: 460
95. அறிவிப்பாளர்: ஆயிஷா ﵂, நூல்: முஸ்லிம், எண்: 461
96. அறிவிப்பாளர்: ஆயிஷா ﵂, நூல்: புகாரி, எண்: 264.

**فَتَوَضَّأْ وَضُوءَكَ لِلصَّلَاةِ ثُمَّ اضْطَجِعْ عَلَى شِقِّكَ الْأَيْمَنِ رواه البخاري برقم ٥٨٣٦**

பரா இப்னு ஆஸிப் ﵁ கூறுகிறார்கள்: ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் எனக்கு கூறினார்கள்: "நீ உனது படுக்கைக்கு வந்தால் நீ தொழுகைக்கு உளூ செய்வது போன்று உளூ செய்து கொள்! பிறகு, உனது வலது பக்கத்தில் சாய்ந்து படுத்துக் கொள்!"[97]

-------------------------



97. நூல்: புகாரி, எண்: 5836

# خف – குஃப் – காலுறை, தலைப்பாகை, காயத்தின் மீது போடப்பட்டுள்ள கட்டுகள் மீது மஸ்ஹ் செய்வது

**خف** - குஃப் - தோலினால் செய்யப்பட்ட காலுறை, தலைப்பாகை, காயத்தின் மீது போடப்பட்டுள்ள கட்டுகள் ஆகியவற்றின் மீது மஸ்ஹ் செய்வது (-ஈரமான கைகளால் தடவுவது).

காலில் அணியப்படும் காலுறையானது தோல், அல்லது ஆட்டின் ரோமம் அல்லது துணி போன்றவற்றால் செய்யப்படலாம். அவை அனைத்திற்கும் ஒரே சட்டம்தான்.

**முதல் சட்ட விளக்கம்:**

## குஃப் மீது மஸ்ஹ் செய்வதின் சட்டம் மற்றும் அதற்கான ஆதாரம்

அஹ்லுஸ் சுன்னா வல் ஜமாஆ உடைய அறிஞர்களின் ஏகோபித்த முடிவின்படி குஃப் மீது மஸ்ஹ் செய்வது ஆகுமானதாகும். அடியார்களுக்கு சிரமம் ஏற்படாமல் இருப்பதற்காக இது அல்லாஹ்வின் புறத்திலிருந்து வழங்கப்பட்ட சலுகையாகும்.

குஃப் மீது மஸ்ஹ் செய்வது கூடும் என்பதற்கு பல நபிமொழிகளும் அறிஞர்களின் ஏகோபித்த முடிவும் ஆதாரமாக உள்ளன. இது பற்றி நபி ﷺ அவர்களின் சொல், செயல், அனுமதி என பல நபிமொழிகள் வந்துள்ளன.

இமாம் அஹ்மது ﷬ கூறுகிறார்கள்: “குஃப் - காலுறையின் மீது மஸ்ஹ் செய்வது சம்பந்தமாக எனது உள்ளத்தில் எவ்வித சந்தேகமும் இல்லை. இது பற்றி நாற்பது நபிமொழிகள் வந்துள்ளன.”

ஹஸன் பஸரி ﷬ கூறுகிறார்கள்: “நபி ﷺ அவர்கள் குஃப் - காலுறையின் மீது மஸ்ஹ் செய்தார்கள் என்று என்னிடம் எழுபது நபித்தோழர்கள் அறிவித்தார்கள்.”

அந்த ஹதீஸ்களில் சில:

ஆதாரம் 1:

**عَنْ هَمَّامٍ ﵀ قَالَ بَالَ جَرِيرٌ ﵁ ثُمَّ تَوَضَّأَ وَمَسَحَ عَلَى خُفَّيْهِ فَقِيلَ تَفْعَلُ هَذَا فَقَالَ نَعَمْ رَأَيْتُ رَسُولَ اللهِ ﷺ بَالَ ثُمَّ تَوَضَّأَ وَمَسَحَ عَلَى خُفَّيْهِ. رواه مسلم برقم ٤٠١**

ஹம்மாம் கூறுகிறார்: ஜரீர் ﵁ அவர்கள் சிறுநீர் கழித்தார்கள். பிறகு, உளூ செய்தார்கள். (உளூவில்) தனது காலுறைகளுக்கு மஸ்ஹ் செய்தார்கள். இப்படி செய்கிறீர்களே? என்று அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள் கூறினார்கள்: “ஆம், ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் சிறுநீர் கழித்து, பிறகு உளூ செய்து, (உளூவில்) தனது குஃப் - காலுறைகளுக்கு அவர்கள் மஸ்ஹ் செய்ததை நான் பார்த்தேன்.”[98]

மேலும், இந்த நபிமொழியை பதிவு செய்த பின்னர் இமாம் முஸ்லிம் ﵀ பின்வருமாறு எழுதுகிறார்கள்: “இப்ராஹீம் ﵀ கூறுவதாக அஃமஷ் ﵀ கூறுகிறார்கள்: இந்த ஹதீஸ் அவர்களுக்கு (-அறிஞர்களுக்கு) மிகவும் பிடித்தமாக இருந்தது. ஏனெனில், ஜரீர் ﵁ அவர்கள் சூரா அல்மாயிதா(வில் உளூ உடைய வசனம்) இறங்கிய பின்னர்தான் இஸ்லாமை ஏற்றார்கள்.”

உள்ளூரில் இருக்கும் போதும், வெளியூரில் இருக்கும் போதும் ‘குஃப்’ - காலுறையின் மீது மஸ்ஹ் செய்வது அனுமதிக்கப்பட்டது என்பதை

98. நூல்: முஸ்லிம், எண்: 401

அஹ்லுஸ் சுன்னா வல்ஜமாஆ உடைய அறிஞர்கள் ஒருமித்து கூறுகிறார்கள். ஒரு தேவையை முன்னிட்டு குஃப்பை அணிந்தாலும் சரி, அல்லது அப்படி இல்லை என்றாலும் சரி. அவ்வாறே, இன்று அணியப்படுகின்ற 'சாக்ஸ்' -துணியினால் செய்யப்பட்ட காலுறையின் மீதும் மஸ்ஹ் செய்வது கூடும். அந்த சாக்ஸ் (குறைந்தபட்சம்) கரண்டைக்கால் வரை மறைக்கக்கூடியதாக இருக்க வேண்டும்.

**இரண்டாவது சட்ட விளக்கம்**

## خُف – குஃப் அல்லது மற்ற காலுறைகளின் மீது மஸ்ஹ் செய்வதின் நிபந்தனைகள்

**1) உளூ செய்த பின்னர் குஃப்களை அணிந்திருக்க வேண்டும்.**

**عَنِ الْمُغِيرَةِ بْنِ شُعْبَةَ ﵁ قَالَ كُنْتُ مَعَ النَّبِيِّ ﷺ فِي سَفَرٍ فَأَهْوَيْتُ لِأَنْزِعَ خُفَّيْهِ فَقَالَ دَعْهُمَا فَإِنِّي أَدْخَلْتُهُمَا طَاهِرَتَيْنِ فَمَسَحَ عَلَيْهِمَا رواه البخاري برقم ١٩٩**

முகீரா இப்னு ஷுஉபா ﵁ அறிவிக்கிறார்கள்: ஒரு பயணத்தில் நான் நபி ﷺ அவர்களுடன் இருந்தேன். (அவர்கள் உளூ செய்தபோது) நான் அவர்களின் (கால்களில் அணிந்திருந்த) இரண்டு குஃப்ஃபை கழட்டிவிடுவதற்காக குனிந்தேன். அப்போது நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: அவற்றை விட்டுவிடுங்கள்! நான் அவ்விரண்டையும் (எனது கால்கள்) சுத்தமான நிலையில்தான் அணிந்திருக்கின்றேன். பிறகு, அவ்விரண்டின் மீதும் நபி ﷺ அவர்கள் மஸ்ஹ் செய்தார்கள்.

**2) கால்களில் கழுவ வேண்டிய பகுதிகளை அவை மறைத்திருக்க வேண்டும்.** கழுவ வேண்டிய பகுதிகள் தெரிகின்ற அளவிற்கு அவற்றில் ஓட்டை அல்லது கிழிசல் இருந்தால் அவற்றின் மீது மஸ்ஹ் செய்வது கூடாது.

**3) குஃப் தனக்கு (ஹலாலான முறையில்) சொந்தமானதாக இருக்க**

**வேண்டும்.** ஆகவே, அபகரிக்கப்பட்ட அல்லது திருடப்பட்ட குஃப் மீது மஸ்ஹ் செய்வது கூடாது. அவ்வாறே, ஆண்களுக்கு பட்டு காலுறையின் மீதும் மஸ்ஹ் செய்வது கூடாது. அபகரிக்கப்பட்டதையும் திருடியதையும் அணிவது, ஆண்கள் பட்டினால் செய்யப்பட்டதை அணிவது பாவமாகும். பாவமானதை அணிந்து மார்க்க சலுகைகளை அடைய முடியாது.

**4) காலுறை சுத்தமான ஒரு பொருளில் இருந்து செய்யப்பட்டதாக இருக்க வேண்டும்.** ஆகவே, கழுதையின் தோல், இன்னும் பயன்படுத்துவதற்கு அனுமதி இல்லாத தோலில் இருந்து செய்யப்பட்ட குஃப் மீது மஸ்ஹ் செய்வது கூடாது.

**5) மஸ்ஹ் செய்வது மார்க்கம் நிர்ணயித்த கால அளவிற்குள் இருக்க வேண்டும்.**

உள்ளூரில் இருப்பவர் உளூ செய்து, அணிந்த பின்னர் அடுத்து உளூ முறிகின்ற நேரத்தில் இருந்து ஓர் இரவு ஒரு பகல் வரை அந்த குஃப்பை கழட்டாமல் அதன் மீது மஸ்ஹ் செய்து கொள்ளலாம்.



வெளியூரில் பயணத்தில் இருப்பவர் உளூ செய்து அணிந்த பின்னர், அடுத்து உளூ முறிகின்ற நேரத்தில் இருந்து மூன்று இரவுகள், மூன்று பகல்கள் கால அளவிற்கு அவர் அதை கழட்டாமல் அதன் மீது மஸ்ஹ் செய்து கொள்ளலாம்.

ஆதாரம்:

**عَنْ شُرَيْحِ بْنِ هَانِئٍ ﵀ قَالَ أَتَيْتُ عَائِشَةَ ﵄ أَسْأَلُهَا عَنْ الْمَسْحِ عَلَى الْخُفَّيْنِ فَقَالَتْ عَلَيْكَ بِابْنِ أَبِي طَالِبٍ ﵁ فَسَلْهُ فَإِنَّهُ كَانَ يُسَافِرُ مَعَ رَسُولِ اللهِ ﷺ فَسَأَلْنَاهُ فَقَالَ جَعَلَ رَسُولُ اللهِ ﷺ ثَلَاثَةَ أَيَّامٍ وَلَيَالِيَهُنَّ لِلْمُسَافِرِ وَيَوْمًا وَلَيْلَةً لِلْمُقِيمِ. رواه مسلم برقم ٤١٤**

ஷுரைஹ் இப்னு ஹானி ﵀ கூறுகிறார்: “நான் ஆயிஷா ﵄ அவர்களிடம்

குஃப் மீது மஸ்ஹ் செய்வதைப் பற்றி கேட்க வந்தேன். அவர்கள் கூறினார்கள், நீர் அலி இப்னு அபீ தாலிப் ﵁ அவர்களிடம் சென்று கேளுங்கள்! ஏனெனில், நிச்சயமாக அவர்கள்தான் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களுடன் பயணம் செய்பவர்களாக இருந்தார்கள். ஆகவே, நாங்கள் அலி ﵁ அவர்களிடம் சென்று கேட்டோம். அதற்கு அலி ﵁ அவர்கள் கூறினார்கள்: "பயணிக்கு மூன்று பகல்களையும், மூன்று இரவுகளையும் உள்ளூரில் இருப்பவருக்கு ஒரு பகல், ஓர் இரவையும் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் ஆக்கினார்கள்."[99]

இந்த ஐந்து நிபந்தனைகளை அறிஞர்கள் சுன்னாவிலிருந்தும் மார்க்கத்தின் பொது சட்டங்களில் இருந்தும் ஆய்வு செய்து எடுத்துள்ளார்கள். ஆகவே, குஃப் மீது மஸ்ஹ் செய்பவர் இவற்றை கவனத்தில் வைக்க வேண்டும்.

**மூன்றாவது சட்ட விளக்கம்:**

## மஸ்ஹ் எப்படி செய்வது?

குஃப்ஃபுக்கு மேல் புறத்தில்தான் மஸ்ஹ் செய்ய வேண்டும். குஃப்ஃபுக்கு மேல் புறத்தில் பெரும்பாலான இடத்தை நனைந்த கையைக் கொண்டு தடவ வேண்டும். குஃப் உடைய கீழ்ப் பகுதி அல்லது பின் பகுதிகளில் மட்டும் மஸ்ஹ் செய்வது போதுமாகாது, அவ்வாறு செய்வதும் கூடாது.

ஆதாரம் 1:

**عَنِ الْمُغِيرَةِ بْنِ شُعْبَةَ ﵁ قَالَ رَأَيْتُ النَّبِيَّ ﷺ يَمْسَحُ عَلَى الْخُفَّيْنِ عَلَى ظَاهِرِهِمَا رواه الترمذي برقم ٩١**

முகீரா இப்னு ஷுஉபா ﵁ கூறுகிறார்கள்: நபி ﷺ அவர்கள் இரண்டு குஃப் மீது - அவற்றின் மேல் பகுதியின் மீது மஸ்ஹ் செய்வதை நான் பார்த்தேன்.

99. நூல்: முஸ்லிம், எண்: 414

ஆதாரம் 2:

عَنْ عَلِيٍّ ﵁ قَالَ لَوْ كَانَ الدِّينُ بِالرَّأْيِ لَكَانَ أَسْفَلُ الْخُفِّ أَوْلَى بِالْمَسْحِ مِنْ أَعْلَاهُ وَقَدْ رَأَيْتُ رَسُولَ اللهِ ﷺ يَمْسَحُ عَلَى ظَاهِرِ خُفَّيْهِ. رواه أبو داود برقم ١٤٠

அலி ﵁ கூறுகிறார்கள்: மார்க்கம் அறிவை வைத்து முடிவு செய்யப்படுவதாக இருந்திருந்தால் மஸ்ஹ் செய்வதற்கு குஃப் உடைய கீழ்ப் பகுதி அதன் மேல் பகுதியைவிட மிகத்தகுதி உள்ளதாக இருந்திருக்கும். ஆனால், திட்டமாக நான் ரஸூல்லுல்லாஹ் ﷺ அவர்கள் தனது குஃப் உடைய மேல் பகுதியின் மீது மஸ்ஹ் செய்வதைத்தான் பார்த்திருக்கின்றேன்.[100]

ஒருவர் கீழ்ப் பகுதியிலும் மேல் பகுதியிலும் மஸ்ஹ் செய்தால் அது வெறுக்கப்பட்ட செயலாக கருதப்படும். ஆனால், மஸ்ஹ் கூடிவிடும்.

**நான்காவது சட்ட விளக்கம்**

## மஸ்ஹ் செய்வதின் கால அளவு

உள்ளூரில் இருப்பவர் உளூ செய்து, அணிந்த பின்னர் அடுத்து உளூ முறிகின்ற நேரத்தில் இருந்து ஓர் இரவு ஒரு பகல் வரை அந்த குஃப்ஃபைக் கழட்டாமல் அதன் மீது மஸ்ஹ் செய்து கொள்ளலாம்.

வெளியூரில் பயணத்தில் இருப்பவர் உளூ செய்து, அணிந்த பின்னர், அடுத்து உளூ முறிகின்ற நேரத்தில் இருந்து மூன்று இரவுகள், மூன்று பகல்கள் கால அளவிற்கு அவர் அதை கழட்டாமல் அதன் மீது மஸ்ஹ் செய்து கொள்ளலாம்.

ஆதாரம்:

عَنْ شُرَيْحِ بْنِ هَانِئٍ ﵀ قَالَ أَتَيْتُ عَائِشَةَ ﵂ أَسْأَلُهَا عَنْ الْمَسْحِ عَلَى الْخُفَّيْنِ

100. நூல்: அபூ தாவூத், எண்: 140

فَقَالَتْ عَلَيْكَ بِابْنِ أَبِي طَالِبٍ فَسَلْهُ فَإِنَّهُ كَانَ يُسَافِرُ مَعَ رَسُولِ اللهِ ﷺ فَسَأَلْنَاهُ فَقَالَ جَعَلَ رَسُولُ اللهِ ﷺ ثَلَاثَةَ أَيَّامٍ وَلَيَالِيَهُنَّ لِلْمُسَافِرِ وَيَوْمًا وَلَيْلَةً لِلْمُقِيمِ رواه مسلم برقم ٤١٤

ஷுரைஹ் இப்னு ஹானி ﵀ கூறுகிறார்: நான் ஆயிஷா ﵂ அவர்களிடம் குஃப்ஃபுகள் மீது மஸ்ஹ் செய்வதைப் பற்றி கேட்க வந்தேன். அவர்கள் கூறினார்கள், நீர் அலி இப்னு அபீ தாலிப் ﵁ அவர்களிடம் சென்று கேளுங்கள்! ஏனெனில், நிச்சயமாக அவர்கள்தான் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களுடன் பயணம் செய்பவர்களாக இருந்தார்கள். ஆகவே, நாங்கள் அலி ﵁ அவர்களிடம் சென்று கேட்டோம். அதற்கு அலி ﵁ அவர்கள் கூறினார்கள்: பயணிக்கு மூன்று பகல்கள், மூன்று இரவுகளையும் உள்ளூரில் இருப்பவருக்கு ஒரு பகல், ஓர் இரவையும் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் ஆக்கினார்கள்.

**ஐந்தாவது சட்ட விளக்கம்:**

## இந்த மஸ்ஹை முறிக்கக்கூடிய காரியங்கள்

அவை பின்வருமாறு

**1) குளிப்பை கடமையாக்கக்கூடிய ஒரு செயல் நிகழ்ந்துவிட்டால் கண்டிப்பாக குஃப்பை கழட்டவேண்டும், பின்னர் குளிக்க வேண்டும்.**

عن زِرِّ بْنِ حُبَيْشٍ ﵀ قَالَ أَتَيْتُ رَجُلًا يُدْعَى صَفْوَانَ بْنَ عَسَّالٍ ﵁ فَقَعَدْتُ عَلَى بَابِهِ فَخَرَجَ فَقَالَ مَا شَأْنُكَ قُلْتُ أَطْلُبُ الْعِلْمَ قَالَ إِنَّ الْمَلَائِكَةَ تَضَعُ أَجْنِحَتَهَا لِطَالِبِ الْعِلْمِ رِضًا بِمَا يَطْلُبُ فَقَالَ عَنْ أَيِّ شَيْءٍ تَسْأَلُ قُلْتُ عَنْ الْخُفَّيْنِ قَالَ كُنَّا إِذَا كُنَّا مَعَ رَسُولِ اللهِ ﷺ فِي سَفَرٍ أَمَرَنَا أَنْ لَا نَنْزِعَهُ ثَلَاثًا إِلَّا مِنْ جَنَابَةٍ وَلَكِنْ مِنْ غَائِطٍ وَبَوْلٍ وَنَوْمٍ رواه النسائي برقم ١٥٨

ஸிர் இப்னு ஹுபைஷ் ﵀ கூறுகிறார்: "நான் ஸஃப்வான் இப்னு

அஸ்ஸால் என்று அழைக்கப்படுகின்ற ஒரு மனிதரிடம் வந்து அவரின் வாசலில் உட்கார்ந்து கொண்டேன். அவர் வெளியே வந்தபோது உனது தேவை என்ன என்று கேட்டார்? நான் கூறினேன்: நான் கல்வியைத் தேடி வந்துள்ளேன். அவர் கூறினார்: நிச்சயமாக வானவர்கள் தங்களது இறக்கைகளை கல்வியைத் தேடுபவருக்காக அவரின் கல்வித் தேடலை திருப்தி கொண்டு தாழ்த்துகின்றனர். பிறகு, அவர் கேட்டார், நீர் எதைப் பற்றி அறிய கேட்கிறீர்? நான் கூறினேன்: குஃப் -காலுறைகளை அணிவதின் சட்டத்தைப் பற்றி. அவர் கூறினார்: நாங்கள் ரஸூலுல்லாஹ்வுடன் பயணத்தில் இருந்தோம். மூன்று நாள்கள் நாங்கள் குஃப்பை -காலுறையை கழட்ட வேண்டாம், பெருந்தொடக்கு ஏற்பட்டாலே தவிர. என்றாலும், மலம், ஜலம் இன்னும் தூக்கத்தினால் (உளூ முறிந்து விட்டால் காலுறையை கழட்டாமல், அதன் மீது நீங்கள் மஸ்ஹ் செய்யுங்கள்) என்று எங்களுக்கு கட்டளையிட்டார்கள்.[101]

**கருத்து:** இந்த ஹதீஸில் இடம் பெற்றுள்ள “பெருந்தொடக்கு ஏற்பட்டாலே தவிர” என்ற வாக்கியம், “பெருந்தொடக்கு ஏற்பட்டுவிடும்போது கண்டிப்பாக குஃப்பை கழற்றிவிட்டுத்தான் குளிக்க வேண்டும்” என்பதை உணர்த்துகிறது.

**2) காலில் கழுவ வேண்டிய பகுதி வெளியாகி விட்டால் மஸ்ஹ் செய்தது முறிந்து விடும்.** அவர் மீண்டும் புதிதாக உளூ செய்தாக வேண்டும்.

**3) இரண்டு கால்களிலிருந்தும் காலுறைகளை கழற்றிவிட்டால் மஸ்ஹ் முறிந்து விடும்.** அவ்வாறே ஒரு காலில் இருந்து மட்டும் குஃப்பைக் கழட்டினாலும் மஸ்ஹ் முறிந்து விடும் என்பதுதான் அதிகமான அறிஞர்களின் கருத்தாகும்.

**4) மஸ்ஹ் உடைய கால அளவு முடிந்துவிட்டாலும் செய்த மஸ்ஹ் முறிந்து விடும்.** அடுத்து தொழுகையின் நேரம் வந்துவிட்டால், குஃப்பை கழற்றிவிட்டு, புதிதாக உளூ செய்ய வேண்டும். மஸ்ஹ் உடைய கால அளவை மார்க்கம் நிர்ணயித்துவிட்டதால் அந்த குறிப்பிட்ட அளவைவிட அதிகப்படுத்தக் கூடாது.

101. நூல்: நசாயி, எண்: 158

**ஆறாவது சட்ட விளக்கம்**

## மஸ்ஹ் உடைய கால அளவு எப்போது ஆரம்பமாகிறது?

உளூ செய்துவிட்டு குஃப்பை அணிந்த பின்னர் மீண்டும் எப்போது உளூ முறிகிறதோ அப்போதிலிருந்து மஸ்ஹ் உடைய கால அளவு ஆரம்பமாகும். உதாரணமாக, ஒருவர் ஃபஜ்ருடைய தொழுகைக்கு உளூ செய்துவிட்டு குஃப்பை அணிந்தார். பிறகு சூரிய உதயத்திற்கு பின்னர் அவருக்கு உளூ முறிந்தது, அடுத்து ளுஹ்ருடைய நேரம் வந்தபோது அவர் உளூ செய்கிறார். இவருடைய மஸ்ஹ் உடைய காலம் சூரிய உதயத்திற்கு பின்னர் எப்போது உளூ முறிந்ததோ அப்போதிலிருந்து ஆரம்பமாகிறது என்று அதிகமான அறிஞர்கள் கூறுகிறார்கள்.[102]

**ஏழாவது சட்ட விளக்கம்**

## தலைப்பாகை, பெண்கள் அணிகின்ற தலை மறைப்பு மற்றும் காயத்தின் மீது போடப்பட்ட கட்டுகள் ஆகியவற்றின் மீது மஸ்ஹ் செய்தல்

காயங்கள் மீது அல்லது எலும்பு முறிவுகள் மீது போடப்படக்கூடிய கட்டுகள் அவை சிறு கம்புகள் மற்றும் துணிகளால் கட்டப்பட்டிருந்தாலும் அல்லது துணியினால் மட்டும் கட்டப்பட்டிருந்தாலும் அவற்றின் மீது மஸ்ஹ் செய்யலாம். அந்த கட்டுகள் காயத்தின் அளவைவிட அதிகமாக இருக்கக் கூடாது. சிறுதொடக்கு, பெருந்தொடக்கு என அனைத்திலும் இவற்றின் மீது அவற்றை கழற்றுகின்ற வரை மஸ்ஹ் செய்யலாம். இவற்றின் மீது மஸ்ஹ் செய்வதற்கு குறிப்பிட்ட கால அளவு இல்லை. காயத்திலிருந்து சுகம் பெறுகின்றவரை அவற்றின் மீது மஸ்ஹ் செய்யலாம்.

ஏனெனில், இது போன்ற கட்டுகள் சிகிச்சைக்காக நிர்ப்பந்தமாக போடப்படுகின்றன. ஆகவே, எவ்வளவு அவசியமோ அந்த அளவே நிர்ப்பந்தத்திற்கான சலுகையை எடுத்துக் கொள்ள முடியும். அந்த

102. சிலர் இவர் மீண்டும் உளூ செய்த நேரத்தில் இருந்து கால அளவு ஆரம்பமாகின்றது என்று கூறுகின்றனர். (இந்த இரண்டாவது கூற்று ஏற்றமானதல்ல.)

நிர்ப்பந்தத்தில் சிறுதொடக்கு, பெருந்தொடக்கு இரண்டும் சமம்தான். ஆகவே, எல்லா சூழ்நிலையிலும் காயத்தின் மீது போடப்பட்டுள்ள கட்டுகள் மீது மஸ்ஹ் செய்யலாம்.

அவ்வாறே, தலைப்பாகையின் மீது மஸ்ஹ் செய்வது கூடும்.

ஆதாரம்:

عَنِ الْمُغِيرَةِ بْنِ شُعْبَةَ ﷺ أَنَّ النَّبِيَّ ﷺ مَسَحَ عَلَى الْخُفَّيْنِ وَمُقَدَّمِ رَأْسِهِ وَعَلَى عِمَامَتِهِ رواه مسلم برقم ٤١١

முகீரா இப்னு ஷுஃபா ﷺ அறிவிக்கின்றார்கள்: நபி ﷺ அவர்கள் இரண்டு குஃப்புகள் மீதும் தனது தலையின் முற்பகுதியின் மீதும் தனது தலைப்பாகையின் மீதும் மஸ்ஹ் செய்தார்கள்.[103]

தலைப்பாகையின் மீது மஸ்ஹ் செய்வதற்கும் ஒரு குறிப்பிட்ட கால அளவு இல்லை. பேணுதலின் அடிப்படையில் இதற்கும் குஃப்பின் மீது மஸ்ஹ் செய்வதற்கு கூறப்பட்ட இரு நிபந்தனைகளை கடைப்பிடிப்பது ஏற்றமானதாகும்.

1) உளூ செய்தப் பின்னர் அணிந்திருக்க வேண்டும்.

2) குறிப்பிட்ட கால அளவில் மட்டும் செய்ய வேண்டும்.

பெண்ணுடைய தலைமறைப்பை பொறுத்தவரை அதன் மீது மஸ்ஹ் செய்வது கூடாது என்பதுதான் ஏற்றமான கருத்தாகும். ஆனால், அதை கழட்டுவது சிரமமாக இருந்தால் அல்லது தலையில் மருதானி பூசி, பிறகு அணியப்பட்டிருந்தால் அப்போது தலைமறைப்பின் மீது மஸ்ஹ் செய்வது கூடும்.

---

103. நூல்: முஸ்லிம், எண்: 411

# غسل குஸ்ல் - குளிப்பதின் சட்டங்கள்

இதில் பல சட்ட விளக்கங்கள் உள்ளன.

**முதலாவது சட்ட விளக்கம்**

## குளிப்பின் பொருள், அதன் சட்டம் மற்றும் அதன் ஆதாரம்

**1) குளிப்பின் பொருள்**

அரபியில் غسل – குஸ்ல் என்றால் உடல் முழுவதையும் கழுவுவதற்கு அதாவது குளிப்பதற்கு சொல்லப்படும்.

வணக்கத்தின் அடிப்படையில், அல்லாஹ்வின் கட்டளையை நிறைவேற்றுகின்றேன் என்ற எண்ணத்தில்- குறிப்பிட்ட ஒரு வழிமுறையில் உடல் முழுவதையும் சுத்தமான தண்ணீரைக் கொண்டு கழுவுவதற்கு மார்க்க வழக்கத்தில் غسل – குஸ்ல் என்று சொல்லப்படும்.

**2) குளிப்பின் சட்டம்**

குளிப்பிற்குரிய காரணம் ஏற்பட்டுவிட்டால் தொழுகைக்கு முன்பாக குளிப்பது கடமையாகும்.

அல்லாஹ் கூறுகின்றான்:

وَإِنْ كُنْتُمْ جُنُبًا فَاطَّهَّرُوا

நீங்கள் (தொழுகையை நாடும்போது) பெருந்தொடக்குள்ளவர்களாக இருந்தால் நீங்கள் குளித்து சுத்தமாகி விடுங்கள். (அல்குர்ஆன் 5:6)

இன்னும் குளிப்புடைய முறைகள் சம்பந்தமாக பல நபித்தோழர்கள் அறிவிக்கின்ற நபிமொழிகள் அனைத்தும் பெருந்தொடக்கு ஏற்பட்டால் கண்டிப்பாக குளிக்க வேண்டும் என்பதை வலியுறுத்துகின்றன.

**3) குளிப்பிற்கான காரணங்கள்**

பின்வருகின்ற காரணங்களில் ஒன்று ஏற்பட்டுவிட்டால் குளிப்பு கடமையாகிவிடும்.

**1) ஆண் அல்லது பெண்ணிலிருந்து உணர்ச்சியுடன் உறுப்பில் துடிப்புடன் مني – மணிய் - விந்து, வெளியேறிவிட்டால் குளிப்பு கடமையாகிவிடும்.**

ஆதாரம் 1:

அல்லாஹ் கூறுகின்றான்:

وَإِنْ كُنْتُمْ جُنُبًا فَاطَّهَّرُوا

நீங்கள் (தொழுகையை நாடும்போது) பெருந்தொடக்குள்ளவர்களாக இருந்தால் நீங்கள் குளித்து சுத்தமாகி விடுங்கள். (அல்குர்ஆன் 5:6)

ஆதாரம் 2:

**عَنْ عَلِيٍّ ﵁ قَالَ كُنْتُ رَجُلًا مَذَّاءً فَقَالَ لِي رَسُولُ اللهِ ﷺ إِذَا رَأَيْتَ الْمَذْيَ فَاغْسِلْ ذَكَرَكَ وَتَوَضَّأْ وُضُوءَكَ لِلصَّلَاةِ وَإِذَا فَضَخْتَ الْمَاءَ فَاغْتَسِلْ رواه النسائي برقم ١٩٣**

அலி ﵁ கூறுகின்றார்கள்: அதிகம் மத்யி (வெள்ளை நீர்) வெளியேறுகின்ற ஓர் ஆணாக நான் இருந்தேன். ஆகவே, ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் என்னிடம் கூறினார்கள்: "நீ மத்யியை (வெள்ளை நீரை)ப் பார்த்தால் உனது மர்மஸ்தானத்தை கழுவி விடு! தொழுகைக்கு நீ உளூ செய்வது

போன்று உளூ செய்! ஆனால், நீ (மர்மஸ்தானத்தின்) துடிப்புடன் விந்துவை வெளியேற்றினால் குளித்து விடு!"[104]

விழிப்புடன் இருப்பவர் மீது குளிப்பு கடமையாகுவதற்குத்தான் இந்த இரண்டு நிபந்தனைகளும். ஆனால், ஒருவர் தூங்கி விழித்தப் பின்னர் தனது ஆடையில் பிசுபிசுப்பான ஈரத்தை பார்த்தால் அவர் குளித்தாக வேண்டும். அவருக்கு அந்த விந்து ஆசையுடன், துடிப்புடன் வெளியேறியதா என்று தெரியவில்லை என்றாலும் சரி.

ஆதாரம்:

**عَنْ أُمِّ سَلَمَةَ أُمِّ الْمُؤْمِنِينَ ﵂ أَنَّهَا قَالَتْ جَاءَتْ أُمُّ سُلَيْمٍ ﵂ إِلَى رَسُولِ اللّٰهِ ﷺ فَقَالَتْ يَا رَسُولَ اللّٰهِ إِنَّ اللّٰهَ لَا يَسْتَحْيِي مِنَ الْحَقِّ هَلْ عَلَى الْمَرْأَةِ مِنْ غُسْلٍ إِذَا هِيَ احْتَلَمَتْ فَقَالَ رَسُولُ اللّٰهِ ﷺ نَعَمْ إِذَا رَأَتْ الْمَاءَ رواه البخاري برقم ٢٧٣**

உம்மு சலமா ﵂ அறிவிக்கின்றார்கள்: ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களிடம் உம்மு சுலைம் ﵂ வந்தார். அவர் கேட்டார், "அல்லாஹ்வின் தூதரே! நிச்சயமாக அல்லாஹ் உண்மையான விஷயத்தில் வெட்கப்பட மாட்டான். பெண்ணுக்கு ஸ்கலிதமாகி விட்டால் அவள் மீது குளிப்பு கடமையா?" அதற்கு ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: "ஆம். அவள் ஈரத்தை பார்த்துவிட்டால் (குளிக்க வேண்டும்)."[105]

மேற்கூறப்பட்ட சட்டங்கள் அனைத்திலும் அறிஞர்கள் ஒருமித்த கருத்தில் உள்ளனர்.

**2) ஆணுடைய உறுப்பு பெண்ணின் உறுப்பில் திரையின்றி பட்டு விட்டால், விந்து வெளியேறவில்லை என்றாலும் குளிப்பு கடமையாகி விடும்.**

---

104. நூல்: நசாயி, எண்: 193
105. நூல்: புகாரி, எண்: 273

ஆதாரம்:

**عَنْ عَائِشَةَ ﵂ قَالَ رَسُولُ اللهِ ﷺ إِذَا جَلَسَ بَيْنَ شُعَبِهَا الْأَرْبَعِ وَمَسَّ الْخِتَانُ الْخِتَانَ فَقَدْ وَجَبَ الْغُسْلُ رواه مسلم برقم ٥٢٦**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: பெண்ணுடைய நான்கு கிளைகளுக்கு மத்தியில் ஓர் ஆண் அமர்ந்து (ஒருவரின் உறுப்பின்) முற்பகுதி (இன்னொருவரின் உறுப்பின்) முற்பகுதியை தொட்டுவிட்டால் திட்டமாக குளிப்பு கடமையாகிவிடும்.[106]

**3) காஃபிர் - இறை மறுப்பாளர் ஒருவர் இஸ்லாமை ஏற்றுக் கொண்டால் அவரும் குளிக்க வேண்டும்.** ஒருவர் முஸ்லிமாக இருந்து, பிறகு, மதம் மாறி, பிறகு இஸ்லாமை ஏற்றால் அவரும் குளிக்க வேண்டும்.

ஆதாரம்:

**عَنْ قَيْسِ بْنِ عَاصِمٍ ﵁ قَالَ أَتَيْتُ النَّبِيَّ ﷺ أُرِيدُ الْإِسْلَامَ فَأَمَرَنِي أَنْ أَغْتَسِلَ بِمَاءٍ وَسِدْرٍ رواه أبو داود برقم ٣٠١**

கைஸ் இப்னு ஆஸிம் ﵁ கூறுகிறார்: நான் நபி ﷺ அவர்களிடம் இஸ்லாமை ஏற்க விரும்பி வந்தேன். "நான் இலந்தை இலை கலந்த தண்ணீரில் குளிக்கும்படி" அவர்கள் எனக்கு கட்டளையிட்டார்கள்.[107]

**4) ஹைழ் (மாதவிடாய்), நிஃபாஸ் (பிரசவ தொடக்கு) நின்றுவிட்டால் குளிப்பது கடமையாகும்.**

ஆதாரம்:

**عَنْ عَائِشَةَ ﵂ قَالَتْ قَالَ النَّبِيُّ ﷺ إِذَا أَقْبَلَتْ الْحَيْضَةُ فَدَعِي الصَّلَاةَ وَإِذَا أَدْبَرَتْ فَاغْسِلِي عَنْكِ الدَّمَ وَصَلِّي البخاري برقم ٣١٩**

106. அறிவிப்பாளர்: ஆயிஷா ﵂, நூல்: முஸ்லிம், 526

107. நூல்: அபூ தாவூத், எண்: 301

நபி ﷺ கூறினார்கள்: மாதவிடாய் வந்துவிட்டால் நீ தொழுகையை விட்டு விடு! அது முடிந்துவிட்டால் உன்னை விட்டும் இரத்தத்தை கழுவி விட்டு (-குளித்துவிட்டு) தொழுது கொள்![108]

இந்த ஹதீஸின் மற்ற அறிவிப்புகளில்,

وَإِذَا أَدْبَرَتْ فَاغْتَسِلِي وَصَلِّي

ஹைழ் முடிந்துவிட்டால் நீ குளித்துக் கொள்! இன்னும் தொழுது கொள்! என்று வந்துள்ளது.[109]

பிரசவத்திற்குப் பின்னர் பெண்களுக்கு ஏற்படுகின்ற உதிரப்போக்கும் மாதவிடாய் போன்றுதான் என்பதில் அறிஞர்களுக்கு மத்தியில் மாற்று கருத்து இல்லை. ஆகவே, பிரசவ உதிரம் நின்றுவிட்ட பின்னர் குளித்துவிட்டுதான் தொழுகையை ஆரம்பிக்க வேண்டும்.

**5) ஒருவருக்கு மரணம் ஏற்பட்டுவிட்டால் அவரை குளிப்பாட்டுவது கடமையாகும்.**

ஆதாரம் 1:

**عَنْ أُمِّ عَطِيَّةَ الْأَنْصَارِيَّةِ رضي الله عنها قَالَتْ دَخَلَ عَلَيْنَا رَسُولُ اللّٰهِ ﷺ حِينَ تُوُفِّيَتْ ابْنَتُهُ فَقَالَ اغْسِلْنَهَا ثَلَاثًا أَوْ خَمْسًا أَوْ أَكْثَرَ مِنْ ذَلِكَ إِنْ رَأَيْتُنَّ ذَلِكَ بِمَاءٍ وَسِدْرٍ رواه البخاري برقم ١١٧٥**

தனது மகள் (ஜைனப் அவர்கள்) மரணித்துவிட்ட போது நபி ﷺ அவர்கள் எங்களிடம் வந்தார்கள். மேலும், கூறினார்கள்: மூன்று முறை, அல்லது ஐந்து முறை, அல்லது நீங்கள் (தேவை என்று) கருதினால் அதைவிட அதிகமாக, இலந்தை இலை கலந்த தண்ணீரால் அவர்களை குளிப்பாட்டுங்கள்![110]

108. அறிவிப்பாளர்: ஆயிஷா رضي الله عنها, நூல்: புகாரி, எண்: 319
109. நூல்: அபூ தாவூத், எண்: 246 | நூல்: நசாயி, எண்: 348
110, அறிவிப்பாளர்: உம்மு அதிய்யா رضي الله عنها, நூல்: புகாரி, எண்: 1175

ஆதாரம் 2:

عَنْ ابْنِ عَبَّاسٍ رضي الله عنه قَالَ بَيْنَمَا رَجُلٌ وَاقِفٌ بِعَرَفَةَ إِذْ وَقَعَ عَنْ رَاحِلَتِهِ فَوَقَصَتْهُ أَوْ قَالَ فَأَوْقَصَتْهُ قَالَ النَّبِيُّ ﷺ اغْسِلُوهُ بِمَاءٍ وَسِدْرٍ رواه البخاري برقم ١١٨٦

ஒருவர் அரஃபாவில் நின்றிருந்தபோது தனது வாகனத்தில் இருந்து விழுந்துவிட்டார். அவருடைய கழுத்தை அது முறித்து விட்டது. (அவர் இறந்து விட்டார்.) நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: அவரை இலந்தை இலை கலந்த தண்ணீரில் குளிப்பாட்டுங்கள்![111]

**இரண்டாவது சட்ட விளக்கம்**

## குளிப்பின் முறை

பெருந்தொடக்கு ஏற்பட்ட பின்னர் குளிப்பதற்கு இரு முறைகள் உள்ளன. ஒன்று விரும்பத்தக்க சிறந்த முறை. இரண்டாவது ஆகுமான, போதுமாகி விடுகின்ற முறை.

**விரும்பத்தக்க சிறந்த முறை பின்வருமாறு:**

முதலில் தன் இரு கைகளையும் கழுவ வேண்டும்.

பிறகு, மர்மஸ்தானத்தையும் அதில் இருக்கக்கூடிய அருவருக்கத்தக்கவற்றையும் இடது கையால் கழுவ வேண்டும்.

பிறகு, கையை நன்கு தேய்த்து கழுவ வேண்டும்.

பிறகு, தொழுகைக்கு உளூ செய்வது போன்று உளூ செய்ய வேண்டும். கால்களை மட்டும் குளித்து முடித்தவுடன் அந்த இடத்தை விட்டு சற்று நகர்ந்து பின்னர் கழுவ வேண்டும். (தண்ணீர் தேங்கக்கூடிய இடத்தில் குளித்தால் கால்களை இறுதியாக கழுவ வேண்டும். தரை சிமிண்ட் போடப்பட்ட அல்லது கல் தரையாக இருந்தால் இது அவசியமில்லை.)

111, அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் رضي الله عنه, நூல்: புகாரி, எண்: 1186

பிறகு, தலையில் ஒரு கை தண்ணீர் ஊற்றி முடிகளை கோதி கழுவ வேண்டும். முடியின் வேறுகளில் தண்ணீர் சேருகின்ற வரை தேய்த்து, கோதி கழுவ வேண்டும்.

பிறகு, தனது தலையில் மூன்று முறை தண்ணீர் ஊற்ற வேண்டும். பிறகு, உடல் முழுவதும் தண்ணீர் ஊற்ற வேண்டும்.

இது குறித்து பல நபிமொழிகள் ஹதீஸ் நூல்களில் வந்துள்ளன.[112]

**இரண்டாவது போதுமான, ஆகுமான முறை:**

ஜனாபத் -பெருந்தொடக்குடைய குளிப்பின் நிய்யத் மனதில் வைத்துக் கொண்டு உடல் முழுவதையும் நனைத்து குளித்துவிட்டால் குளிப்பு போதுமாகி விடும்.[113]

வாஜிபுகளை நிறைவேற்றி குளிப்பது போதுமான குளிப்பாகும். வாஜிபுகளையும் முஸ்தஹப்புகளையும் நிறைவேற்றுவது குளிப்பின் சிறந்த, பரிபூரணமான முறையாகும்.

ஜனாபத் - பெருந்தொடக்குடைய குளிப்பு குளிக்கும்போது பெண் தனது சடையை அவிழ்க்க வேண்டிய அவசியமில்லை. ஆனால், மாதவிடாய் முடிந்து குளிக்கும்போது சடைகளை அவிழ்த்துவிட்டு குளிக்க வேண்டும்.

**عَنْ أُمِّ سَلَمَةَ ﵂ قَالَتْ قُلْتُ يَا رَسُولَ اللهِ إِنِّي امْرَأَةٌ أَشُدُّ ضَفْرَ رَأْسِي فَأَنْقُضُهُ لِغُسْلِ الْجَنَابَةِ قَالَ لَا إِنَّمَا يَكْفِيكِ أَنْ تَحْثِيَ عَلَى رَأْسِكِ ثَلَاثَ حَثَيَاتٍ ثُمَّ تُفِيضِينَ عَلَيْكِ الْمَاءَ فَتَطْهُرِينَ رواه مسلم برقم ٤٩٧**

உம்மு ஸலமா ﵂ கூறுகிறார்கள்: அல்லாஹ்வின் தூதரே! நான் எனது தலை முடிகளை சடையாக கட்டுகின்றேன். ஜனாபத்துடைய குளிப்புக்காக நான் அதை அவிழ்க்க வேண்டுமா என்று கேட்டேன். அவர்கள் கூறினார்கள்: "இல்லை. உமது தலையின் மீது மூன்று

112. பார்க்க: புகாரி, ஹதீஸ் எண்: 241, 251, 252, 258, 265, 267, 272.

113. பார்க்க: புகாரி, ஹதீஸ் எண்: 265

முறை தண்ணீர் அள்ளி ஊற்றுவது உமக்கு போதுமானதாகும். பிறகு, உம்மீது (முழுமையாக) தண்ணீரை ஊற்றுவாயாக! அப்போது நீர் சுத்தமாகிவிடுவீர்!"[114]

**மூன்றாவது சட்ட விளக்கம்**

## முஸ்தஹப்பான - விரும்பத் தகுந்த குளிப்புகள்

கடமையான குளிப்பின் வகைகளை முன்பு கூறினோம்.

சுன்னத்தான, விரும்பத் தகுந்த குளிப்புகள் பின்வருமாறு:

**1) ஒரு முறை உடலுறவு வைத்த பின்னர் மறுமுறை உடலுறவு வைக்க நாடினால், அதற்கு முன்பாக குளித்துக் கொள்ள வேண்டும்.** இவ்வாறே, ஒவ்வொரு முறை உடலுறவு வைப்பதற்கு முன்பாக குளிப்பது சுன்னாவாகும்.

عَنْ أَبِي رَافِعٍ ﵁ أَنَّ النَّبِيَّ ﷺ طَافَ ذَاتَ يَوْمٍ عَلَى نِسَائِهِ يَغْتَسِلُ عِنْدَ هٰذِهِ وَعِنْدَ هٰذِهِ قَالَ قُلْتُ لَهُ يَا رَسُولَ اللّٰهِ أَلَا تَجْعَلُهُ غُسْلًا وَاحِدًا قَالَ هٰذَا أَزْكَى وَأَطْيَبُ وَأَطْهَرُ رواه أبو داود برقم ١٨٩

அபூ ராஃபி ﵁ கூறுகிறார்கள்: நபி ﷺ அவர்கள் ஒரு நாள் தனது மனைவிமார்களிடம் உறவு கொண்டார்கள். இந்த மனைவியிடமும் குளித்தார்கள். இந்த மனைவியிடமும் குளித்தார்கள். அப்போது நான் கேட்டேன், ஒரேஒரு குளிப்பாக நீங்கள் இதை ஆக்கிக் கொள்ள வேண்டாமா?. அவர்கள் கூறினார்கள்: "இதுதான் மிகத் தூய்மையானதும், மிக நல்லதும், மிக சுத்தமானதும் ஆகும்."[115]

**2) வெள்ளிக் கிழமைக்காக குளிப்பது சுன்னாவாகும்.**

ஆதாரம்:

114. நூல்: முஸ்லிம், எண்: 497
115. நூல்: அபூ தாவூத், எண்: 189

**عَنْ عَبْدِ اللهِ بْنِ عُمَرَ ﷺ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ إِذَا جَاءَ أَحَدُكُمْ الْجُمُعَةَ فَلْيَغْتَسِلْ رواه البخاري برقم ٨٢٨**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: உங்களில் ஒருவர் ஜுமுஆ தொழுகைக்கு வந்தால் அவர் குளிக்கட்டும்.[116]

வெள்ளிக் கிழமை குளிப்பது மிக முக்கியமான சுன்னாவாகும்.

**3) இரண்டு பெருநாள்களுக்காக குளிப்பது சுன்னாவாகும்.**

**4) ஹஜ், உம்ராவுடைய இஹ்ராமுக்கு முன்பாக குளிப்பது சுன்னாவாகும்.**

நபி ﷺ அவர்கள் இஹ்ராமிற்கு முன்னர் குளித்தார்கள்.

**5) இறந்தவரை குளிப்பாட்டிய பின்னர், குளிப்பாட்டியவர் தானும் குளித்துக் கொள்வது சுன்னாவாகும்.**

ஆதாரம்:

**عَنْ أَبِي هُرَيْرَةَ ﷺ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ مَنْ غَسَّلَ مَيِّتًا فَلْيَغْتَسِلْ رواه ابن ماجة برقم ١٤٥٢**

ரஸூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: யார் இறந்தவரை குளிப்பாட்டுவாரோ (குளிப்பாட்டிய பின்னர்) அவர் குளித்துக் கொள்ளட்டும்.[117]

**நான்காவது சட்ட விளக்கம்:**

## குளிப்பு கடமையானவர் பேண வேண்டிய சட்டங்கள்

**1) ஒருவருக்கு குளிப்பு கடமையாகி விட்டால் அவர் மஸ்ஜிதில் தங்கக் கூடாது.** ஆனால், மஸ்ஜிதை கடக்க வேண்டியதாக இருந்தால்

116. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு உமர் ﷺ, நூல்: புகாரி, எண்: 828
117. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﷺ, நூல்: இப்னு மாஜா, எண்: 1452

கடந்து செல்லலாம். பெருந்தொடக்குள்ளவர் உளூ செய்துவிட்டால் அவர் பள்ளியில் தங்குவது கூடும்.

ஆதாரம்:

அல்லாஹ் கூறுகின்றான்:

وَلَا جُنُبًا إِلَّا عَابِرِي سَبِيلٍ حَتَّى تَغْتَسِلُوا

பெருந்தொடக்குள்ளவர்களாக நீங்கள் இருந்தால் நீங்கள் குளிக்கின்ற வரை தொழுமிடத்தை நீங்கள் நெருங்காதீர்கள், நீங்கள் பாதையை கடந்து செல்பவர்களாக இருந்தாலே தவிர. (அல்குர்ஆன் 4:43)

பெருந்தொடக்குள்ளவர் உளூ செய்த பின்னர் மஸ்ஜிதில் தங்கலாம் என்று நபித்தோழர்கள் பலர் கூறி இருக்கின்றனர்.

மேலும், உளூ செய்வது பெருந்தொடக்கை இலேசாக்கி விடுகின்றது. இரண்டு சுத்தங்களில் உளூவும் ஒன்றாகும்.

**2) குர்ஆன் பிரதியை தொடுவது கூடாது.**

ஆதாரம் 1:

அல்லாஹ் கூறுகின்றான்:

لَا يَمَسُّهُ إِلَّا الْمُطَهَّرُونَ (٧٩)

இதை பரிசுத்தமானவர்களைத் தவிர (மற்றவர்கள்) தொட மாட்டார்கள். (அல்குர்ஆன் 56:79)

ஆதாரம் 2:

عَنْ عَبْدِ اللهِ بْنِ أَبِي بَكْرٍ ﷺ أَنَّ فِي الْكِتَابِ الَّذِي كَتَبَهُ رَسُولُ اللهِ ﷺ

لِعَمْرِو بْنِ حَزْمٍ أَنْ لَا يَمَسَّ الْقُرْآنَ إِلَّا طَاهِرٌ رواه مالك في الموطا برقم ٤١٩

அம்ர் இப்னு ஹஸ்ம் ﷺ அவர்களுக்கு ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் எழுதிய கடிதத்தில் எழுதப்பட்டுள்ளதாவது, "சுத்தமானவரைத் தவிர குர்ஆனை வேறு யாரும் தொட மாட்டார்" என்று அறிவிக்கப்பட்டுள்ளது.[118] பார்க்க[119]

**3) பெருந்தொடக்குள்ளவர் குளித்து சுத்தமாகின்ற வரை குர்ஆன் ஓதுவது கூடாது.** ஆகவே, பெருந்தொடக்குள்ளவர் குளிக்கின்ற வரை குர்ஆனிலிருந்து எதையும் ஓத மாட்டார்.

ஆதாரம்:

عَنْ عَلِيٍّ ﷺ قَالَ كَانَ رَسُولُ اللهِ ﷺ يَقْضِي الْحَاجَةَ فَيَأْكُلُ مَعَنَا اللَّحْمَ وَيَقْرَأُ الْقُرْآنَ وَلَمْ يَكُنْ يَحْجِزُهُ أَوْ يَحْجُبُهُ إِلَّا الْجَنَابَةُ رواه أحمد برقم ٩٦٢

அலி ﷺ அவர்கள் கூறுகிறார்கள்: ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் தேவையை நிறைவேற்றுவார்கள். பிறகு, எங்களுடன் கறி

118. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு அபீ பக்ர் இப்னு முஹம்மது இப்னு அம்ர் இப்னு ஹஸ்ம், நூல்: முவத்தா, எண்: 419

119. குறிப்பு: முதல் ஆதாரத்தில் பரிசுத்தமானவர்கள் என்று அல்லாஹ் குறிப்பிடுவது வானவர்களை ஆகும். அங்கு கூறப்பட்ட குர்ஆன் என்பது லவ்ஹுல் மஹ்ஃபூள் என்ற பாதுகாக்கப்பட்ட பதிவேட்டில் உள்ள குர்ஆனாகும். நம்மிடம் இருக்கக்கூடிய குர்ஆன் பிரதி இங்கு நோக்கமல்ல. இது குறித்து மேலதிக கருத்துகளை தஃப்ஸீர் தபரியில் பார்க்கலாம்.

இரண்டாவது ஹதீஸில் கூறப்பட்டுள்ள தாஹிர் சுத்தமானவர் என்பது முஃமினைக் குறிக்கும். முஃமின் - நம்பிக்கையாளர் எப்போதும் அசுத்தமாக மாட்டார். அதாவது, இணைவைக்கக்கூடிய முஷ்ரிக் குர்ஆனை தொடுவதை தவிர்க்க வேண்டும். அதாவது ஒரு முஷ்ரிக் குர்ஆனை அவமதிப்பார் என்று இருந்தால் அவரிடம் குர்ஆனை தருவதை தவிர்க்க வேண்டும். எதிரிகளின் நாட்டிற்கு குர்ஆன் பிரதிகளை எடுத்துச் செல்வதை நபி ﷺ அவர்கள் தடுத்தார்கள். ஏனெனில், அவர்களின் கரங்களில் குர்ஆன் பிரதி கிடைத்தால் அவர்கள் அதை இழிவுப்படுத்தாமல் அதைக்கொண்டு பயன்பெறுவார்கள் என்றிருப்பின், குர்ஆன் பிரதியை தருவது குற்றமல்ல. நபி ﷺ அவர்கள் குர்ஆன் வசனங்கள் அடங்கிய கடிதங்களை காஃபிர் மன்னர்களுக்கு அனுப்பினார்கள். குர்ஆனின் ஒரு வசனமும் குர்ஆன்தான். ஆகவே, குர்ஆனை உளூ இல்லாதவரும் தொடலாம் என்பது பல நபித்தோழர்கள் மற்றும் பல அறிஞர்களுடைய ஆதாரப்பூர்வமான கருத்தாகும். அதையே நாமும் விரும்புகிறோம்.

சாப்பிடுவார்கள்; குர்ஆன் ஓதுவார்கள். குர்ஆன் ஓதுவதிலிருந்து ஜனாபத் - பெருந்தொடக்கைத் தவிர வேறு எதுவும் அவர்களைத் தடுக்காது.[120]

**4) பெருந்தொடக்குள்ளவர் தொழுவதும் கூடாது.**

**5) பெருந்தொடக்குள்ளவர் தவாஃப் செய்வதும் கூடாது.**

இது பற்றிய விளக்கம் ஐந்தாவது பாடத்தில் "உளூ செய்வது எந்த எந்த காரியங்களுக்காக அவசியம்" என்ற தலைப்பில் கூறப்பட்டுள்ளது.

--------------------------

பாடம் 7

120. அறிவிப்பாளர்: அலி ﵁, நூல்: அஹ்மது, எண்: 962, இப்னு மாஜா, திர்மிதி, ஹாகிம் ﵏ ஆகிய இமாம்களும் இந்த ஹதீஸை பதிவு செய்துள்ளார்கள். இப்னு ஸகன், அப்துல் ஹக் பகவி ﵏ போன்ற இமாம்கள் இந்த ஹதீஸ் ஸஹீஹ் என்று கூறுவதாகவும் இமாம் ஷாஃபி ﵀ அவர்கள் இந்த ஹதீஸ் ஹஸன் என்று கூறுவதாகவும் "அத்தல்கீஸுல் ஹபீர்" என்ற நூலில் இப்னு ஹஜர் பதிவு செய்கிறார்கள்.

# تيمم
# தயம்மும்

தயம்மும் என்ற பதம் நாடுதல் என்ற பொருளில் வருகிறது.

உளூ செய்ய முடியாத சூழ்நிலையில், அல்லாஹ்வின் கட்டளைக்கு இணங்க, தூய்மையான மண்ணின் மூலமாக, முகத்தையும் இரு கரங்களையும் மார்க்கம் கற்பித்த முறையில் தடவுவதற்கு தயம்மும் என்று மார்க்கத்தில் சொல்லப்படுகின்றது.

இதில் பல சட்ட விளக்கங்கள் உள்ளன.

**முதலாவது சட்ட விளக்கம்:**

## தயம்மும் உடைய சட்டம் மற்றும் தயம்மும் செய்வதைப் பற்றி மார்க்கம் கூறி இருக்கின்ற ஆதாரம்

சிறுதொடக்கு மற்றும் பெருந்தொடக்கிலிருந்து சுத்தம் அடைவதற்கு மார்க்கம் அனுமதித்த ஒரு முறைதான் தயம்மும் என்பது.

இது, அல்லாஹ் தனது அடியார்களுக்கு வழங்கிய ஒரு சலுகையும் இந்த மார்க்கத்தின் சிறப்பம்சங்களில் ஒன்றுமாகும்.

இன்னும், இந்த சலுகை முந்திய உம்மத்துகளுக்கு வழங்கப்பட வில்லை. இது, இந்த உம்மத்திற்கு மட்டும் வழங்கப்பட்ட விசேஷமான சிறப்புச் சலுகையாகும்.

ஆதாரம் 1:

அல்லாஹ் கூறுகின்றான்:

يَاأَيُّهَا الَّذِينَ آمَنُوا إِذَا قُمْتُمْ إِلَى الصَّلَاةِ فَاغْسِلُوا وُجُوهَكُمْ وَأَيْدِيَكُمْ إِلَى الْمَرَافِقِ وَامْسَحُوا بِرُءُوسِكُمْ وَأَرْجُلَكُمْ إِلَى الْكَعْبَيْنِ وَإِنْ كُنْتُمْ جُنُبًا فَاطَّهَّرُوا وَإِنْ كُنْتُمْ مَرْضَى أَوْ عَلَى سَفَرٍ أَوْ جَاءَ أَحَدٌ مِنْكُمْ مِنَ الْغَائِطِ أَوْ لَامَسْتُمُ النِّسَاءَ فَلَمْ تَجِدُوا مَاءً فَتَيَمَّمُوا صَعِيدًا طَيِّبًا فَامْسَحُوا بِوُجُوهِكُمْ وَأَيْدِيكُمْ مِنْهُ مَا يُرِيدُ اللَّهُ لِيَجْعَلَ عَلَيْكُمْ مِنْ حَرَجٍ وَلَكِنْ يُرِيدُ لِيُطَهِّرَكُمْ وَلِيُتِمَّ نِعْمَتَهُ عَلَيْكُمْ لَعَلَّكُمْ تَشْكُرُونَ (٦)

நம்பிக்கையாளர்களே! நீங்கள் தொழுகைக்கு தயாரானால் உங்கள் முகங்களையும் உங்கள் கைகளை முழங்கைகள் வரையும் கழுவுங்கள்! உங்கள் தலைகளுக்கு மஸ்ஹ் செய்யுங்கள்! உங்கள் கால்களை கரண்டைக்கால் வரை கழுவுங்கள்! நீங்கள் பெருந் தொடக்குள்ளவர்களாக இருந்தால், இன்னும் நீங்கள் நோயாளிகளாக இருந்தால் அல்லது பயணத்தில் இருந்தால், அல்லது உங்களில் ஒருவர் கழிப்பிடம் சென்றுவந்தால், அல்லது மனைவிமார்களிடம் உறவுகொண்டு விட்டால், அப்போது நீங்கள் (குளிப்பதற்கும், உளூ செய்வதற்கும்) தண்ணீரை பெறவில்லை என்றால் சுத்தமான மண்ணை நாடி அதில் தயம்மும் செய்யுங்கள்! அதிலிருந்து உங்கள் முகங்களையும் உங்கள் கரங்களையும் தடவுங்கள்! உங்களுக்கு சிரமத்தை ஏற்படுத்த அல்லாஹ் நாடவில்லை. எனினும், அவன் உங்களை சுத்தப்படுத்தவும் அவனது அருளை உங்கள் மீது பூரணபடுத்தவும் நாடுகின்றான்.

(அல்குர்ஆன் 5:6)



ஆதாரம் 2:

நபி ﷺ அவர்கள் கூறி இருக்கின்றார்கள்.

الصَّعِيدُ الطَّيِّبُ وَضُوءُ الْمُسْلِمِ وَلَوْ إِلَى عَشْرِ سِنِينَ فَإِذَا وَجَدْتَ الْمَاءَ فَأَمِسَّهُ

**جِلْدَكَ فَإِنَّ ذَلِكَ خَيْرٌ. رواه أبو داود برقم ٢٨١**

சுத்தமான மண் முஸ்லிமுடைய உளூவாகும், (தண்ணீர் கிடைக்காமல்) பத்து ஆண்டுகள் வரை ஆனாலும் சரி. உமக்கு தண்ணீர் கிடைத்து விட்டால் உமது உடலை அதில் நனைத்துக் கொள்! நிச்சயமாக அது உமக்கு சிறந்ததாகும்.[121]

ஆதாரம் 3:

**عَنْ أَبِي ذَرٍّ ﵁ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ إِنَّ الصَّعِيدَ الطَّيِّبَ طَهُورُ الْمُسْلِمِ وَإِنْ لَمْ يَجِدِ الْمَاءَ عَشْرَ سِنِينَ فَإِذَا وَجَدَ الْمَاءَ فَلْيُمِسَّهُ بَشَرَتَهُ فَإِنَّ ذَلِكَ خَيْرٌ. رواه الترمذي برقم ١٢٤**

நிச்சயமாக ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறி இருக்கின்றார்கள்: "நிச்சயமாக சுத்தமான மண் முஸ்லிமை சுத்தப்படுத்தக்கூடிய சாதனமாகும். (தண்ணீர் கிடைக்காமல்) பத்து ஆண்டுகள் வரை ஆனாலும் சரி. அவர் தண்ணீரைப் பெற்றுக் கொண்டால் அவர் தமது உடலை அதில் நனைத்துக் கொள்ளட்டும்! நிச்சயமாக அது சிறந்ததாகும்."[122]

**கருத்து:** மேற்கூறப்பட்ட இரண்டு நபிமொழிகளிலும் சுத்தமான மண்ணை உளூ என்பதாகவும் தஹூர் என்பதாகவும் நபி ﷺ கூறியிருக்கின்றார்கள். அதாவது, தண்ணீர் எப்படி உளூ செய்வதற்கும் சுத்தம் செய்வதற்கும் பயன்படுத்தப்படுகிறதோ அதுபோன்று தண்ணீர் இல்லாத போது சிறுதொடக்கு, பெருந்தொடக்கிலிருந்து சுத்தமாகுவதற்கு மண்ணை பயன்படுத்தலாம். ஒருவருக்கு பத்து ஆண்டுகள் தண்ணீர் கிடைக்கவில்லையென்றாலும் கூட அதற்குப் பதிலாக அவர் மண்ணைப் பயன்படுத்தி சுத்தமடைந்து கொள்ளலாம்.

---

121. அறிவிப்பாளர்: அபூ தர் ﵁, நூல்: அபூ தாவூத், எண்: 281
122. அறிவிப்பாளர்: அபூ தர், ﵁ நூல்: திர்மிதி, எண்: 124

ஆதாரம் 4:

நபி ﷺ கூறினார்கள்:

وَجُعِلَتْ لِي الْأَرْضُ مَسْجِدًا وَطَهُورًا رواه البخاري برقم ٤١٩

மேலும் எனக்கு பூமி மஸ்ஜிதாகவும் தஹூராகவும் - சுத்தம் செய்யக்கூடிய சாதனமாகவும் ஆக்கப்பட்டுள்ளது.[123]

கருத்து: தொழுகையின் நேரம் வந்துவிட்டால், ஒரு முஸ்லிம் உடனடியாக தொழுகையை நிறைவேற்ற வேண்டும். தனக்கருகில் மஸ்ஜித் இல்லையென்றால் அவர் பூமியில் எங்கு வேண்டுமானாலும் தொழலாம். இந்த சலுகை முந்திய சமுதாய மக்களுக்கு இல்லாமல் இருந்தது. மேலும், தண்ணீர் இல்லாதபோது பூமியின் மண்ணின் மூலமாக தயம்மும் செய்து சுத்தமாகிக் கொள்ளலாம். இந்த சலுகையும் முந்திய சமுதாயத்திற்கு இல்லாமல் இருந்தது.

தயம்மும் செய்வதற்கு உரிய நிபந்தனைகள் பெற்றுக் கொள்ளப்பட்டால் தயம்மும் செய்வதை மார்க்கம் அனுமதிக்கிறது. தயம்மும் உளூவுடைய ஸ்தானத்தில் இருக்கின்றது. ஆகவே, உளூவின் மூலம் நிறைவேற்றப்படக்கூடிய இபாதத்துகளை இதன் மூலமும் நிறைவேற்றலாம் என்பதில் மார்க்க அறிஞர்கள் ஒருமித்த கருத்தில் உள்ளனர்.

குர்ஆன், ஹதீஸ், மற்றும் இஜ்மாவின் மூலம் உறுதியான ஒன்றுதான் தயம்மும்.

**இரண்டாவது சட்ட விளக்கம்**



## தயம்மும் உடைய நிபந்தனைகள் மற்றும் தயம்மும் செய்வதை ஆகுமாக்கக்கூடிய காரணங்கள்

தண்ணீரை பயன்படுத்த முடியாமல் போகும்போது தயம்மும் செய்வது ஆகுமாகிவிடுகின்றது.

123. அறிவிப்பாளர்: ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் ؓ, நூல்: புகாரி, எண்: 419

தண்ணீர் கிடைக்கவில்லை என்றால், அல்லது தண்ணீரை பயன்படுத்துவதால் உடலில் நோய் ஏற்பட்டுவிடும் அல்லது இருக்கின்ற நோய் இன்னும் அதிகமாகிவிடும் என்று பயந்தால், அல்லது கடும் குளிர் நிலவினால் தயம்மும் செய்வது அனுமதிக்கப்பட்டதாக ஆகிவிடும்.

ஆதாரம்:

**عَنْ عِمْرَانَ بْنِ حُصَيْنٍ الْخُزَاعِيِّ رضي الله عنه أَنَّ رَسُولَ اللّٰهِ ﷺ رَأَى رَجُلًا مُعْتَزِلًا لَمْ يُصَلِّ فِي الْقَوْمِ فَقَالَ يَا فُلَانُ مَا مَنَعَكَ أَنْ تُصَلِّيَ فِي الْقَوْمِ فَقَالَ يَا رَسُولَ اللّٰهِ أَصَابَتْنِي جَنَابَةٌ وَلَا مَاءَ قَالَ عَلَيْكَ بِالصَّعِيدِ فَإِنَّهُ يَكْفِيكَ**

**رواه البخاري برقم ٣٣٥**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் ஒரு மனிதர் தொழாமல் மக்களை விட்டு தனித்து அமர்ந்திருந்ததைப் பார்த்தார்கள். இன்னவரே! மக்களுடன் சேர்ந்து நீ தொழாமல் இருக்க உன்னை எது தடுக்கிறது? என்று கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதரே! எனக்கு ஜனாபத் - பெருந்தொடக்கு ஏற்பட்டுவிட்டது. (என்னிடம் குளிப்பதற்கு) தண்ணீர் இல்லை என்று அவர் கூறினார். நபி ﷺ கூறினார்கள்: நீ மண்ணை பயன்படுத்து! நிச்சயமாக அது உனக்கு போதுமாகும்.[124]

## தயம்மும் சரியாகுவதற்கு பின்வருகின்ற நிபந்தனைகள் அவசியம்

**1) நிய்யத் -** தொழுகைக்காக தயம்மும் செய்கிறேன், தஹாராவிற்காக தயம்மும் செய்கிறேன் என்ற எண்ணம் மனதில் இருக்க வேண்டும். வணக்க வழிபாடுகள் எல்லாவற்றுக்கும் நிய்யத் அவசியம். தயம்மும் செய்வதும் ஒரு இபாதா - வணக்கமாகும். ஆகவே, இதற்கும் நிய்யத் - எண்ணம் அவசியமாகும்.

**2) முஸ்லிமாக இருக்க வேண்டும்.** ஆகவே, காஃபிர் -நிராகரிப்பாளர்

124. அறிவிப்பாளர்: இம்ரான் இப்னு ஹுசைன் அல்குஸாயி رضي الله عنه, நூல்: புகாரி, எண்: 335

தயம்மும் செய்வது சரியாகாது. ஏனெனில், தயம்மும் ஓர் இபாதாவாகும். காஃபிரிடமிருந்து எந்த இபாதத்தும் ஏற்கப்படாது.

**3) புத்தி சுவாதீனம் இருக்க வேண்டும்.** ஆகவே, பைத்தியம் பிடித்தவர், மயக்கம் அடைந்தவர் தயம்மும் செய்வது சரியாகாது.

**4) பிரித்தறிகின்ற பக்குவம் இருக்க வேண்டும்.** ஆகவே, ஏழு வயதிற்கு குறைவான சிறு பிள்ளைகளின் தயம்மும் சரியாகாது.

**5) தண்ணீர் கிடைக்காமல் இருக்க வேண்டும். அல்லது, தண்ணீரைப் பயன்படுத்துவதால் சிரமம் ஏற்படும் என்று இருக்க வேண்டும்.** அதாவது தண்ணீர் இல்லையென்றால் தயம்மும் செய்யலாம்.

ஆதாரம் 1:

அல்லாஹ் கூறுகின்றான்:

فَلَمْ تَجِدُوا مَاءً فَتَيَمَّمُوا صَعِيدًا طَيِّبًا فَامْسَحُوا بِوُجُوهِكُمْ وَأَيْدِيكُمْ مِنْهُ

நீங்கள் தண்ணீரை பெறவில்லை என்றால் தூய்மையான மண்ணை நாடுங்கள்! அதிலிருந்து உங்கள் முகங்களையும் கரங்களையும் தடவுங்கள்! (அல்குர்ஆன் 5:6)

ஆதாரம் 2:

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:

فَقَالَ الصَّعِيدُ الطَّيِّبُ وَضُوءُ الْمُسْلِمِ وَلَوْ إِلَى عَشْرِ سِنِينَ فَإِذَا وَجَدْتَ الْمَاءَ فَأَمِسَّهُ جِلْدَكَ فَإِنَّ ذٰلِكَ خَيْرٌ رواه أبو داود برقم ٢٨١

சுத்தமான மண் முஸ்லிமுடைய உளூவாகும், (தண்ணீர் கிடைக்காமல்) பத்து ஆண்டுகள் வரை ஆனாலும் சரி. நீ தண்ணீரைப் பெற்றுக் கொண்டால் உமது உடலை அதில் நனைத்துக் கொள்! நிச்சயமாக அது உமக்கு சிறந்ததாகும்.[125]

125. அறிவிப்பாளர்: அபூ தர் ﵁, நூல்: அபூ தாவூத், எண்: 281

அல்லது, தண்ணீரை பயன்படுத்துவதால் உடல் நலக்குறைவு ஏற்படும் என்று பயந்தால், அல்லது உடல் நலம் பெறுவது தாமதமாகும் என்று பயந்தால், அல்லது நோய் அதிகமாகிவிடும் என்று அச்சப்பட்டால் தயம்மும் செய்வது கூடும்.

ஆதாரம் 1:

அல்லாஹ் கூறுகின்றான்:

**وَإِنْ كُنْتُمْ مَرْضَى**

நீங்கள் நோயாளிகளாக இருந்தால்...(நீங்கள் தயம்மும் செய்யுங்கள்!)
(அல்குர்ஆன் 5:6)

ஆதாரம் 2:

**عَنْ جَابِرٍ رضي الله عنه قَالَ خَرَجْنَا فِي سَفَرٍ فَأَصَابَ رَجُلًا مِنَّا حَجَرٌ فَشَجَّهُ فِي رَأْسِهِ ثُمَّ احْتَلَمَ فَسَأَلَ أَصْحَابَهُ فَقَالَ هَلْ تَجِدُونَ لِي رُخْصَةً فِي التَّيَمُّمِ فَقَالُوا مَا نَجِدُ لَكَ رُخْصَةً وَأَنْتَ تَقْدِرُ عَلَى الْمَاءِ فَاغْتَسَلَ فَمَاتَ فَلَمَّا قَدِمْنَا عَلَى النَّبِيِّ ﷺ أُخْبِرَ بِذَلِكَ فَقَالَ قَتَلُوهُ قَتَلَهُمْ اللهُ أَلَا سَأَلُوا إِذْ لَمْ يَعْلَمُوا فَإِنَّمَا شِفَاءُ الْعِيِّ السُّؤَالُ إِنَّمَا كَانَ يَكْفِيهِ أَنْ يَتَيَمَّمَ وَيَعْصِرَ أَوْ يَعْصِبَ شَكَّ مُوسَى عَلَى جُرْحِهِ خِرْقَةً ثُمَّ يَمْسَحَ عَلَيْهَا وَيَغْسِلَ سَائِرَ جَسَدِهِ رواه أبو داود برقم ٢٨٤**

ஜாபிர் رضي الله عنه கூறுகிறார்கள்: நாங்கள் ஒரு பயணத்தில் சென்றோம். எங்களில் ஒருவருக்கு தலையில் கல்லடிபட்டு அவருடைய தலையை அந்தக் கல் உடைத்து விட்டது. (அவர் இரவில் தூங்கும்போது) அவருக்கு ஸ்கலிதம் ஆகிவிட்டது. தயம்மும் செய்வதற்கு எனக்கு சலுகை இருப்பதை நீங்கள் காண்கிறீர்களா? என்று (சகத் தோழர்களிடம்) அவர் கேட்டார். நீர் தண்ணீரை பயன்படுத்துவதற்கு சக்தியுள்ளவராக இருக்கின்ற நிலையில் உமக்கு சலுகை இருப்பதை நாங்கள் காணவில்லை

என்று அவர்கள் கூறினர். ஆகவே, அவர் குளித்து விட்டார். (தலைக் காயத்தில் தண்ணீர் சென்றுவிட்டதால்) அவர் இறந்து விட்டார். நாங்கள் நபி ﷺ அவர்களிடம் வந்தவுடன் இந்த செய்தி நபி ﷺ அவர்களுக்கு அறிவிக்கப்பட்டது. நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: "மக்கள் அவரை கொன்று விட்டார்கள். அல்லாஹ் அவர்களைக் கொல்வானாக! அவர்கள் (மார்க்க சட்டங்களை) அறிந்திருக்கவில்லை என்றால் (கல்வியாளர்களிடம்) விசாரித்திருக்க வேண்டாமா! அறியாமையின் நிவாரணம் விசாரிப்பதுதான். அவர் தயம்மும் செய்வது அவருக்கு போதுமானதாக இருந்திருக்கும். அல்லது தனது காயத்தில் கட்டு ஒன்றை கட்டிவிட்டு, அதன் மீது மஸ்ஹ் செய்துவிட்டு, உடலின் ஏனைய பகுதிகளை அவர் கழுவி (குளித்து) இருக்கலாம்.[126]

அல்லது, குளிர் கடுமையாக இருந்தால் தயம்மும் செய்யலாம்.

ஆதாரம்:

**عَن عَمْرِو بْنِ الْعَاصِ رضي الله عنه أَنَّهُ قَالَ لَمَّا بَعَثَهُ رَسُولُ اللهِ ﷺ عَامَ ذَاتِ السَّلَاسِلِ قَالَ احْتَلَمْتُ فِي لَيْلَةٍ بَارِدَةٍ شَدِيدَةِ الْبَرْدِ فَأَشْفَقْتُ إِنْ اغْتَسَلْتُ أَنْ أَهْلَكَ فَتَيَمَّمْتُ ثُمَّ صَلَّيْتُ بِأَصْحَابِي صَلَاةَ الصُّبْحِ قَالَ فَلَمَّا قَدِمْنَا عَلَى رَسُولِ اللهِ ﷺ ذَكَرْتُ ذٰلِكَ لَهُ فَقَالَ يَا عَمْرُو صَلَّيْتَ بِأَصْحَابِكَ وَأَنْتَ جُنُبٌ قَالَ قُلْتُ نَعَمْ يَا رَسُولَ اللهِ إِنِّي احْتَلَمْتُ فِي لَيْلَةٍ بَارِدَةٍ شَدِيدَةِ الْبَرْدِ فَأَشْفَقْتُ إِنْ اغْتَسَلْتُ أَنْ أَهْلَكَ ذَكَرْتُ قَوْلَ اللهِ عَزَّ وَجَلَّ {وَلَا تَقْتُلُوا أَنْفُسَكُمْ إِنَّ اللهَ كَانَ بِكُمْ رَحِيمًا} فَتَيَمَّمْتُ ثُمَّ صَلَّيْتُ فَضَحِكَ رَسُولُ اللهِ ﷺ وَلَمْ يَقُلْ شَيْئًا رواه أحمد برقم ١٧١٤٤**

அம்ர் இப்னுல் ஆஸ் رضي الله عنه கூறுகிறார்கள்: "ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் என்னை தாத்துஸ் சலாசில் (என்ற போர் நடந்த) ஆண்டில் (தாத்துஸ்

126. நூல்: அபூ தாவூத், எண்: 284.

சலாசில்[127] என்ற இடத்தில் நடந்த போருக்கு) அனுப்பினார்கள். கடுமையான குளிர் நிறைந்த ஓர் இரவில் எனக்கு ஸ்கலிதம் ஆகிவிட்டது. நான் குளித்தால் இறந்து விடுவேனோ என்று நான் பயந்தேன். ஆகவே, நான் தயம்மும் செய்து எனது தோழர்களுக்கு ஸுப்ஹ் தொழுகை தொழவைத்தேன். நாங்கள் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களிடம் வந்தபோது, இதை நான் அவர்களிடம் கூறினேன். அவர்கள் கூறினார்கள், "அம்ரே! நீ ஜுனுபாளியாக இருக்க உனது தோழர்களுக்கு தொழவைத்தாயா?" நான் கூறினேன், "அல்லாஹ்வின் தூதரே! கடுமையான குளிர் நிறைந்த ஓர் இரவில் எனக்கு ஸ்கலிதம் ஏற்பட்டு விட்டது. நான் குளித்தால் இறந்து விடுவேனோ என்று பயந்தேன். "உங்களை நீங்கள் கொல்லாதீர்கள்! நிச்சயமாக அல்லாஹ் உங்கள் மீது மகா கருணையுள்ளவனாக இருக்கின்றான்." (அல்குர்ஆன் 4:29) என்ற அல்லாஹ்வின் வசனம் எனக்கு நினைவுக்கு வந்தது. ஆகவே, நான் தயம்மும் செய்து தொழவைத்தேன். உடனே, ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் சிரித்து விட்டார்கள். அவர்கள் எதுவும் கூறவில்லை.[128]

**6) தயம்மும் செய்யப் பயன்படுத்தப்படும் மண் சுத்தமாக இருக்க வேண்டும். அதில் அடிக்கும்போது கையில் தூசி ஒட்டும்படியாக இருக்க வேண்டும். அசுத்தமாக இருக்கக் கூடாது.** ஆகவே சிறுநீர் போன்ற அசுத்தங்கள் இருக்கின்ற மண்ணில் தயம்மும் செய்வது கூடாது.

ஆதாரம்:

அல்லாஹ் கூறுகின்றான்:

فَلَمْ تَجِدُوا مَاءً فَتَيَمَّمُوا صَعِيدًا طَيِّبًا فَامْسَحُوا بِوُجُوهِكُمْ وَأَيْدِيكُمْ مِنْهُ

நீங்கள் தண்ணீரை பெறவில்லை என்றால் தூய்மையான மண்ணை

127. போர் நடைபெற்ற இடம்.

128. நூல்: அஹ்மது, எண்: 17144

நாடுங்கள்! அதிலிருந்து உங்கள் முகங்களையும் கரங்களையும் தடவுங்கள்! (அல்குர்ஆன் 5:6)

இப்னு அப்பாஸ் ﷺ கூறுகிறார்கள்: **صعيد** ஸயீது என்றால் விவசாயம் செய்யப்படுகின்ற மண், **طيب** என்றால் - **طاهر** சுத்தமானது என்று பொருளாகும்.

இமாம் அவ்ஸாயி ﷺ கூறுகிறார்கள்: “மணலும் **صعيد** “ஸயீது” வகையைச் சேர்ந்ததுதான்.”

**مِنْهُ** “மின்ஹு” அதிலிருந்து என்ற பதம் கையை மண்ணில் அடிக்கும் போது அது கையில் ஒட்டும்படியாக இருக்க வேண்டும் என்பதை உணர்த்துகிறது.

அப்படிப்பட்ட மண் இல்லை என்றால் மணல் அல்லது கல் போன்றவற்றிலும் தயம்மும் செய்யலாம்.

ஆதாரம்:

அல்லாஹ் கூறுகின்றான்:

فَاتَّقُوا اللّٰهَ مَا اسْتَطَعْتُمْ

உங்களால் முடிந்தளவு அல்லாஹ்வை நீங்கள் பயப்படுங்கள்! (அல்குர்ஆன் 64:16)

**மூன்றாவது சட்ட விளக்கம்:**

## தயம்முமை முறிக்கின்ற செயல்கள்

இவை மூன்றாகும்.

**1) உளூவுக்கு பதிலாக செய்யப்பட்ட தயம்முமை உளூவை முறிக்கின்ற எல்லா செயல்களும் முறித்து விடும்.**

குளிப்புக்கு பதிலாக செய்யப்பட்ட தயம்முமை குளிப்பை கட்டாயமாக்கக் கூடிய எல்லா செயல்களும் முறித்து விடும். உதாரணமாக, ஜனாபத், ஹைழ், நிஃபாஸ்.

**2) தண்ணீர் இல்லாத காரணத்தால் தயம்மும் செய்திருந்தால் தண்ணீர் கிடைத்தவுடன் அந்த தயம்மும் முறிந்து விடும்.**

ஆதாரம்:

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:

فَقَالَ الصَّعِيدُ الطَّيِّبُ وَضُوءُ الْمُسْلِمِ وَلَوْ إِلَى عَشْرِ سِنِينَ فَإِذَا وَجَدْتَ الْمَاءَ فَأَمِسَّهُ جِلْدَكَ فَإِنَّ ذَلِكَ خَيْرٌ. رواه أبو داود برقم ٢٨١

சுத்தமான மண் முஸ்லிமுடைய உளூவாகும், (தண்ணீர் கிடைக்காமல்) பத்து ஆண்டுகள் வரை ஆனாலும் சரி. உமக்கு தண்ணீர் கிடைத்து விட்டால் உமது உடலை அதில் நனைத்துக் கொள்! நிச்சயமாக அது உமக்கு சிறந்ததாகும்.[129]

**3) நோய் போன்ற காரணத்திற்காக தயம்மும் செய்யப்பட்டிருந்தால் அந்த நோய் நீங்கி விடும் போது, செய்த தயம்மும் முறிந்து விடும்.**

**நான்காவது சட்ட விளக்கம்**

## தயம்மும் செய்வதன் முறை

அ) நிய்யத் செய்ய வேண்டும்.

ஆ) பிஸ்மில்லாஹ் சொல்ல வேண்டும்.

இ) இரண்டு உள்ளங்கைகளால் பூமியில் ஒரு முறை அடிக்க வேண்டும்.

ஈ) பிறகு, அவற்றை ஊத வேண்டும், அல்லது உதற வேண்டும்.

உ) பிறகு, அவற்றின் மூலம் முகத்தை தடவ வேண்டும்.

ஊ) இன்னும், இரு கைகளையும் மணிக்கட்டு வரை தடவ வேண்டும்.

ஆதாரம் 1:

129. அறிவிப்பாளர்: அபூ தர் ﵁, நூல்: அபூ தாவூத், எண்: 281

**عَنْ عَمَّارِ بْنِ يَاسِرٍ ﵁ أَنَّ النَّبِيَّ ﷺ أَمَرَهُ بِالتَّيَمُّمِ لِلْوَجْهِ وَالْكَفَّيْنِ. رواه الترمذي برقم ١٣٤**

நபி ﷺ அவர்கள் முகத்திற்கும் இரு முன்னங்கைகளுக்கும் தயம்மும் செய்யும்படி தனக்கு கட்டளையிட்டதாக அம்மார் இப்னு யாசிர் ﵁ கூறுகிறார்கள்.[130]

ஆதாரம் 2:

அம்மார் இப்னு யாசிர் ﵁ அவர்களுக்கு நபி ﷺ அவர்கள் தயம்மும் எப்படி செய்வது என்பதை கற்றுக் கொடுக்கும்போது,

**إِنَّمَا كَانَ يَكْفِيكَ هٰكَذَا فَضَرَبَ النَّبِيُّ ﷺ بِكَفَّيْهِ الْأَرْضَ وَنَفَخَ فِيهِمَا ثُمَّ مَسَحَ بِهِمَا وَجْهَهُ وَكَفَّيْهِ رواه البخاري برقم ٣٢٦**

“உமக்கு இவ்வாறு செய்வது போதும் என்று கூறிவிட்டு, நபி ﷺ அவர்கள் தனது இரண்டு முன்னங்கைகளையும் பூமியில் அடித்துவிட்டு, அவற்றில் ஊதினார்கள். பிறகு, அவற்றின் மூலம் தமது முகத்தையும் முன்னங்கைகள் இரண்டையும் மஸ்ஹ் செய்தார்கள் (-தடவினார்கள்).”[131]

---------------------



130. நூல்: திர்மிதி, எண்: 134.

131. நூல்: புகாரி, எண்: 326

# அசுத்தங்கள் மற்றும் அவற்றை (-அசுத்தமடைந்தவற்றை) சுத்தம் செய்கின்ற வழிமுறை

இதில் பல சட்ட விளக்கங்கள் உள்ளன.

**முதலாவது சட்ட விளக்கம்:**

## அசுத்தம் என்றால் என்ன? அதன் இரு வகைகள் யாவை?

மார்க்கம் எதை விட்டும் விலகி இருக்க வேண்டும் என்று ஏவியதோ அத்தகைய அருவருக்கத்தக்க ஒவ்வொரு வஸ்துவும் அசுத்தம் ஆகும்.

அசுத்தம் இருவகைப்படும்.

1) நேரடியாக, வெளிரங்கத்தில் அசுத்தமாக இருக்கின்ற வஸ்துக்கள். உதாரணமாக: சிறுநீர், மலம், இரத்தம்[132] கழுதையின் விட்டை.

2) சட்டத்தின் அடிப்படையில் அசுத்தம் என்று முடிவு செய்யப்பட்டவை.

மலம், ஜலம் கழித்தப் பின்னர், காற்று பிரிந்த பின்னர் ஏற்படுகின்ற சிறு தொடக்கைப் போல். இந்த வகை அசுத்தம் உளூவைக் கொண்டு

132. இரத்தத்தை உண்பது கூடாது என்பது குர்ஆனிலிருந்து உறுதி செய்யப்பட்ட ஒரு சட்டமாகும். ஆனால், அதற்குக் காரணம் அது அசுத்தமானது என்று ஆதாரங்கள் எதிலும் கூறப்படவில்லை. ஆகவே, இரத்தம் அசுத்தம் என்று கூறுவது அறிஞர்களின் கருத்தாகுமே தவிர குர்ஆனிலும் சுன்னாவிலும் அதற்கு நேரடியான ஆதாரங்கள் ஏதும் இல்லை என்று சில அறிஞர்கள் கூறுகிறார்கள். கழுதையின் விட்டை என்று சொல்லப்பட்டது ஓர் உதாரணமாகும். எதன் மாமிசத்தை உண்பது கூடாதோ அதன் சிறுநீரும் மலமும் அசுத்தமானதாகும்.

நீங்கும். உடலுறவுக்குப் பின்னர் ஏற்படுகின்ற ஜனாபத் -பெருந்தொடக்கு, அல்லது **حيض** - ஹைழ் அல்லது **نفاس** - நிஃபாஸ் நின்ற பின்னர் ஏற்படுகின்ற நிலையைப் போல். இந்த வகை அசுத்தம் குளிப்பைக் கொண்டு நீங்கும்.

அசுத்தத்தை நீக்கக்கூடியது தண்ணீர்தான்.

ஆதாரம்:

அல்லாஹ் கூறுகின்றான்:

وَيُنَزِّلُ عَلَيْكُمْ مِنَ السَّمَاءِ مَاءً لِيُطَهِّرَكُمْ بِهِ

அவன் உங்கள் மீது வானத்திலிருந்து மழையை இறக்குகின்றான், அதன் மூலம் உங்களை சுத்தப்படுத்துவதற்காக. (அல்குர்ஆன் 8:11)

**கருத்து:** தண்ணீரை அல்லாஹ் இறக்குவது அவன் நம்மை சுத்தப்படுத்துவற்காக என்று கூறுகிறான். இதிலிருந்து தண்ணீர் சுத்தப்படுத்தக் கூடியது என்பதையும் எல்லா வகையான அசுத்தங்களையும் தண்ணீரைக் கொண்டுதான் நீக்க முடியும் என்பதையும் விளங்க முடிகிறது.

அசுத்தம் மூன்று வகைகளாக பிரிக்கப்படுகிறது.

1) **نَجَاسَةٌ مُغَلَّظَةٌ** - கடினமான அசுத்தம். இது, நாய் இன்னும் நாயிலிருந்து வரக்கூடிய அனைத்தும் ஆகும்.

2) **نَجَاسَةٌ مُخَفَّفَةٌ** - இலகுவான அசுத்தம். இது, இதுவரை உணவு உட்கொள்ளாத ஆண் குழந்தையின் சிறுநீராகும்.

3) **نَجَاسَةٌ مُتَوَسِّطَةٌ** - நடுநிலையான அசுத்தம். இது, மேற்கூறப்பட்ட இரண்டைத் தவிர உள்ள மற்ற அசுத்தங்கள் ஆகும். உதாரணமாக, சிறுநீர், மலம், இறந்துவிட்ட கால்நடைகள்.

**இரண்டாவது சட்ட விளக்கம்**

# ஆதாரத்தின் அடிப்படையில் அசுத்தம் என்று முடிவானவை

**1) மனிதனின் சிறுநீர், மலம், வாந்தி.**

இதில், உணவு சாப்பிடாத சிறு குழந்தையின் சிறுநீர் மட்டும் விதிவிலக்காகும். இத்தகைய குழந்தையின் சிறுநீர் பட்ட இடத்தை சுத்தம் செய்வதற்கு அதன் மீது தண்ணீர் தெளித்தால் போதுமானதாகும்.

ஆதாரம்:

**عَنْ أُمِّ قَيْسٍ بِنْتِ مِحْصَنٍ ﵂ أَنَّهَا أَتَتْ بِابْنٍ لَهَا صَغِيرٍ لَمْ يَأْكُلْ الطَّعَامَ إِلَى رَسُولِ اللّٰهِ ﷺ فَأَجْلَسَهُ رَسُولُ اللّٰهِ ﷺ فِي حَجْرِهِ فَبَالَ عَلَى ثَوْبِهِ فَدَعَا بِمَاءٍ فَنَضَحَهُ وَلَمْ يَغْسِلْهُ رواه البخاري برقم ٢١٦**

உம்மு கைஸ் பின்த் மிஹ்ஸன் ﵂ கூறுகிறார்: அது வரை உணவு சாப்பிடாத ஒரு சிறு ஆண் குழந்தையை ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களிடம் அவர் கொண்டு வந்தார். ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் அந்த குழந்தையை தனது மடியில் அமரவைத்தார்கள். அந்த குழந்தை நபியவர்களின் ஆடையில் சிறுநீர் கழித்துவிட்டது. நபி ﷺ அவர்கள் தண்ணீரை வரவழைத்து அதன் மீது தெளித்தார்கள். அதை கழுவவில்லை.[133]

பெரிய மனிதரின் சிறு நீரைப் போன்று, உணவு சாப்பிட ஆரம்பித்து விட்ட ஆண் குழந்தையின் சிறு நீரும், பெண் குழந்தையின் சிறு நீரும் கழுவி சுத்தம் செய்யப்பட வேண்டிய ஒன்றுதான்.

**2) அறுத்து உண்பது அனுமதிக்கப்பட்ட பிராணியின் ஓடக்கூடிய இரத்தமும் அசுத்தம்தான்.** மாமிசத்திலும் நரம்புகளிலும் எலும்புகளிலும்

---

133. நூல்: புகாரி, எண்: 216

ஒட்டி இருக்கக்கூடிய அல்லது எலும்புகளுக்குள் தேங்கி இருக்கக்கூடிய இரத்தம் சுத்தமானதாகும்.[134]

ஆதாரம்:

அல்லாஹ் கூறுகின்றான்:

أَوْ دَمًا مَسْفُوحًا

அல்லது ஓடக்கூடிய இரத்தத்தைத் தவிர. (இதுவும் என் மீது தடுக்கப்பட்டதாகும்). (அல்குர்ஆன் 6:145)

**3) எதன் மாமிசத்தை உண்பது தடுக்கப்பட்டுள்ளதோ அதன் சிறுநீர், விட்டை. உதாரணமாக, பூனை, எலி, கீறி கிழித்து திண்ணக்கூடிய மிருகங்களின் சிறுநீர் மற்றும் மலத்தைப் போல்.**

**4) மார்க்க முறையில் அறுக்கப்படாமல் தானாக இறந்துவிட்ட பிராணி.**

134. மேற்குறிப்பிட்ட வசனத்தில் ஓடக்கூடிய இரத்தம் உண்பதற்கு தடுக்கப்பட்ட ஒன்று என்பது குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால் அதற்குக் காரணம் குறிப்பிடப்படவில்லை. எனவே, இரத்தம் அசுத்தம் என்பதால்தான் ஹராமாக்கப்பட்டுள்ளது என்று கூற முடியாது. குர்ஆனிலோ ஸஹீஹான நபிமொழிகளிலோ இரத்தம் அசுத்தம் என்று குறிப்பிடப்படவில்லை. மாறாக ஓடக்கூடிய இரத்தம் உண்பதற்கு தடுக்கப்பட்டது என்றுதான் கூறப்பட்டுள்ளது. ஷஹீதுகள் குளிப்பாட்டப்படாமல் அடக்கம் செய்யப்படுவார்கள். அவர்களது இரத்தம் அசுத்தமான ஒன்றாக இருந்திருந்தால் கண்டிப்பாக அவர்களது உடல்களிலிருந்து அந்த இரத்தத்தை அகற்றும்படி கூறப்பட்டிருக்கும். மேலும், ஆடு, மாடுகளை அறுக்கும்போது அவற்றுடைய இரத்தம் ஆடைகளில் படுவது இயல்பான ஒன்றாகும். அந்த இரத்தம் அசுத்தமாக இருந்திருக்குமேயானால் அதை ஆடைகளிலிருந்து உடனடியாக சுத்தம் செய்ய வேண்டும் என்று கூறப்பட்டிருக்கும். போர்களில் காயம்பட்ட நபித்தோழர்கள் தொழுகையை நிறைவேற்றி இருக்கின்றார்கள். கத்தி, ஈட்டி, அம்பு போன்ற ஆயுதங்களால் ஏற்பட்ட காயங்களில் இருந்து இரத்தம் வடிந்து கொண்டிருப்பது இயல்பான ஒன்றாகும். மேலும், அம்பினால் தாக்கப்பட்டு இரத்தம் வடிந்த நிலையில் நபித்தோழர் ஒருவர் தொழுகையை நிறைவேற்றியது ஸஹீஹான ஹதீஸ்களில் பதிவு செய்யப்பட்டுள்ளது. இரத்தம் அசுத்தமான ஒன்றாக இருந்திருந்தால் அது வெளியேறுவதால் உளூ முறிந்திருக்கும். அதற்குப் பிறகு உளூ செய்யாமலும் அந்த இரத்தத்தை உடலில் இருந்து அகற்றாமலும் இரத்தம் வடிவதை நிறுத்தாமலும் தொழுவது கூடாது என்று இருந்திருக்கும். ஆனால், அப்படி ஏதும் ஹதீஸ் நூல்களில் பதிவு செய்யப்படவில்லை. இந்த ஹதீஸை பதிவு செய்த ஹதீஸ் கலை இமாம்களும் இந்த ஹதீஸில் கூறப்பட்ட கருத்திற்கு மாற்றுக் கருத்தை அல்லது மறுப்பை பதிவு செய்யவில்லை.

ஆதாரம்:

அல்லாஹ் கூறுகின்றான்:

إِلَّا أَنْ يَكُونَ مَيْتَةً

இறந்துவிட்ட பிராணியாக இருந்தாலே தவிர (அதுவும் என் மீது தடுக்கப்பட்டதாகும்). (அல்குர்ஆன் 6:145)

ஆனால், கடல் உணவில் இறந்துவிட்டவை இந்த சட்டத்திலிருந்து விதிவிலக்கு அளிக்கப்பட்டவை ஆகும். கடல் உணவுகளில் தானாக இறந்தவற்றை உண்பது ஹலால் ஆகும். அவ்வாறே வெட்டுக்கிளியும், ஓடுகின்ற இரத்தம் இல்லாத உயிரினமும் அவை இறந்த பின்னரும் ஹலால் ஆகும்.[135]

**5) مذي - மத்யி - மனைவியுடன் விளையாடும்போது அல்லது உடலுறவைப் பற்றி சிந்தனை வரும்போது உறுப்பில் இருந்து வெளியேறக்கூடிய மென்மையான, வெள்ளை நிற பிசுபிசுப்பான ஒரு நீராகும். இது வெளியேறும்போது உறுப்பில் துடிப்பு இருக்காது. இது வெளியாகுவதால் உடல் சோர்வும் ஏற்படாது. பல நேரம் இது வெளியாகுவதை உணரவும் முடியாது. இந்த மதியும் அசுத்தமான ஒன்றாகும்.**

ஆதாரம்:

عَنْ عَلِيٍّ ﷺ قَالَ كُنْتُ رَجُلًا مَذَّاءً فَأَمَرْتُ رَجُلًا أَنْ يَسْأَلَ النَّبِيَّ ﷺ لِمَكَانِ ابْنَتِهِ فَسَأَلَ فَقَالَ تَوَضَّأْ وَاغْسِلْ ذَكَرَكَ رواه البخاري برقم ٢٦١

அலி ﷺ கூறுகிறார்கள்: அதிகம் மத்யி வெளியேறுகின்ற ஓர் ஆணாக நான் இருந்தேன். (இது பற்றி) நபி ﷺ அவர்களிடம் கேட்கும்படி

135. மேற்கூறப்படுகின்ற ஆதாரங்களில் ஆடு, மாடு போன்ற நாம் புசிக்க ஆகுமான பிராணிகள் இறந்து விட்டால் அவை உண்பதற்கு ஹராம் ஆகிவிடும் என்றுதான் கூறப்பட்டுள்ளது. அவை அசுத்தமாகி விட்டன என்று கூறப்படவில்லை. ஒன்றை உண்பது ஹராம் ஆகுவதற்கு அது அசுத்தமானதாகத்தான் இருக்க வேண்டும் என்பது காரணமல்ல. வேறு பல காரணங்களும் இருக்கலாம். அல்லாஹ் மிக அறிந்தவன்.

ஒருவரை நான் பணித்தேன். (நான் நேரடியாக கேட்க வெட்கப்பட்டேன்.) ஏனெனில், அவர்களின் மகளார் எனது மனைவியாக இருந்தார். அந்த மனிதர் (நபி ﷺ அவர்களிடம்) கேட்டார். நபி ﷺ கூறினார்கள்: உளூ செய்து கொள்! உமது உறுப்பை கழுவி விடு![136]

இது விஷயத்தில் அல்லாஹ் நமக்கு சட்டத்தை எளிதாக்கி விட்டான். மதியை தவிர்ப்பது மிக சிரமமான ஒன்றாகும். இதற்காக நம்மீது குளிப்பு கடமையாகி இருந்தால் அது நமக்கு மிகுந்த சிரமத்தை ஏற்படுத்தி இருக்கும்.

**6) ودي - வத்யு - சிறுநீர் கழித்த பின்னர் உறுப்பிலிருந்து வெளியேறுகின்ற வெள்ளையான, சற்று கட்டியான ஒரு நீராகும். இது வெளியேறினால் உறுப்பை கழுவ வேண்டும். உளூ செய்ய வேண்டும். இதனால் குளிப்பு கடமையாகாது.**

**7) ஹைழ் - மாதவிடாய் இரத்தம். இதுவும் அசுத்தமான ஒன்றாகும்.**

ஆதாரம்:

**عَنْ أَسْمَاءَ رضي الله عنها قَالَتْ جَاءَتْ امْرَأَةٌ النَّبِيَّ ﷺ فَقَالَتْ أَرَأَيْتَ إِحْدَانَا تَحِيضُ فِي الثَّوْبِ كَيْفَ تَصْنَعُ قَالَ تَحُتُّهُ ثُمَّ تَقْرُصُهُ بِالْمَاءِ وَتَنْضَحُهُ وَتُصَلِّي فِيهِ رواه البخاري برقم ٢٢٠**

அஸ்மா رضي الله عنها அறிவிக்கின்றார்கள்: ஒரு பெண் நபி ﷺ அவர்களிடம் வந்தார். எங்களில் ஒருவர் (அவளுடைய) ஆடையில் ஹைழ் (உடைய இரத்தம்) வ(டி)ந்து விடுகிறது (-ஹைழ் உடைய இரத்தம் ஆடையில் பட்டு விடுகிறது). அவள் என்ன செய்ய வேண்டும்? என்று அவர் கேட்டார். நபி ﷺ கூறினார்கள்: “அதை சுரண்ட வேண்டும், பிறகு, தண்ணீரால் அதை போக்க வேண்டும், அதன் மீது தண்ணீர் தெளிக்க வேண்டும், (பிறகு) அவர் அதில் தொழலாம்.”[137]

136. அறிவிப்பாளர்: அலி رضي الله عنه, நூல்: புகாரி, எண்: 261
137. நூல்: புகாரி, எண்: 220

**மூன்றாவது சட்ட விளக்கம்**

## அசுத்தத்தை (-அசுத்தமடைந்ததை) சுத்தம் செய்கின்ற முறை

1) இடத்தில் அசுத்தம் இருந்தால் அந்த அசுத்தத்தை அந்த இடத்திலிருந்து போக்கக்கூடிய அளவிற்கு ஒரு முறை அதன் மீது தண்ணீர் ஊற்றி சுத்தம் செய்வது போதுமானது.

ஆதாரம்:

**عَنْ أَنَسٍ ﷺ قَالَ بَالَ أَعْرَابِيٌّ فِي الْمَسْجِدِ فَأَمَرَ النَّبِيُّ ﷺ بِدَلْوٍ مِنْ مَاءٍ فَصُبَّ عَلَيْهِ رواه النسائي برقم ٥٤**

அனஸ் ﵁ கூறுகிறார்: ஒரு கிராமவாசி மஸ்ஜிதில் சிறுநீர் கழித்து விட்டார். நபி ﷺ அவர்கள் ஒரு வாளி தண்ணீர் ஊற்றும் படி ஏவினார்கள். அதன் மீது தண்ணீர் ஊற்றப்பட்டது.[138]

2) பூமியின் மீது (தரையில், இடத்தில்) அல்லாமல் ஆடை அல்லது பாத்திரங்களில் அசுத்தம் இருந்தால் அதன் சட்டம் பின் வருமாறு:

பாத்திரத்தில் நாய் நக்கிவிட்டால் அந்த பாத்திரத்தை ஏழுமுறை கழுவ வேண்டும். அதில் ஒரு முறை மண்ணால் தேய்த்து கழுவ வேண்டும்.

ஆதாரம்:

**عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ إِذَا وَلَغَ الْكَلْبُ فِي إِنَاءِ أَحَدِكُمْ فَلْيُرِقْهُ ثُمَّ لِيَغْسِلْهُ سَبْعَ مِرَارٍ. رواه مسلم برقم ٤١٨**

ரஸூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: உங்கள் ஒருவரின் பாத்திரத்தில் நாய் நக்கிவிட்டால் அதை அவர் கீழே ஊற்றி விடட்டும். பிறகு, அதை ஏழு முறை கழுவட்டும்.[139]

---

138. நூல்: நசாயி, எண்: 54

139. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்: முஸ்லிம், எண்: 418

இமாம் நசாயி ﵀ அறிவிக்கின்ற அறிவிப்பில் **أُولَاهُنَّ بِالتُّرَابِ** அதில் முதல்முறை மண்ணால் கழுவட்டும் என்று வந்துள்ளது.[140]

நாய் நக்கினால் (-நாயின் எச்சில் பட்டுவிட்டால்) ஏழு முறையும் அதில் ஒரு முறை மண்ணால் கழுவ வேண்டும் என்பது) பாத்திரங்களுக்கு மட்டுமல்ல. ஆடை, விரிப்பு என எதில் நாய் வாய் வைத்துவிட்டாலும் அதை ஏழு முறையும் அதில் ஒரு முறை மண்ணாலும் கழுவ வேண்டும்.

3) பன்றியின் அசுத்தம் மற்ற அசுத்தங்களைப் போன்றுதான். அசுத்தம் நீங்கும்படியாக ஒரு முறை கழுவினால் போதும். ஏழு முறை கழுவ வேண்டிய அவசியமில்லை.

4) உணவு சாப்பிட ஆரம்பிக்காத ஆண் குழந்தை சிறுநீர் கழித்துவிட்டால் அதன் மீது தண்ணீரை தெளிப்பதே போதுமாகி விடும்.

ஆதாரம் 1:

**عَنْ عَلِيٍّ ﵁ قَالَ يُغْسَلُ مِنْ بَوْلِ الْجَارِيَةِ وَيُنْضَحُ مِنْ بَوْلِ الْغُلَامِ مَا لَمْ يَطْعَمْ**

**رواه أبو داود برقم ٣٢٢**

அலி ﵁ கூறுகிறார்கள்: பெண் குழந்தையின் சிறு நீரை (-அதுபட்ட இடத்தை அல்லது ஆடையை) கழுவ வேண்டும். ஆண் குழந்தை உணவு சாப்பிடாத வரை அதன் சிறுநீர் மீது (-அந்த சிறுநீர் பட்ட இடத்தின் மீது தண்ணீர்) தெளிக்கப்படும்.[141]

ஆதாரம் 2:

**عَنْ أُمِّ قَيْسٍ بِنْتِ مِحْصَنٍ ﵂ أَنَّهَا أَتَتْ بِابْنٍ لَهَا صَغِيرٍ لَمْ يَأْكُلْ الطَّعَامَ إِلَى رَسُولِ اللهِ ﷺ فَأَجْلَسَهُ رَسُولُ اللهِ ﷺ فِي حَجْرِهِ فَبَالَ عَلَى ثَوْبِهِ فَدَعَا بِمَاءٍ فَنَضَحَهُ وَلَمْ يَغْسِلْهُ رواه البخاري برقم ٢١٦**

140. நூல்: நசாயி, ஹதீஸ் எண்: 336

141. அறிவிப்பாளர்: அலி இப்னு அபீ தாலிப் ﵁, நூல்: அபூ தாவூத், எண்: 322

உம்மு கைஸ் பின்த் மிஹ்ஸன் ﵂ கூறுகிறார்: அது வரை உணவு சாப்பிடாத ஒரு சிறு ஆண் குழந்தையை ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களிடம் கொண்டுவந்தார். ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் அந்த குழந்தையை தனது மடியில் அமரவைத்தார்கள். அந்த குழந்தை நபி ﷺ ஆடையில் சிறுநீர் கழித்துவிட்டது. நபி ﷺ அவர்கள் தண்ணீரை வரவழைத்து அதன் மீது தெளித்தார்கள். அதை கழுவவில்லை.[142]

5) எதன் மாமிசத்தை சாப்பிடுவது நமக்கு அனுமதிக்கப்பட்டுள்ளதோ அந்த பிராணி இறந்துவிட்டால் அதன் தோலை பதனிடுவதால் அந்த தோல் சுத்தமாகிவிடும்.

ஆதாரம்:

**عَنِ ابْنِ عَبَّاسٍ ﵄ قَالَ سَمِعْتُ رَسُولَ اللّٰهِ ﷺ يَقُولُ أَيُّمَا إِهَابٍ دُبِغَ فَقَدْ طَهُرَ رواه ابن ماجة برقم ٣٥٩٩**

இப்னு அப்பாஸ் ﵄ அறிவிக்கின்றார்கள்: (சாப்பிடும்படியான கால்நடைகளின்) தோல் பதனிடப்பட்டு விட்டால் திட்டமாக அது சுத்தமாகிவிடும்.[143]

6) ஹைழ் உடைய இரத்தத்தை ஆடையில் இருந்து சுரண்டிவிட்டு தண்ணீரால் கழுவ வேண்டும். பிறகு அந்த ஆடையில் தொழலாம்.

ஆதாரம்:

**عَنْ أَسْمَاءَ ﵂ قَالَتْ جَاءَتْ امْرَأَةٌ النَّبِيَّ ﷺ فَقَالَتْ أَرَأَيْتَ إِحْدَانَا تَحِيضُ فِي الثَّوْبِ كَيْفَ تَصْنَعُ قَالَ تَحُتُّهُ ثُمَّ تَقْرُصُهُ بِالْمَاءِ وَتَنْضَحُهُ وَتُصَلِّي فِيهِ رواه البخاري برقم ٢٢٠**

அஸ்மா ﵂ அறிவிக்கின்றார்கள்: நபி ﷺ அவர்களிடம் ஒரு பெண்

142. நூல்: புகாரி, எண்: 216

143. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ﵄, நூல்: இப்னு மாஜா, எண்: 3599.

வந்தார். எங்களில் ஒருத்திக்கு ஆடையில் ஹைழ் வந்து விடுகிறது. (-ஹைழ் உடைய இரத்தம் ஆடையில் பட்டு விடுகிறது) அவள் என்ன செய்ய வேண்டும்? என்று அறிவியுங்கள் என அவர் கேட்டார். நபி ﷺ கூறினார்கள்: "அதை சுரண்ட வேண்டும், பிறகு, தண்ணீரால் அதை போக்க வேண்டும், அதன் மீது தண்ணீர் தெளிக்க வேண்டும், (பிறகு) அவர் அதில் தொழலாம்."[144]

முஸ்லிம் தனது உடல், இடம், தொழுகையில் அணிகின்ற ஆடை என அனைத்திலும் சுத்தத்தைப் பேண வேண்டும்.

---------------------



144. நூல்: புகாரி, எண்: 220

## حيض - ஹைழ் - மாதவிடாய்,
## نفاس - நிஃபாஸ் - பிரசவ உதிரப்போக்கு

அகராதியில் **حيض** - ஹைழ் - என்றால் ஓடுதல், வழிதல் என்று பொருள்.

மார்க்கத்தில் ஹைழ் என்றால் ஒரு பெண் ஆரோக்கியமாக இருக்கின்ற போது, பிரசவமில்லாத நேரத்தில் பெண்ணின் கர்ப்பப்பையிலிருந்து குறிப்பிட்ட சில நாள்கள், அல்லது சில மணி நேரங்கள் வெளி வரக்கூடிய இயற்கையான இரத்தத்திற்கு சொல்லப்படும்.

**نفاس** - நிஃபாஸ் என்றால் ஒரு பெண்ணுக்கு அவளது பிரசவத்திற்குப் பின்னர் வெளி வரக்கூடிய இரத்தமாகும்.

இந்த பாடத்தில் பல சட்ட விளக்கங்கள் உள்ளன.

**முதல் சட்ட விளக்கம்**

## ஹைழ் உடைய ஆரம்பமும் முடிவும்

ஒரு பெண்ணுக்கு ஒன்பது வயதை அடைவதற்கு முன்னர் ஹைழ் வராது. அப்படி வந்ததாக உறுதியான ஆதாரம் ஏதும் இதுநாள் வரை இல்லை.

ஆதாரம்:

ஆயிஷா ﵂ கூறுகிறார்கள்:

إِذَا بَلَغَتْ الْجَارِيَةُ تِسْعَ سِنِينَ فَهِيَ امْرَأَةٌ

பெண் பிள்ளை ஒன்பது வயதை அடைந்துவிட்டால் அவள் ஒரு பெண்ணாக ஆகிவிடுகிறாள்.[145]

அறிஞர்களின் சரியான கூற்றுப்படி ஒரு பெண்ணுக்கு ஹைழ் நிற்கின்ற வயது ஐம்பதாகும்.

ஆதாரம்:

ஆயிஷா ﵂ கூறுகிறார்கள்:

إِذَا بَلَغَتِ الْـمَرْأَةُ خَمْسِينَ سَنَةً خَرَجَتْ مِنْ حَدِّ الْحَيْضِ

பெண் ஐம்பது வயதை அடைந்துவிட்டால் ஹைழ் உடைய கால அளவை விட்டு அவள் வெளியேறி விடுகிறாள்.[146]

**இரண்டாவது சட்ட விளக்கம்**

## ஹைழ் உடைய குறைந்த கால அளவு, அதிக கால அளவு

அறிஞர்களின் சரியான கூற்றுப்படி ஹைழின் குறைந்த கால அளவிற்கும் அதிகப்படியான கால அளவிற்கும் நிர்ணயிக்கப்பட்ட குறிப்பிட்ட ஒரு கால அளவு இல்லை. இது விஷயத்தில் பெண்களின் வழமையைத்தான் அளவுகோளாக எடுக்கப்படுகிறது.

**மூன்றாவது சட்ட விளக்கம்**

## பெரும்பாலும் ஹைழின் கால அளவு

பெரும்பாலும் ஒரு பெண்ணுக்கு ஆறு அல்லது ஏழு நாள்கள் ஹைழ் வருவது வழக்கம்.

ஆதாரம்:

நபி ﷺ அவர்கள் "ஹம்னா பின்த் ஜஹ்ஷ்" க்கு ﵂ கூறினார்கள்:

145. நூல்: திர்மிதி, எண்: 1027

146. நூல்: الكافي في فقه الإمام أحمد அல்கா∴பி ∴பீ ∴பிக்ஹில் இமாம் அஹ்மத் ﵀, ஆசிரியர்: இப்னு குதாமா ﵀, இறப்பு: ஹிஜ்ரி 620.

فَتَحَيَّضِي سِتَّةَ أَيَّامٍ أَوْ سَبْعَةَ أَيَّامٍ فِي عِلْمِ اللهِ ثُمَّ اغْتَسِلِي حَتَّى إِذَا رَأَيْتِ أَنَّكِ قَدْ طَهُرْتِ وَاسْتَنْقَأْتِ فَصَلِّي ثَلَاثًا وَعِشْرِينَ لَيْلَةً أَوْ أَرْبَعًا وَعِشْرِينَ لَيْلَةً وَأَيَّامَهَا وَصُومِي فَإِنَّ ذٰلِكَ يَجْزِيكِ وَكَذٰلِكَ فَافْعَلِي فِي كُلِّ شَهْرٍ كَمَا تَحِيضُ النِّسَاءُ وَكَمَا يَطْهُرْنَ مِيقَاتُ حَيْضِهِنَّ وَطُهْرِهِنَّ. رواه أبو داود برقم ٢٤٨

நீ ஆறு அல்லது ஏழு நாள்கள் (வருகின்ற இரத்தத்தை) அல்லாஹ்வின் விதிப்படி ஹைழாக எடுத்துக் கொள்! பிறகு, குளித்து விடு! இறுதியாக, நீ சுத்தமாகிவிட்டாய், உனக்கு இரத்தம் நின்றுவிட்டது என்று நீ கருதும் போது இருபத்தி மூன்று அல்லது இருபத்தி நான்கு நாள்கள் (இரவு, பகல் உள்பட) நீ தொழுது கொள்! இன்னும் நோன்பு வைத்துக் கொள்! நிச்சயமாக இது உனக்கு போதுமாகும். இவ்வாறே, நீ ஒவ்வொரு மாதமும் செய், பெண்களுக்கு (பெரும்பாலும்) ஹைழ் வருவதைப் போன்று, அவர்கள் சுத்தமாகுவதைப் போன்று (நீயும் உனது ஹைழ் மற்றும் சுத்த காலத்தை முடிவு செய்து கொள்)! இதுதான் பெண்களின் ஹைழ் மற்றும் சுத்தத்தின் நிர்ணயிக்கப்பட்ட கால அளவாகும்.[147]

**நான்காவது சட்ட விளக்கம்**

## ஹைழ், நிஃபாஸ் உள்ள பெண்கள் செய்யக்கூடாதவை

ஒரு பெண்ணுக்கு ஹைழ் (-மாதவிடாய்), அல்லது நிஃபாஸ் (-பிரசவ உதிரம்) வந்துவிட்டால் அவள் செய்யக்கூடாதவை பின்வருமாறு:

**1) கணவன்-மனைவி உடலுறவு வைப்பது கூடாது.**

அல்லாஹ் கூறுகின்றான்:

فَاعْتَزِلُوا النِّسَاءَ فِي الْمَحِيضِ وَلَا تَقْرَبُوهُنَّ حَتَّى يَطْهُرْنَ

ஹைழ் உடைய காலத்தில் நீங்கள் பெண்களை விட்டு விலகி இருங்கள். அவர்கள் சுத்தமடைகின்ற வரை அவர்களிடம் உறவு கொள்ளாதீர்கள்! (அல்குர்ஆன் 2:222)

147. அறிவிப்பாளர்: ஹம்னா பின்த் ஜஹ்ஷ் ﵂, நூல்: அபூ தாவூத், எண்: 248

இந்த வசனம் இறங்கிய பின்னர் நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:

اصْنَعُوا كُلَّ شَيْءٍ إِلَّا النِّكَاحَ

நீங்கள் (பெண்ணுறுப்பில்) உடலுறவு வைப்பதைத் தவிர எல்லாவற்றையும் செய்யலாம்.[148]

**2) ஹைழ் உடைய காலத்தில் தலாக் சொல்வது கூடாது.**

ஆதாரம்:

அல்லாஹ் கூறுகின்றான்:

فَطَلِّقُوهُنَّ لِعِدَّتِهِنَّ

நீங்கள் அந்த பெண்களை அவர்களின் சுத்த காலத்தில் தலாக் செய்யுங்கள் (நீங்கள் தலாக் செய்வதாக இருந்தால்)! (அல்குர்ஆன் 65:1)

உமர் ؓ அவர்களின் மகன் அப்துல்லாஹ் ؓ தனது மனைவி ஹைழுடைய நேரத்தில் இருக்கும் போது அவரை தலாக் செய்தார். உமர் அவர்கள் அது பற்றி நபி ﷺ அவர்களிடம் கேட்டார்கள். அதற்கு நபி ﷺ அவர்கள் உமர் ؓ அவர்களிடம் கூறினார்கள்:

مُرْهُ فَلْيُرَاجِعْهَا ثُمَّ لِيُمْسِكْهَا حَتَّى تَطْهُرَ ثُمَّ تَحِيضَ ثُمَّ تَطْهُرَ ثُمَّ إِنْ شَاءَ أَمْسَكَ بَعْدُ وَإِنْ شَاءَ طَلَّقَ قَبْلَ أَنْ يَمَسَّ فَتِلْكَ الْعِدَّةُ الَّتِي أَمَرَ اللهُ أَنْ تُطَلَّقَ لَهَا النِّسَاءُ رواه البخاري برقم ٤٨٥٠

நீர் அவருக்கு கட்டளையிடு, அவர் அவளை மீட்டுக் கொள்ளட்டும்! பிறகு (தனது திருமண உறவில்) அவளை வைத்துக் கொள்ளட்டும்! இறுதியாக, அவள் சுத்தம் அடைந்து, பிறகு, மாதவிடாய் வந்து, பிறகு, அவள் சுத்தமாகட்டும். பிறகு, அவர் நாடினால் இதற்கு பின்னர் (அவளை திருமண உறவிலேயே) வைத்துக் கொள்ளட்டும்! அவர் (தலாக் செய்ய) நாடினால் அவளுடன் உடலுறவு கொள்வதற்கு முன்னர் (அவளை)

148. அறிவிப்பாளர்: அனஸ் ؓ, நூல்: முஸ்லிம், எண்: 455

தலாக் செய்யட்டும். இதுதான் பெண்களை தலாக் செய்வதற்கு அல்லாஹ் ஏவிய நாள் கணக்காகும்.[149]

### 3) தொழுகை.

மாதவிடாய் வந்த பெண் மாதவிடாய் நின்று குளித்து சுத்தமாகின்ற வரை தொழுகையை விட்டு விட வேண்டும்.

ஆதாரம்:

قَالَ إِذَا أَقْبَلَتْ الْحَيْضَةُ فَدَعِي الصَّلَاةَ وَإِذَا أَدْبَرَتْ فَاغْتَسِلِي وَصَلِّي رواه أبو داود برقم ٢٤٦

அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் ﵁ அவர்களின் மனைவி உம்மு ஹபீபா பின்த் ஜஹ்ஷ் க்கு ﵂ நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: ஹைழ் வந்துவிட்டால் நீ தொழுகையை விட்டு விடு! ஹைழ் முடிந்துவிட்டால் நீ குளித்து, தொழுது கொள்![150]

ஹைழ் - மாதவிடாய் வந்துவிட்ட பெண் தொழுகையை தவிர்க்க வேண்டும் என்பதற்கு இன்னும் ஏராளமான நபிமொழிகள் உள்ளன.

### 4) நோன்பு

மாதவிடாய் வந்த பெண் ஃபர்ழான, நஃபிலான எந்த நோன்பையும் நோற்பது கூடாது. மாதவிடாய் நின்ற பின்னர்தான் அவள் நோன்பு வைக்க வேண்டும். ஹைழ் நின்றுவிட்ட பெண் உடனடியாக குளிக்க வேண்டும் என்று கட்டாயமில்லை. தொழுகையின் நேரம்வரை தாமதப்படுத்தி குளிப்பதில் தவறு ஏதும் இல்லை.

பெண்களின் அறிவு மற்றும் மார்க்கத்தின் குறைவைப் பற்றி நபி ﷺ அவர்கள் கூறியபோது,

أَلَيْسَ إِذَا حَاضَتْ لَمْ تُصَلِّ وَلَمْ تَصُمْ

149. அறிவிப்பாளர்: இப்னு உமர் ﵄, நூல்: புகாரி, எண்: 4850
150. அறிவிப்பாளர்: ஆயிஷா ﵂, நூல்: அபூ தாவூத், எண்: 246

அவளுக்கு மாதவிடாய் வந்துவிட்டால் அவள் தொழுவதில்லையே? நோன்பு வைப்பதில்லையே? என்று கூறினார்கள்.[151]

இந்த ஹதீஸை இமாம் புகாரி ﷬ அவர்கள் மாதவிடாய் வந்த பெண் நோன்பை விட வேண்டும் என்ற பாடத்தில் பதிவு செய்துள்ளார்கள்.

**5) தவாஃப்**

மாதவிடாய் வந்த பெண் தவாஃப் செய்வதும் தடுக்கப்பட்டதாகும்.

ஆதாரம்:

அன்னை ஆயிஷா ؓ அவர்களுக்கு இஹ்ராமுக்குப் பின்னர் உம்ரா செய்வதற்கு முன்னர் மாதவிடாய் வந்துவிட்டது. அப்போது நபி ﷺ அவர்கள் ஆயிஷா ؓ அவர்களுக்கு கூறினார்கள்:

فَافْعَلِي مَا يَفْعَلُ الْحَاجُّ غَيْرَ أَنْ لَا تَطُوفِي بِالْبَيْتِ حَتَّى تَطْهُرِي

ஹாஜி செய்கின்ற எல்லா அமல்களையும் நீ செய்! ஆனால், கஅபாவை மட்டும் நீ தவாஃப் செய்யாதே, நீ சுத்தமடைகின்ற வரை.[152]

**6) குர்ஆன் ஓதுவது.**

மாதவிடாய் உள்ள பெண் குர்ஆன் ஓதுவது கூடாது. இது நபித்தோழர்கள், தாபியீன் பலருடைய கருத்தாகும்.

ஆனால், அவளுக்கு குர்ஆன் ஓத வேண்டிய அவசியத் தேவை இருந்தால், உதாரணமாக குர்ஆன் மனனம் செய்த பின்னர் மறந்துவிடாமல் இருப்பதற்காக அல்லது ஆசிரியராக இருக்கும் பெண்

151. அறிவிப்பாளர்: அபூ சயீது அல்குத்ரி ؓ, நூல்: புகாரி, எண்: 293
152. அறிவிப்பாளர்: ஆயிஷா ؓ, நூல்: புகாரி, எண்: 294

குர்ஆனை கற்பிக்க வேண்டிய தேவை உள்ளவராக இருந்தால், அவள் குர்ஆன் ஓதுவதில் தவறு இல்லை; இப்படி அவசியத் தேவை இல்லையென்றால் அவள் குர்ஆன் ஓதுவதை தவிர்க்க வேண்டும் என்று சில அறிஞர்கள் கூறுகிறார்கள்.[153]

## 7) குர்ஆனை தொடுவது கூடாது.[154]

---

153. **குறிப்பு:** ஹைழ் உள்ள பெண் குர்ஆனை தொட்டு ஓதுவதிலும், அல்லது மனனமாக ஓதுவதிலும் தவறு இல்லை என்பதுதான் மிக ஆதாரப்பூர்வமான கருத்தாகும்.

காரணம்:

அ) ஹைழ் உள்ள பெண் குர்ஆன் ஓதுவதை தவிர்க்க வேண்டும் என்று வருகின்ற நபிமொழிகளில் பலவீனம் உள்ளது. இதை ஹதீஸ் கலை அறிஞர்கள் உறுதிபடுத்தி இருக்கின்றார்கள்.

ஆ) காலை, மாலை, மற்றும் இரவில் ஓத வேண்டிய துஆக்களில் ஆயத்துல் குர்ஸி, ஃபலக், நாஸ், இக்லாஸ், போன்ற சூராக்களையும் ஆமனர் ரசூல் வசனங்களையும் ஓத வேண்டும் என்று நபி ﷺ அவர்கள் வழிகாட்டி இருக்கின்றார்கள். அவற்றில் எதிலும் "ஹைழ் உள்ள பெண், நிஃபாஸ் உள்ள பெண் இவற்றை ஓதக் கூடாது" என்று நபி ﷺ அவர்கள் தடை செய்யவில்லை. ஆகவே, இந்த சூராக்களையும் வசனங்களையும் ஓதுவது கூடும் என்றால் மொத்த குர்ஆனையும் ஓதுவதும் கூடும் என்று ஆகிவிடுகின்றது. ஏனெனில் குர்ஆனில் ஒரு வசனமும் ஒரு சூராவும் ஒன்றுதான் மொத்தக் குர்ஆனும் ஒன்றுதான்.

இ) குர்ஆன் வசனங்கள் எழுதிய கடிதங்களை நபி ﷺ அவர்கள் காஃபிர் (-நிராகரிப்பாளரான), முஷ்ரிக் (இணைவைப்பாளர்களான) மன்னர்களுக்கு எழுதி அனுப்பினார்கள். அவர்கள் அந்த கடிதங்களை படித்தார்கள். அந்த கடிதங்களைத் தொடாமல் அவற்றைப் படிக்க முடியாது. காஃபிர்களும் முஷ்ரிக்களும் குர்ஆன் வசனங்கள் எழுதப்பட்ட கடிதங்களை தொடுவதும் படிப்பதும் கூடும் என்றால் அவர்களை விடவா முஸ்லிமான ஹைழ் உள்ள பெண் அசுத்தமாகி விட்டாள் என்று இமாம் புகாரி ﵀ தனது நூலில் கேள்வி எழுப்புகிறார்கள்! ஸஹாபிய பெண்களில் குர்ஆனை மனனம் செய்த பலர் இருந்ததை நாம் பார்க்கிறோம். அவர்களில் பலர் கல்வி போதிப்பவர்களாகவும் இருந்தார்கள். ஹதீஸ்களையும் மார்க்கக் கல்வியையும் போதிக்கும்போது கண்டிப்பாக குர்ஆன் வசனங்களை கூறித்தான் ஆக வேண்டும். ஓதக் கூடாது என்ற ஹதீஸை ஏற்றால் யாரும் ஓதக் கூடாது என்று வரும். ஆசிரியைகளை மட்டும் அந்த சட்டத்திலிருந்து நீக்குவது எந்த ஆதாரத்தின் படி என்ற கேள்வி வரும்! அவசியம், நிர்ப்பந்தம் என்று கூறினால் அது போன்றுதான் ஒவ்வொரு நாளும் முஸ்லிம்கள் எல்லோரும் குர்ஆன் ஓதுவது, காலை மாலை துஆக்களில் உள்ள சூராக்களையும் வசனங்களையும் ஓதுவது அவசியமாகும். ஆகவே, குர்ஆன் ஓதுவதை மட்டும் ஹைழ் உள்ள பெண் தவிர்க்க வேண்டும் என்று எப்படி சொல்ல முடியும்?!

ஈ) ஹைழ் உடைய காலத்தில் பெண்கள் குர்ஆன் ஓதக் கூடாது என்றால் பெண்கள் குர்ஆனை மனனம் செய்வதும் மனனம் செய்ததை ஞாபகத்தில் வைப்பதும் முடியாத ஒன்றாக ஆகிவிடும். பெண்களுக்கும் குர்ஆனுக்கும் எவ்வித தொடர்பும் இல்லாமல் ஆகிவிடும்.

154. இந்த ஆதாரத்திற்கான பதில் முன்னர் சென்றுவிட்டது.

ஆதாரம்:

அல்லாஹ் கூறுகின்றான்:

لَا يَمَسُّهُ إِلَّا الْمُطَهَّرُونَ (٧٩)

இதை (-குர்ஆனை) பரிசுத்தமானவர்களைத் தவிர (வேறு யாரும்) தொட மாட்டார்கள். (அல்குர்ஆன் 56:79)

8) பள்ளிக்கு செல்வதும் பள்ளியில் தங்குவதும் கூடாது.

ஆதாரம்:

நபி ﷺ கூறினார்கள்:

فَإِنِّي لَا أُحِلُّ الْمَسْجِدَ لِحَائِضٍ وَلَا جُنُبٍ

நிச்சயமாக ஹைழ் - மாதவிடாய் உள்ள பெண்ணுக்கும் ஜனாபத் - பெருந்தொடக்கு உள்ளவருக்கும் நான் மஸ்ஜிதை ஆகுமாக்க மாட்டேன்.[155]

மாதவிடாய் உள்ளவள் பள்ளிக்குள் செல்வது கூடாது என்பதற்கு மேலும் ஓர் ஆதாரம்:

நபி ﷺ அவர்கள் பள்ளியில் இருந்து கொண்டு தனது தலையை தனது வீட்டுக்குள் வைப்பார்கள். ஆயிஷா அவர்கள் நபி ﷺ அவர்களின் தலையை சீவி விடுவார்கள். இந்த செய்தியை இமாம் புகாரி ؒ அவர்கள் ஆயிஷா ؓ அவர்கள் கூறியதாக 287 எண் ஹதீஸில்

155. அறிவிப்பாளர்: ஆயிஷா ؓ, நூல்: அபூ தாவூத், எண்: 201. இந்த ஹதீஸ் பலவீனமானதாகும். ஏனெனில், இதன் அறிவிப்பாளர் வரிசையில் **جسرة بنت دجاجة** என்ற ஒரு பெண் இடம் பெறுகிறார். இவரிடம் பல ஆச்சரியமான செய்திகள் உள்ளன என்று இவரைப் பற்றி இமாம் புகாரி ؒ கூறுகிறார்கள்.

இமாம் பைஹகி ؒ, இமாம் இப்னு ஹஸ்ம் ؒ, இன்னும் பல அறிஞர்கள் இந்த ஹதீஸை பலவீனப்படுத்தியுள்ளனர்.

இவ்வாறு இன்னும் பல காரணங்களை விரிவாக எடுத்துக்கூறி இந்த ஹதீஸை ஆதாரமாக எடுக்க முடியாத அளவிற்கு பலவீனமானது என்று ஷைக் அல்பானி அவர்கள் கூறுகிறார்கள்.

பார்க்க நூல்: ளஈஃப் சுனன் அபீ தாவூத். பாடம் 93, ஜனாபத் உள்ளவர் மஸ்ஜிதுக்குள் நுழைவது.

பதிவு செய்கிறார்கள். இந்த ஹதீஸில், ஹைழ் உள்ள பெண் பள்ளிக்குள் செல்ல மாட்டாள் என்பதற்கு ஆதாரம் உள்ளதாக ஹாஃபிள் இப்னு ஹஜர் கூறுகிறார்கள்.[156]

மேலும், ஹைழ் உள்ள பெண் பள்ளிக்குள்ளாக கடந்து செல்வதால் பள்ளியில் ஹைழ் உடைய இரத்தம் சிந்திவிடும் என்று பயந்தால் பள்ளிக்குள்ளாக கடந்து செல்வதும் கூடாது. பள்ளியில் அசுத்தம் பட்டு விடாது என்று உறுதியாக தெரிந்தால் பள்ளியில் நுழைந்து செல்வதில் தவறு இல்லை.

**ஐந்தாவது சட்ட விளக்கம்**

## ஹைழ் வருவதால் அவசியமாகி விடுகின்ற சட்டங்கள்

**1) ஹைழ் - மாதவிடாய் வந்து நின்றவுடன் குளிப்பு அவசியமாகி விடுகின்றது.**

ஆதாரம்:

**عَنْ عَائِشَةَ ﵂ قَالَتْ قَالَ النَّبِيُّ ﷺ إِذَا أَقْبَلَتْ الْحَيْضَةُ فَدَعِي الصَّلَاةَ وَإِذَا أَدْبَرَتْ فَاغْسِلِي عَنْكِ الدَّمَ وَصَلِّي البخاري برقم ٣١٩**

நபி ﷺ கூறினார்கள்: மாதவிடாய் வந்துவிட்டால் நீ தொழுகையை விட்டு விடு! அது முடிந்துவிட்டால் உன்னை விட்டும் இரத்தத்தை கழுவிவிட்டு (-குளித்துவிட்டு) தொழுது கொள்![157]

156. ஹாபிழ் இப்னு ஹஜர் அவர்களின் இந்த ஆய்வு ஏற்கத்தக்கதல்ல. ஏனெனில், இந்த ஹதீஸில் எல்லா நிலையிலும் அதாவது, ஹைழ் உள்ள நிலையிலும் சுத்தமான நிலையிலும் மனைவி கணவனுக்கு பணிவிடை செய்யலாம் என்பதற்குத்தான் ஆதாரம் உள்ளது. மனைவி கணவனுக்கு பள்ளிக்குள் வைத்து தலைவாருவது என்பது ஓர் அழகான செயல் அல்ல. இன்னும் அது மஸ்ஜிதில் செய்யப்படுகின்ற செயலும் அல்ல. மஸ்ஜித் அதற்காக கட்டப்பட்டதும் அல்ல. எனவேதான், இஃதிகாஃப் இருந்த நபி ﷺ அவர்கள் தனது தலையை மட்டும் வீட்டுக்குள் நுழைத்தார்கள். நபி ﷺ அவர்களுக்கு தலைவார வேண்டிய அவசியம் இருந்தது. நபி ﷺ இஃதிகாஃபில் இருந்து கொண்டு இந்த தேவைக்காக வீட்டுக்குள் செல்வது சரியல்ல என்பதால் தலையை மட்டும் வீட்டுக்குள் நுழைத்தார்கள். அல்லாஹ் மிக அறிந்தவன்.

157. அறிவிப்பாளர்: ஆயிஷா ﵂, நூல்: புகாரி, எண்: 319

இந்த ஹதீஸின் மற்ற அறிவிப்புகளில்,

وَإِذَا أَدْبَرَتْ فَاغْتَسِلِي وَصَلِّي

ஹைழ் முடிந்துவிட்டால் நீ குளித்துக் கொள்! இன்னும் தொழுது கொள்! என்று வந்துள்ளது.[158]

ஆதாரம் 2:

عَنْ عَائِشَةَ ﵂ أَنَّ فَاطِمَةَ بِنْتَ أَبِي حُبَيْشٍ سَأَلَتْ النَّبِيَّ ﷺ قَالَتْ إِنِّي أُسْتَحَاضُ فَلَا أَطْهُرُ أَفَأَدَعُ الصَّلَاةَ فَقَالَ لَا إِنَّ ذَلِكِ عِرْقٌ وَلَكِنْ دَعِي الصَّلَاةَ قَدْرَ الْأَيَّامِ الَّتِي كُنْتِ تَحِيضِينَ فِيهَا ثُمَّ اغْتَسِلِي وَصَلِّي رواه البخاري برقم ٣١٤

ஃபாத்திமா பின்த் அபீ ஹுபைஷ் ﵂ அவர்கள், நபி ﷺ அவர்களிடம் கேட்டார்கள்: (ஹைழ் நின்ற பின்னரும்) எனக்கு அதிகம் இரத்தம் வெளியேறுகிறது. நான் சுத்தம் அடைவதில்லை. ஆகவே, நான் தொழுகையை விட்டு விடலாமா? என்று கேட்டார்கள். நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: இல்லை. இது ஒரு நோயாகும். என்றாலும் உனக்கு எப்போதும் (வழமையாக) ஹைழ் வருகின்ற நாள்கள் அளவுக்கு தொழுகையை விட்டுவிடு! பிறகு, குளித்துக் கொள்! இன்னும் தொழுது கொள்![159]

**2) ஹைழ் - மாதவிடாய் வருவதால் ஒரு பெண் பருவ வயதை அடைந்து விட்டாள் என்று உறுதியாகி விடுகிறது. பருவமடைவதின் மூலம்தான் மார்க்க சட்டங்கள் அவள் மீது கடமையாகின்றன.**

ஆதாரம்:

عَنْ عَائِشَةَ ﵂ عَنْ النَّبِيِّ ﷺ قَالَ لَا يَقْبَلُ اللَّهُ صَلَاةَ حَائِضٍ إِلَّا بِخِمَارٍ. رواه أبو داود برقم ٥٤٦

158. நூல்: அபூ தாவூத், எண்: 246 | நூல்: நசாயி, எண்: 348

159. நூல்: புகாரி, எண்: 314

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: வயது வந்த பெண்ணின் தொழுகையை அல்லாஹ் ஏற்கமாட்டான், தலைமறைப்பு இருந்தாலே தவிர.[160]

**கருத்து:** இந்த ஹதீஸில் வயது வந்த பெண் என்பதற்கு, ஹாயிழ் - **حائض** என்ற பதத்தை நபி ﷺ அவர்கள் பயன்படுத்தியுள்ளார்கள். இதிலிருந்து ஹைழ் வருவதின் மூலம்தான் ஒரு பெண் பருவ வயதை அடைகிறாள்; பிறகு, அவள் மீது மார்க்க சட்டங்கள் கடமையாகின்றன என்பதை நாம் அறிய முடிகிறது.

**3) ஹைழ் வரக்கூடிய பெண்களுக்கு ஹைழை வைத்துத்தான் عدة –இத்தா கணக்கிடப்படுகின்றது. தலாக் விடப்பட்ட பெண், குல்ஆ வாங்கிய பெண் ஆகியோரின் இத்தா ஹைழ் - மாதவிடாயை வைத்துதான் கணக்கிடப்படுகின்றது.**

ஆதாரம்:

அல்லாஹ் கூறுகின்றான்:

وَالْمُطَلَّقَاتُ يَتَرَبَّصْنَ بِأَنْفُسِهِنَّ ثَلَاثَةَ قُرُوءٍ

தலாக் விடப்பட்ட பெண்கள் தங்களுக்கு மூன்று மாதவிடாய் காலங்கள் எதிர்பார்ப்பார்கள். (அல்குர்ஆன் 2:228)

இங்கு கூறப்பட்டுள்ள **قُرُوء** – குரூஃ என்பது **قرء** குர்உ என்பதன் பன்மையாகும். குர்உ என்றால் ஹைழ் - மாதவிடாய் என்று பொருள்.

**4) ஹைழ் - மாதவிடாய் வருவதின் மூலம் பெண் தனது கர்ப்பத்தில் கருவை சுமக்கவில்லை என்பது உறுதியாகிறது.**

**எச்சரிக்கை:** "ஒரு பெண் சூரியன் மறைவதற்கு முன்னர் ஹைழ் அல்லது நிஃபாஸிலிருந்து சுத்தமாகிவிட்டால் அவள் ளுஹ்ர் மற்றும் அஸ்ர் தொழுகைகளை தொழ வேண்டும்; ஒரு பெண் காலை விடிவதற்கு முன்னர் சுத்தமானால் அவள் மக்ரிப், இஷா, ஃபஜ்ர்

160. அறிவிப்பாளர்: ஆயிஷா ﵂, நூல்: அபூ தாவூத், எண்: 546

ஆகிய தொழுகைகளை தொழ வேண்டும்" என்று மாலிக், ஷாஃபியி, அஹ்மது ﷺ ஆகிய இமாம்களும் இன்னும் அதிகமான அறிஞர்களும் கூறுகிறார்கள்.

**ஆறாவது சட்ட விளக்கம்**

## நிஃபாஸ் - பிரசவ உதிரத்தின் குறைந்த கால அளவு, இன்னும் அதிக கால அளவு

நிஃபாஸ் உடைய குறைந்த காலத்திற்கு ஒரு குறிப்பிட்ட நிர்ணயம் ஏதும் இல்லை. இது விஷயமாக மார்க்கத்தில் வரையறை ஏதும் வரவில்லை. பெண்களின் வழமையிலும் இதற்கு ஒரு கால அளவு நிர்ணயிக்க முடியாத நிலைமை உள்ளது. நிஃபாஸ் உடைய அதிக கால அளவு நாற்பது நாள்கள் என்று அறிஞர்கள் கூறுகிறார்கள்.

இமாம் திர்மிதி ﷺ கூறுகிறார்கள்: "பிரசவ உதிரம் வருகின்ற பெண் நாற்பது நாள்கள் தொழுகையை விடுவாள். ஆனால், அதற்கு முன்பாகவே அவள், தான் சுத்தமாகிவிட்டதைப் பார்த்தாலே தவிர. அப்படி சுத்தமாகிவிட்டால் அவள் குளித்து தொழுகையை ஆரம்பிப்பாள்" என்று நபித்தோழர்களில் உள்ள கல்விமான்கள் ஒருமித்து கூறுகிறார்கள்."

ஆதாரம்:

عَنْ أُمِّ سَلَمَةَ ﵂ قَالَتْ كَانَتْ النُّفَسَاءُ عَلَى عَهْدِ رَسُولِ اللهِ ﷺ تَجْلِسُ أَرْبَعِينَ يَوْمًا رواه ابن ماجة برقم ٦٤٠

உம்மு சலமா ﵂ கூறுகிறார்கள்: நபி ﷺ அவர்களின் காலத்தில் பிரசவ உதிரம் வருகின்ற பெண்கள் நாற்பது நாள்கள் அமர்ந்து இருப்பார்கள்.[161] (அதாவது, தொழுகை, நோன்பை நிறைவேற்றாமல் இருப்பார்கள்.)

161. நூல்: இப்னு மாஜா, எண்: 640

**ஏழாவது சட்ட விளக்கம்**

## அதிக உதிரப்போக்குள்ள பெண்ணின் சட்டம்

இத்தகைய பெண்ணிற்கு **مستحاضة** – முஸ்தஹாழா என்றும், இப்படி அதிகமாக இரத்தம் வருவதற்கு **استحاضة** –இஸ்திஹாழா என்றும் கூறப்படும்.

ஹைழ் உடைய காலம் அல்லாத காலத்தில் வரக்கூடிய அதிகப்படியான இரத்தப்போக்கிற்கு இஸ்திஹாழா என்று கூறப்படுகிறது.

ஹைழ் உடைய இரத்தம் மற்றும் இஸ்திஹாழா உடைய இரத்தம் இந்த இரண்டிற்கும் இடையில் வேறுபட்ட பல சட்டங்கள் உள்ளன.

இஸ்திஹாழா உடைய காலத்தில் தொழுகை, நோன்பு, உடலுறவு வைப்பது ஆகிய அனைத்தும் கூடும். இஸ்திஹாழா உடைய பெண் சுத்தமாக இருக்கின்ற பெண்ணைப் போன்றுதான்.

ஆதாரம்:

**عَنْ عَائِشَةَ ﵂ أَنَّ فَاطِمَةَ بِنْتَ أَبِي حُبَيْشٍ ﵂ سَأَلَتْ النَّبِيَّ ﷺ قَالَتْ إِنِّي أُسْتَحَاضُ فَلَا أَطْهُرُ أَفَأَدَعُ الصَّلَاةَ فَقَالَ لَا إِنَّ ذَلِكِ عِرْقٌ وَلَكِنْ دَعِي الصَّلَاةَ قَدْرَ الْأَيَّامِ الَّتِي كُنْتِ تَحِيضِينَ فِيهَا ثُمَّ اغْتَسِلِي وَصَلِّي رواه البخاري برقم ٣١٤**

ஃபாத்திமா பின்த் அபீ ஹுபைஷ் ﵂ அவர்கள் நபி ﷺ அவர்களிடம் கேட்டார்கள்: “(ஹைழ் நின்ற பின்னரும்) எனக்கு அதிகம் இரத்தம் வெளியேறுகிறது. நான் சுத்தம் அடைவதில்லை. ஆகவே, நான் தொழுகையை விட்டுவிடலாமா? என்று கூறினார்கள். நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: “இல்லை. இது ஒரு நோயாகும். என்றாலும் உனக்கு எப்போதும் ஹைழ் வருகின்ற நாள்கள் அளவுக்கு தொழுகையை விட்டுவிடு! பிறகு, குளித்துக் கொள்! இன்னும் தொழுது கொள்![162]

162. நூல்: புகாரி, எண்: 314

ஆகவே, ஒரு பெண் தனக்கு வழமையாக ஹைழ் வருகின்ற கால அளவை கணக்கில் கொண்டு அந்த கால அளவு முடிந்துவிட்டால் குளித்து, சுத்தமாகி, தொழுகையை ஆரம்பித்துவிட வேண்டும்.

அதன் பின்னர் இஸ்திஹாழா வந்தால் மர்மஸ்தானத்தை மட்டும் கழுவிக் கொள்ள வேண்டும். இரத்தம் கீழே வடியாமல் இருப்பதற்கு துணி, பஞ்சு போன்றவற்றை அல்லது இன்று பயன்படுத்தப்படுகின்ற (நாப்கீன் போன்ற) நவீன சாதனங்களைப் பயன்படுத்தலாம்.

ஒவ்வொரு தொழுகையின் நேரம் வந்தவுடன் உளூ செய்து அந்த உளூவைக்கொண்டு அடுத்த தொழுகையின் நேரம் வருகின்ற வரை அவள் தொழுது கொள்ளலாம். மலம், ஜலம், காற்று பிரிதல் ஆகியவற்றைக் கொண்டு உளூ முறிந்தால் மட்டும் அவள் மீண்டும் உளூ செய்ய வேண்டும். இல்லையென்றால், இந்த இரத்தம் வெளியேறுவது உளூவை முறிக்காது.

**முஸ்தஹாழா பெண்ணுக்கு மூன்று நிலைகள் உள்ளன.**

**முதலாவது:** பெண்ணுக்கு குறிப்பிட்ட வழமை அதாவது, ஹைழ் வரக்கூடிய ஒரு குறிப்பிட்ட கால அளவு இருந்தால் அந்த வழமையின் படி தனது ஹைழ் உடைய காலத்தை முடித்து விட வேண்டும். அந்த காலத்தில் தொழுகையையும் நோன்பையும் விட்டு விட வேண்டும். வழமையான கால அளவு முடிந்துவிட்டால் குளித்து தொழுகையை ஆரம்பித்துவிட வேண்டும். அந்த காலத்திற்கு பின்னர் வருகின்ற இரத்தம் இஸ்திஹாழாவாக கருதப்படும்.

ஆதாரம்:

உம்மு ஹபீபா பின்த் ஜஹ்ஷ் தனக்கு அதிகமாக வருகின்ற இரத்தத்தைப் பற்றி நபி ﷺ அவர்களிடம் கேட்டார்கள். அவர்களுக்கு நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:

امْكُثِي قَدْرَ مَا كَانَتْ تَحْبِسُكِ حَيْضَتُكِ ثُمَّ اغْتَسِلِي وَصَلِّي

உனது ஹைழ் உன்னை எப்போதும் (தொழுகையை விட்டும்) தடுக்கின்ற

அந்தக் கால அளவு நீ (தொழாமல்) இருந்துவிடு! பிறகு, குளித்துக் கொள்! இன்னும் தொழுது கொள்![163]

**இரண்டாவது:** பெண்ணுக்கு வழமையான ஒரு கால அளவு இல்லை என்றாலும் இரத்தத்தின் தன்மை இன்னும் அதன் நிறத்தை வைத்து அவளுடைய இரண்டு இரத்தங்களையும் அதாவது, ஹைழ் உடைய இரத்தத்தையும் நிஃபாஸ் உடைய இரத்தத்தையும் தனித்தனியாக பிரித்தறிகின்ற அளவிற்கு அவற்றில் வித்தியாசம் இருக்கிறது. அப்படி இருந்தால் அதன் படி முடிவு செய்து விட வேண்டும். ஹைழ் உடைய இரத்தம் கருப்பாக அல்லது கட்டியாக அல்லது துர்நாற்றம் உடையதாக இருக்கும். இஸ்திஹாழா உடைய இரத்தம் சிவப்பாக இருக்கும். அதில் துர்நாற்றம் இருக்காது.

ஆதாரம்:

**عَنْ فَاطِمَةَ بِنْتِ أَبِي حُبَيْشٍ ﵂ أَنَّهَا كَانَتْ تُسْتَحَاضُ فَقَالَ لَهَا النَّبِيُّ ﷺ إِذَا كَانَ دَمُ الْحَيْضَةِ فَإِنَّهُ أَسْوَدُ يُعْرَفُ فَإِذَا كَانَ ذَلِكَ فَأَمْسِكِي عَنْ الصَّلَاةِ فَإِذَا كَانَ الْآخَرُ فَتَوَضَّئِي وَصَلِّي فَإِنَّمَا هُوَ عِرْقٌ رواه أبو داود برقم ٢٤٧**

ஃபாத்திமா பின்த் அபீ ஹுபைஷ் ﵂ அறிவிக்கின்றார். இவர்களுக்கு இஸ்திஹாழா வந்து கொண்டிருந்தது. ஆகவே, இவர்களுக்கு நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: “ஹைழ் உடைய இரத்தமாக இருந்தால் அது கருப்பாக இருக்கும். அதை அறிய முடியும். ஆகவே, அதுவாக இருந்தால் நீ தொழுவதை நிறுத்திக் கொள்! வேறு இரத்தமாக இருந்தால் நீ உளூ செய்து கொள்! இன்னும் தொழுது கொள்! அதுவெல்லாம் ஒரு நோய்தான்.[164]

**மூன்றாவது:** ஒரு பெண்ணுக்கு குறிப்பிட்ட வழமையும் இல்லை. இரத்தத்தின் தன்மையை வைத்து வித்தியாசப்படுத்தவும் முடியவில்லை. இந்த நிலை ஒரு பெண்ணுக்கு இருந்தால் அவள் ஆறு அல்லது ஏழு நாள்களை ஹைழ் உடைய காலமாக எடுத்துக் கொள்ள வேண்டும்.

163. அறிவிப்பாளர்: ஆயிஷா ﵂, நூல்: முஸ்லிம், எண்: 505

164. நூல்: அபூ தாவூத், எண்: 247

பெரும்பாலும் பெண்களுக்கு இத்தனை நாள்கள்தான் ஹைழ் வருவது வழக்கம். ஆகவே, ஆறு அல்லது ஏழு நாள்கள் கடந்தவுடன் குளித்து தொழுகையை ஆரம்பித்துவிட வேண்டும். மற்ற நாள்களில் வருவது இஸ்திஹாழா இரத்தமாக கருதப்படும். தொழுகைக்கு முன்பு ஒரு முறை அந்த இடத்தை கழுவினால் போதுமானது.

ஆதாரம்:

நபி ﷺ அவர்கள் “ஹம்னா பின்த் ஜஹ்ஷ்” க்கு கூறினார்கள்:

**فَتَحَيَّضِي سِتَّةَ أَيَّامٍ أَوْ سَبْعَةَ أَيَّامٍ فِي عِلْمِ اللهِ ثُمَّ اغْتَسِلِي حَتَّى إِذَا رَأَيْتِ أَنَّكِ قَدْ طَهُرْتِ وَاسْتَنْقَأْتِ فَصَلِّي ثَلَاثًا وَعِشْرِينَ لَيْلَةً أَوْ أَرْبَعًا وَعِشْرِينَ لَيْلَةً وَأَيَّامَهَا وَصُومِي فَإِنَّ ذَلِكَ يَجْزِيكِ وَكَذَلِكَ فَافْعَلِي فِي كُلِّ شَهْرٍ كَمَا تَحِيضُ النِّسَاءُ وَكَمَا يَطْهُرْنَ مِيقَاتُ حَيْضِهِنَّ وَطُهْرِهِنَّ رواه أبو داود برقم ٢٤٨**

நீ ஆறு அல்லது ஏழு நாள்கள் (வருகின்ற இரத்தத்தை) அல்லாஹ்வின் விதிப்படி ஹைழாக எடுத்துக் கொள்! பிறகு, குளித்து விடு! இறுதியாக, நீ சுத்தமாகிவிட்டாய், உனக்கு இரத்தம் நின்றுவிட்டது என்று நீ கருதும்போது இருபத்தி மூன்று அல்லது இருபத்தி நான்கு நாள்கள் (இரவு, பகல் உள்பட) நீ தொழுது கொள்! இன்னும் நோன்பு வைத்துக் கொள்! நிச்சயமாக இது உனக்கு போதுமாகும். இவ்வாறே, நீ ஒவ்வொரு மாதமும் செய், பெண்களுக்கு (பெரும்பாலும்) ஹைழ் வருவதைப் போன்று, அவர்கள் சுத்தமாகுவதைப் போன்று (நீயும் உனது ஹைழ் மற்றும் சுத்த காலத்தை முடிவு செய்து கொள்)! இதுதான் பெண்களின் ஹைழ் மற்றும் சுத்தத்தின் நிர்ணயிக்கப்பட்ட கால அளவாகும்.[165]

அல்ஹம்து லில்லாஹி ரப்பில் ஆலமீன்.

முதல் அத்தியாயம் நிறைவுற்றது.

165. நூல்: அபூ தாவூத், எண்: 248

# சான்றோர் பாடசாலை




- நமது சான்றோர் வாழ்வை நம் கண் முன் நிறுத்துகிறது.
- அல்லாஹ்விற்காக வாழ்ந்தவர்களின் வரலாற்றைப் படம் பிடித்துக் காட்டுகிறது.
- குர்ஆனும் சுன்னாவும் செய்த புரட்சியில் உருவான ஒரு சமுதாயத்தை நமக்கு அடையாளப்படுத்துகிறது.
- மறுமையை மறக்காத மகான்களின் வாழ்க்கையை எதார்த்தமாக நமக்கு வருணிக்கிறது.
- ஈமானிய உணர்வுகளையும் உள்ளச்சத்தையும் உலக பற்றின்மையையும் அதிகப்படுத்தி, மறுமைக்காக வாழவேண்டும் என்ற மன உறுதியை ஏற்படுத்துகிறது.
- அவசியம் படியுங்கள்! பரப்புங்கள்!

BUY NOW
RS. 100/-

Size
14x21.5 cm
Pages
304
Softbound

**இமாம் அஹ்மது இப்னு ஹன்பல் அறிவிக்கின்ற இமாம் ஹஸன் பசரி அவர்களின் கூற்றுகள்**

Published by:

**DARUL HUDA**
QUALITY ISLAMIC BOOK PUBLISHER
# 211(102), 1st Floor, Linghi Street, Mannady, Chennai-600001.
Phone : +91-44-25247866, | darulhuda.chennai@gmail.com
Mobile : +91-98401 74121 | www.darulhuda.net